# 27. துறுமா, வார்ப்பட்டு கல்வெட்டுகள்

கரு.இராசேந்திரன், மேலப்பனையூர்

27 : 1

**இடம்** : புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் வட்டம் துறுமா. திருபாதாளீஸ்வர முடையார் கோவில் தென்புறச் சுவரிலுள்ளது.

**காலம்** : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : திருப்பதாளீஸ்வர முடையார் கோவில்... சந்திக்கும் அமுதுபடி சாத்துப்படி உள்ளிட்டவைகளுக்கும் கான நாட்டு நாடும் நகரம் ஆகிய பெருமக்கள் 18 அடிகோலால் பயிர் பார்த்து நிலை நின்ற நிலத்துக்கு நாற்கல நெல் அளப்பதற்கு உறுதியளிக்கப்பட்டதற்கு உரியது.

1. உடையார் திருப்பாதளீஸ்வரமுடைய நாயனாற்கு நாங்கள் கட்ட (ளையிட்ட) சந்திக்கு அமுதுபடி சாத்துப்படி உள்ளிட்ட வெஞ்சனங்களுக்கு பதினெட்டடி கோலால்ப் பயிர் பாத்து நிலை நின்ற (நிலத்துக்கு) நாற்கல நெல்லும் அளப்பதாகவும் துலாவிரைப்பா
2. க முக்கால் கூட்டிக் கொள்ள... தினைவரகு ஒன்று காலாக வந்த நிலம் கூட்டிக் கொள்ளவும் இப்படி சந்திராதித்தவர் செலவதாக பிடிபாடு பண்ணிக்குடுத்தோம் நாடுகளோமும், நகரங்களோமும் கிராமங்களோமும், பெரியான் சேந்த பிரானாற்கு இப்படிக்கு
3. ...ரக் கானநாட்டு வேளான் எழுத்து இவை வேளான் பொன்னாண்டான் எழுத்து. இப்படிக்கு உத்தமசோழ கான நாட்டு வேளான் எழுத்து. இவை குலோத்துங்க சோழ வல்லநாட்டு வேளான் எழுத்து. இவை இராசேந்திர சோழ துறுமா நாட்டு வேளான் எழுத்து இவை ஆனந்தக்கூத்தன் எழுத்து இவை சுந்தரப் பெருமாள் எழுத்து.
4. .... வேளார் எழுத்து. இவை கண்டப் பிள்ளை எழுத்து சுந்தர தோழன் எழுத்து இவை அரியான் உடையாநான சென்ற ‾ாமப்பேரையன் எழுதியது.

27 : 2

**இடம்** : புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் வட்டம் கூடலூர் அருகிலுள்ள நல்லூர் ஊருக்குக் கிழக்கில் சித்தூர் பாலத்திற்கு அருகிலுள்ள புதுவயலின் கருப்பர் கோவில் செய்யின் கிழக்கு வரப்பில் நடப்பட்டுள்ள கல்லிலுள்ள கல்வெட்டு.

**காலம்** : முதலாம் இராஜராஜன் கி.பி. 10 ஆம் நூற்றாண்டு

**செய்தி** : இக்கல்வெட்டினுடைய கீழ்ப்பகுதியைப் பிற்காலத்தில் சிதைத்துச் திரிசூலம் அடிக்கப்பட்டுள்ளது. திரிசூலம் மேல்நோக்கியவாறும் கல்வெட்டு தலை கீழாகவும் உள்ளது. மன்னன் பெயர் அருள்மொழி தேவன் என்று மட்டுமே காணப்படுகிறது. வேறு செய்தியை அறிய இயலவில்லை.

1. ஸவஸ்த ஶ்ரீ
2. அருமொ
3. ழி இரா
4. ஜராஜ
5. தேவற்......

**27 : 3**

**இடம்** : வார்ப்பட்டுச் சிவன் கோவில் மண்டபத்தின் தென்மேற்கு வெளிப் புறத்து அதிட்டானத்திலுள்ள கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : விலை கொண்ட நிலத்துக்கு எல்லை கூறப்பட்டது. துண்டு கல்வெட்டாக இருப்பதால் வேறு செய்தியை அறிய இயலவில்லை.

1. ..... ளவாகலும் விலைகுற விற்க கொழ் வீர்களி.. ..
2. .. ... கலிாசுவரமுடைய நாயனார் திரும டை விளாக.
3. .. . இக்குளத்துக்கு இச்சந்தானத்துப் பிள்ளைகள் பி...
4. .... வுக்கும் பெருநான்கெல்லையாவன கீழ்பா
5. ..... தென்பாற்கெல்லை களக் குளத்து வயல் வடவ.....

**27 : 4**

**இடம்** : மேற்படி வார்ப்பட்டு சிவன் கோயிலுள்ள மண்டபத்து தென்மேற்கு மூலையின் வெளிப்புற அதிட்டானத்திலுள்ள துண்டு கல்லிலுள்ள கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : தானத்தில் ஈடுபட்டவர் பெயர் மட்டுமே கிடைத்துள்ளது.

1. ..... ா பாண்டிய தேவற்கு யாண்டு ரு வது எதிரா....
2. ..... ள்ளிட்டாரும் திருப்பூவனமு டையான் நம்பிபட்..... ...
3. ... னியான் விக்கிரம பாண்டிய மூவேந்தவேளா... .

27 : 5

இடம் : வார்ப்பட்டுச் சிவன் கோயிலில் தெற்கு வாசற்படி சோபான மண்டபத்தின் அருகிலுள்ள வெளிப்புற சுவரிலுள்ள துண்டுக் கல்வெட்டு.

காலம் : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

செய்தி : தான முறிக்கு கையொப்பமிட்டவர்கள் பெயர் மட்டும் உள்ளது.

1 .. டயான் நம்பியும்...
2 ... நதிவேளார் உள்ளிட்டார் மிகத்..
3 ... தாளுன் எழுத்து திருமலை நா ..
4. ... ழவனி சேட்டன் எழுத்து த.
5 .. என் எழுத்து

27 : 6

இடம் : வார்ப்பட்டுச் சிவன் கோயிலில் அர்த்த மண்டபத்து வடக்கு வெளிபுறச் சுவரிலுள்ள கல்வெட்டு.

காலம் : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

செய்தி : சாட்சிக் கையொப்பமிட்டவர்கள் பெயர்கள் மட்டுமே கிடைத்துள்ளது.

1. ......பன் சேட்டனும் இவ்வனைவோமும்
நன்றாக....
2. ......கெழவன் எழுத்து திருப்பூவன....
பாயாடுமான......

27 : 7

இடம் : வார்ப்பட்டு மேற்படி கோவில் கருவறையின் தென்புறச் சுவரிலுள்ள கல்வெட்டு.

காலம் : கி.பி. 13 ஆம் நூற்றாண்டு.

செய்தி : சாட்சிக் கையொப்பமிட்டவர்கள் பெயர் மட்டுமே உள்ளது.

1. ... .. ... வ இப்படிக்கு...
2 .... டிக்கு சேட்டன் தேவன் எழுத்து
3 ... யின் உடையான் எழுத்து...

# 28. தூத்தூர் கல்வெட்டுகள்

இல.தியாகராஜன், அரியலூர்

28 : 1

**இடம்** : அரியலூர் மாவட்டம், வட்டம், தூத்தூர் வராக முத்தீஸ்வரர் கோயில் அர்த்தமண்டபத் தெற்குச் சுவர்.

**காலம்** : மூன்றாம் குலோத்துங்கன், யா. 2, கி.பி. 1180.

**செய்தி** : தூற்றூரில் உள்ள திருவென்பபேறுடையார் என்னும் சிவன் கோயிலுக்கு நிலக்கொடை கொடுக்கப்பட்டது. இதை ஜெயங் கொண்ட சோழ மண்டலத்து புழல் கோட்டத்து ஏதோ ஒரு ஊரைச் சேர்ந்தவர் கொடுத்துள்ளார். ஆனால் கல்வெட்டு முற்றுப்பெறாமல் இருப்பதால் அவரைப் பற்றி அறிய முடியவில்லை. தூற்றூர் ஸ்ரீ விக்கிரமசோழ வளநாட்டு இன்னம்பர் நாடு என்னும் நாட்டுப் பிரிவுகளின் கீழ் இருந்துள்ளது. தூற்றூர் என்ற பெயர் இன்று தூத்தூர் எனவும், ஸ்ரீ பராந்தக சதுர்வேதிமங்கலம் என்ற ஊர் ஸ்ரீபுரந்தான் என்னும் பெயருடனும் தூத்தூருக்கு அருகே உள்ளன.

1. ஸ்வஸ்திஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்க்கு யாண்டு இரண்டாவ
2. து விக்கிரம சோழவளநாட்டு இந்நம்பர் நாட்டு ஸ்ரீ பரா
3. ந்தகச் சருப்பேதிமங்கலத்துப் பிடாகை தூற்றூரி உடை
4. யார் திருவென்ப பேற்றுடையார்க்கு இத்தேவருக்கு இக்கட்டளையி
5. ல் நீங்கல் நிலத்து ஸ்ரீதரவதிக்கு மேற்கு கணவதி வாக்கா
6. லுக்குத் தெற்கு ஏழாங் கண்ணாற்று மூன்றஞ் சதிரத்து நிலம் ஒன்ப
7. து மாவில் மேற்கடய நிலம் மூன்று மாவில் வடமேற்கு
8. ச் சார ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து புழற் கோட்டத்து

28 : 2

**இடம்** : மேற்படி கோயில் மகாமண்டபத் தெற்குச் சுவர் (நுழைவாயில் வலது புறம்).

**காலம்** : வீரராஜேந்திரன் (மூன்றாம் குலோத்துங்கன்), யா. 7, கி.பி. 1185.

**செய்தி** : இக்கோயில் ஸ்ரீமாகேஸ்வரர்களுக்கும் ஆண்டார்களுக்கும் அமுது உண்பதற்காக ஒருமாவரை அரைக்காணி நிலம் மடப்புறமாகக் கொடுக்கப்பட்டது. இவ்வூரிலிருந்த மடம் வீரசூரியன் திருமடம் என அழைக்கப்பட்டது. இந்நிலக்கொடையை திருப்பேர் (இன்றைய திருப்பெயர்) ஊரைச் சேர்ந்த ஸ்ரீதரபட்டர் ஆன வேத சூடாமணி பிரம்ம மாராயர் என்பவர் கொடுத்துள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவந சக்கரவர்த்திகள் ஸ்ரீவீர ராஜேந்திர தேவற்க்கு
2. யாண்டு ஏழாவது திருபேர் சீதரபட்டரான வேத சூடாமணி பிரம்ம மாராயர்
3. இக்கோயில் ஸ்ரீமாகேஸ்வரற்க்கு மடப்புறமாக விட்டது சீதரவதிக்கு மேற்க்கு
4. சோழ சூடாமணி வாய்க்காலுக்கு தெற்கு நாலாங் கண்ணாற்று முதற் சதிர நிலம் ஒ
5. ன்பது மாவில் மேற்கடைய நிலம் இரண்டு மாக் காணியில் வடக் கடய
6. நிலம் மாகாணி முந்திரிகை இதன் தெற்கு நிலம் முக்காணி......
7. ன ன நடுவடைய நிலம் காணி முந்திரி கையும் ஆக
8. நிலம் ஒருமாவரை அரைக் காணியும் வீர சூரியன் திருமடத்து அமுது
9. செய்யும் ஆண்டார்களுக்கு விட்டது.

**28 : 3**

**இடம்** : மேற்படி கோயில் மகா மண்டப வடக்கு மேற்கு சுவர்கள்.

**காலம்** : மூன்றாம் குலோத்துங்கன், யா. 12, கி.பி. 1190.

**செய்தி** : திருவென்பபேறுடையார் கோயிலுக்குப் பலரிடமிருந்தும் இம்மன்னரின் 12, 14, 16, 17ஆம் ஆண்டுகளில் தர்மதானமாக வாங்கப்பட்ட நிலங்கள் பற்றிய விவரம் எழுதப்பட்டுள்ளது. அந்நிலம் இருந்த பகுதி எதிரிலி சோழமங்கலம் என அழைக்கப்படுகிறது. மருதாறு, அதன் தென்கரையில் இருந்த நிலங்களும் இக்கோயிலுக்கு உரியனவாக இருந்தன.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவந சக்கரவத்திகள் மதுரை கொண்டு பாண்டியன் முடித்தலைகெ
2. ாண்டருளிய ஸ்ரீகுலோத்துங்க சோழ தேவற்க்கு யாண்டு பன்னிரண்டாவது வ
3. டகரை தூற்றூரில் உடையார் திருவென்பபேறுடை யார் திருநாமத்து பல
4. ர் பக்கலும் விலையுந் தர்ம தானமுங் கொண்டு திருநாமத்துக கா
5. ணியான நிலத்து முன்னாள் எதிரிலி சோழ மங்கலமென்னு
6. ம் திருநாமத்தால் வேறு பிரிந்த நிலமும் இவ்வூர்க் குடலான தர
7. மிலி நிலமும் நீக்கி நீக்கி நின்ற நிலமாவது சங்கர நாராணயவதிக்கு மேற்கு க
8. ணவதி வாய்க்காலுக்கு தெற்க்கு முதற் கண்ணாற்று மூன்றாஞ் சதிரத்து தென் மே
9. ற்கடய நிலங்காணி அரைக்காணி ஏழாங் கண்ணாற்று மூன்றாஞ் சதிரத்து
10. மேற்கடைய நிலம் ஒருமாவரை நாலாஞ் சதிரத்து இதன் மேற்கட

11. ய நிலம் முக்கணி சீ தர வதிக்கு மேற்க்கு கணவதி வாய்க்காலுக்கு தெ
12. ற்கு முதற் கண்ணாற்று இரண்டாஞ் சதிரத்து வட மேற்கடய நிலங்காணி
13. முந்திரிகைச் சின்னம் நாலாஞ் சதிரத்து நிலம் அரைமா ஆறாங் கண்ணா
14. ற்று முதற்சதிரத்து மேற்கடய நிலம் அரைக் காணி இரண்டாஞ் சதிரத்
15. து மருதாற்றின் தென்கரை நிலம் அரைமாவரைக்காணி முந்திரிகைக் கீழ
16. ரை மூந்றாஞ் சதிரத்து மருதாற்றின் தெந்கரை நிலம் ஒருமா ஏழாங் கண்ணாற்று
17. முதற்சதிரத்து கிழக்கடய ஆறுமாவில் வடக்கடய நிலம் மூன்றுமா முக்காணி மே
18. ற் கடய மூந்று மாவில் குளமும் திருநந்தாவனமும் தரமிலி நீக்கி நிலம் ஒருமா முக்கா
19.

ணி அரைக்காணி கீழரை இரண்டாஞ் சதிரத்து நடுவடைய நிலம் ஒருமாவரை அ
20 ரைக் காணி முந்திரிகை மூன்றாஞ் சதிரத்து மேற்கடய மூன்று மாவில் தென் கிழக்க
21. டய நிலம் அரைமா நீக்கி நிலம் இருமாவரை நாலாஞ் ச
22 திரத்து கிழக்கடய நில மாகாணியில் சுடுகாடு தரமிலி நீக்கி நிலம் அரை
23. மா மேற்கடய நிலம் நான்மாவரையில் மருதாற்றின் தென்கரைப் பட்ட நில
24. த்து மேற்கடய நிலம் இரண்டு மா மருதாற்றுக்கு வடக்கு நிலம் மாகாணி முந்
25. திரிகை எட்டாங் கண்ணாற்று முதற் சதிரத்து வடமேற்கடய நிலம் மாகாணி அரை
26. க் காணியில் குளம் தரமிலி நீக்கி நிலம் ஒருமா மூன்றாஞ் சதிரத்து கிழக்கடய நிலம் மூ
27. ன்று மாவில் வடக்கடய நிலம் முக்காணி அரைக்காணி மேற்கடய நிலம் அறுமாவில்
28. மேற்கடயவும் வடக்கடயவும் நிலம் நாலுமா நாலாஞ் சதிரத்து மேற்கடய நிலம் மூன்று
29. மாச் சின்னத்தில் நிலம் அரைமா இவ்வதிக்கு மேற்க்கு சோழ சூளாமணி வாய்க்காலுக்கு தெற்
30. க்கு முதற் கண்ணாற்று இரண்டாஞ் சதிரத்து வடக்கடய நிலம் அறுமாவரையில் திருமடைம வி
31. ளாகமும் திருநந்தவனமுங் குளமும் தரமிலி நீக்கி நீக்கி நிலம் காணி முக்காணி அரைக் கா

32. ணி இதன் தென்கிழக்கடய யீநிலம் முக்காணி அரைக்காணி மூன்றாஞ் சதிரத்து கிழக்கட

33. ய நிலம் அரைமாவரைக் காணி மேற்கடய நிலம் அரை மாவில் நிலம் காணி கீழரை இதன் தெற்

34. க்கு நிலம் அரைமா வரைக்காணி மேற்கடய நிலம் மூன்று மாவில் வடகிழக்கடய நிலம்

35. காணி அரைக்காணி முந்திரிகைய் நீக்கி நீக்கி நிலம் இருமாவரை முந்திரிகை நாலா

36. ஞ்சதிரத்து கிழக்கடய நிலம் நான்மாவரை இதன் மேற்கு நிலம் இரண்டு மாக்காணி

37. யில் நடுவடய நிலம் அரைக்காணி கீழரை மேற்கடய நிலம் முக்காணியில் நிலம்

38. முந்திரிகை இரண்டாங் கண்ணாற்று முதற் சதிரத்து வடக்கடய நிலங் காணி இரண்டாஞ் சதி

39. ரத்து கிழக்கடய நிலம் மூன்றுமா நீக்கி இதன் மேற்கு நிலம் மூன்றுமா முந்திரிகையில் மே

40. ற் கடய நில இரண்டுமா முந்திரிகைக் கீழரை கிழக்கடய நிலம் அரைமா வரைக்காணி

41 ஐஞ்சாங் கண்ணாற்று இரண்டாஞ் சதிரத்து கிழக்கடய நிலம் இரண்டு மாவில் வ

42. ட கிழக்கடய நிலங்காணி இதன்மேற்கு நிலம் மூன்று மாவரைக் காணி ஆறாங் கண்ணாற்

43. றில் இரண்டஞ் சதிரத்து நடுவடய நிலம் ஒருமா இராமதேவ வதிக்கு மேற்கு கணவ

44. தி வாய்க்காலுக்கு தெற்கு ஆறாங்கண்ணாற்று முதற் சதிரத்து கிழக்கடய நிலம் இரண்டுமா முக்கா

45. ணியில் மருதாரும் திடலும் தரமிலி நீக்கி நிலம் ஒருமா முக்காணி எட்டாங்கண்ணாற்று மு

46. தற் சதிரத்து வடக்கிழக்கடய நிலம் ஒருமா முந்திரிகை கிழக்கால் இச்சதிரத்து மருதாற்

47. றின் தென் மேற்கடய நிலம் மாகாணி அரைக்கா

48. ணி முந்திரிகை இரண்டாஞ் சதிரத்து தென் கிழக்கடய நிலம் அரைக்காணி இவ்வதிக்கு மேற்

49. கு சோழ சூளாமணி வாய்க்காலுக்கு தெற்கு முதற் கண்ணாற்று இரண்டஞ் சதிரத்து

50. கிழக்கடய மூன்றுமாவில் நிலம் அரைமா வரைக் காணி இரண்டாங் கண்ணா

51. ற்று இரண்டாஞ் சதிரத்து வடக்கிழக்கடய நிலம் ஒருமா மூன்றாங் கண்ணாற்று இ
52. ரண்டாம் சதிரத்து மேற்கடய மூன்றுமாவில் நிலம் அரைக்காணி
53. நாலாங் கண்ணாற்று இரண்டாஞ் சதிரத்து ஓடை நிலம் ஒருமா பதின் மூ
54. ன்றாவது விலைக் கொண்ட நிலம் சீதரவதிக்கு மேற்கு கணவதி வாய்க்கா
55. லுக்கு தெற்கு ஆறாங் கண்ணாற்று முதற் சதிரத்து தென் கிழக்கடய நிலம்
56. ஒருமாவரை இவ்வதிக்கு மேற்கு சோழ சூளாமணி வாக்காலுக்கு தெற்கு மு
57. தற் கண்ணாற்று இரண்டாஞ் சதிரத்து தென் கிழக்கடய நிலம் இரண்டு மாவி
58. ல் மேற்கடய நிலம் ஒருமாவரைக் காணி ஐஞ்சாங் கண்ணாற்று முதற் சதிரத்து
59. வடமேற்கடய நிலம் முக்காணி இரண்டாம் சதிரத்து கிழக்கடய நிலம் இரண்டு மாவில்
60. மேற்கடய நிலம் அரைமா மேற்கடய நிலம் மூன்றுமா முக்காணி அ
61. ரைக் காணியில் கிழக்கடய நிலம் முக்காணி அரைக்காணி பதினாலாவதும் பதினை
62. ஞ்சாவதும் புகுந்த நிலம் சீதர வதிக்கு மேற்கு கணவதி வாய்க்காலுக்கு தெற்
63. கு நாலாங் கண்ணாற்று முதற் சதிரத்து செங்கழுனீற் ஓடை நிலம் அரைமா ஆறாங் க
64. ண்ணாற்று முதற் சதிரத்து மருதாற்று தென் கரையில் மேற்கடய நிலம் ஒருமா அ
65. ரைக் காணியில் கிழக்கடய நிலம் ஒருமா ஏழாங் கண்ணாற்று முந்றாச் சதிரத்
66. து கிழக்கடய நிலம் ஆறுமாவில் கொல்லை நிலம் அரைமா அரைக்காணி இதன்
67. மேற்கு நிலம் ஒருமாவில் தெற்கடய நிலம் அரைமாவில் வடக்கடய நிலம் அரை
68. ரக்காணி எட்டாங் கண்ணாற்று முதற் சதிரத்து மேற்கடைய நிலம் மூன்றுமாவில் தெற்க
69. டைய நிலம் ஒருமாவரைச் சின்னத்து வடக்கடய நிலம் அரைமா இவ்வதிக்கு மேற்கு சே
70. சாழ சூடாமணி வாய்க்காலுக்கு தெற்கு முதற் கண்ணாற்று இரண்டாஞ் சதிரத்து தென் மேற்கட

71. ய நிலம் அரைமா மூன்றாஞ் சதிரத்து வட கிழக்கடய நிலம் அரைமாவில் மனை நிலம் கீழ்

72. முக்கால் மேற்கடய நிலம் மூன்றுமாவில் வடகிழக்கடய நிலங்காணி அரைக்காகணி மு

73. ந்திரிகை நாலாஞ் சதிரத்து மேற்கடய நிலம் முக்காணியில் வடக்கடய நிலம் முந்தி

74. ரிகை கீழரை நீக்கி இதன் மேற்கு நிலம் அரைக் காணிக் கீழக்கால் இதன் கிழக்கு நிலம் முக்

75. காணியில் வடக்கடய நிலம் அரைக்காணி முந்திரிகை நாலாங்கண்ணாற்று முதற் சதி

76. ரத்து தென் மேற்கடய நிலம் அரைமா இரண்டாஞ் சதிரத்து மேற்கடய நிலம் மூ

77. ன்று மாவில் வட கிழக் கடைய நிலம் அரை மாவின் கீழ் முக்கால் இராமதேவ வதிக்கு மேற்கு கணவதி

78. வாய்க்காலுக்கு தெற்கு எட்டாங் கண்ணாற்று முதற் சதிரத்து மருத

79. ாற்றின் வடகரைப் பட்ட நிலத்து மேற்கடய நிலம் முக்காணி முந்திரிகை

80. பதிநாறாவதும் பதிநேழாவதும் விலை கொண்ட நிலம் சீதர வதிக்கு

81. மேற்கு கணவதி வாய்க்காலுக்கு தெற்கு ஏழாங்கண்ணாற்று நாலாஞ் சதி

82. ரத்து கிழக்கடய நிலம் நான்மாவில் மேற்கடய நிலம் மூன்று

83. மா காணி எட்டாங் கண்ணாற்று நாலாஞ் சதிரத்து கிழக்கடய நிலம் ஒருமாவரை

84. மேற்கு நிலம் ஐஞ்சு மாவில் வடக்கடய நிலம் ஒருமா முக்காணி

85. அரைக்காணி கீழ் அரையில் நிலம் அரைமா வரைக் காணி முந்திரிகைக்கு கீழ்----

86. நத்தத்தில் --------- இராமதேவன் வதிக்கு

87. மேற்கு கணவதி வாய்க்காலுக்கு தெற்கு எட்டாங் கண்ணாற்று முதற்

88. சதிரத்து இதன் கிழக்கிடய நிலம் இரண்டு மாவில் நிலம் முக்கா

89. ணி----------- சீதர வதிக்கு மேற்கு கணவதி வாய்க்காலுக்கு

90. ---------------------

91. ------- மேற்கடய நிலம் -------------

92. கிழக்கடய நிலம் அரைக்காணி சின்னங் இதன் வடக்க

93. டய நிலம் அரைக்காணி ------------- (முற்றுப் பெறவில்லை).

28 : 4

**இடம்** : மேற்படி கோயில் மகாமண்டப வடக்குச் சுவர் குமுதப்படை.

**காலம்** : மூன்றாம் இராஜராஜன், யா. 8, கி.பி. 1224.

**செய்தி :** திருவெண்பபேறுடையார் கோயில் மேற்கு திருமாளிகையில் ஈசான தேவர் என்பவர் சுப்ரமணியப் பிள்ளையாரையும் நாச்சிமாரையும் எழுந்தருளிவித்தார். இவர்களுக்குத் திருவமுது படைக்கவும், கிராமத்துக்கு நன்மையுண்டாக வேண்டும் எனவும் பிள்ளை யாதவராயர் உடல் நலம் நன்றாக இருக்க வேண்டும் என்பதற்காகவும் ஸ்ரீபராந்தக சதுர்வேதிமங்கலத்துக்குக் கிராம காரியம் செய்கின்ற கூட்டப் பெருமக்கள் நிலதானம் வழங்கியுள்ளனர். அந்நிலம் அழகிய மணவாளநல்லூரில் இருந்தது. இவ்வூர் இன்று அழகிய மணவாளம் என்ற பெயரில் உள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீராஜராஜ தேவர்க்கு யாண்டு
ஏழாவதின் எதிராமாண்டு வ்ருஷப நாயற்று பூர்வ பக்ஷத்து ஏகாதஸியும் புதன்
கிழமையும பெற்ற ம்ருஹஸிரிஷத்து நாள் வடகரை விக்கிரம சோழ வளநாட்டு
ஸ்ரீபிராந்தக சதுர்வேதி மங்கலத்து கற்கடக நாயிற்று முதல் க்ராம கார்யஞ்
செய்கின்ற கூட்டப் பெருமக்களோம் எழுந்து நம்மூர் ஊற்கணக்கு உத்தமப்
பிரியன் கண்டு உடையார் திருவெண்ப பேறுடையார் கோயில்

2 மேலை திருமாளிகையில் எழுந்தருளியிருக்கும் ஸுப்ரமண்ணியப்
பிள்ளையாருக்கும் நாச்சிமாற்கும் திருவமுது உள்ளிட்ட பூஜைக்கு
தேவதானமில்லையென்று க்ராமத்துக்கு நன்றாகவும் பிள்ளை யாதவராயார்
திருமேனிக்கு நன்றாகவும் இத்தேவற்க்கு பூஜைக்கு உடலாக இத்தேவர்
திருநாமத்துக்காணியான நிலத்து வரம்பறை பாழிலே சிறிது நிலம்
ஊற்கீழிறையிலியாகப் பெறத்திருத்திப் பயிற்செய்து நாயநாற்கு
பூஜைக்குடலாகப் பெறவேணுமென்ற இச்சுப்பிரமண்ணியப் பிள்ளையாரை
எழுந்தருளிவித்த ஆண்டார் ஈசாநதேவரும் தாநத்தாரும் வேண்டிக்
கொள்கையாலும் இக்கோயில்

3. திருப்பணிக்குக் கிடந்த நெடுவடக்கெல்லை நியாயபரிபாலன கலிங்க
வாய்தலைக்கு க்ராம காரியமாகக் காசுக்குத் தருகையாலும்
இச்சுப்ரமண்ணியப்பிள்ளையாற்க்கு பூஜைக் குடலாக தூற்றூற் கட்டளையில்
இத்தேவர் திருநாமத்துக் காணியான நிலத்து வரம்பறை பாழிலும் பாழிலும்
இரண்டு மாநிலம் பயிற் செய்து பூஜைக் குடலாகக் கொள்ளவும் இந்நிலத்துக்கு
பயிரடைப்பின்படி புன்பயிருக்குடலாக இறுப்பு வருகிற நிலத்துக்கு தடி மாற்றாக

இத்தேவர் திருநாமத்துத் தரிசாக நிலத்திலே புன்பயிற் செய்து புன்பயிருக்கு
இறுத்து வருகிற படியே இறுக்கவும் இப்படி செய்யுமிடத்து சீதரவதிக்கு மேற்க்கு
சோழ சூடாமணி வாய்க்காலுக்கு தெற்கு நாலாங்கண்ணாற்று இரண்டாஞ் சதிர
4. நிலம் ஒன்பது மாவில் மேற்கடைய நிலம் ஒரு மா முக்காணி நீக்கி இதன் கிழக்கு
நிலம் ஒருமா முந்திரிகை இதில் புன்பயிர் நிலம் அரைமா முந்திரிசை வரம்பறை
பாழ்நிலம் அரைமா ஐஞ்சாங் கண்ணாற்று இரண்டாஞ் சதிரத்து நிலம் முக்காணி
அரைக்காணி முந்திரிகை இதில் புன்பயிர் நிலம் அரைமா பாழ்நிலங்காணி
அரைக்காணி முந்திரிகை ஆக நிலம் இரண்டுமாவும் வரம்பறுத்துத் திருத்திப்
பயிர் செய்து பூஜைக் குடலாக கொண்டு இன்னிலத்து புன்பயிருக்கு இறுப்பான
நிலத்துக்கு தடி மாற்றாக முதல் கொள்ளும் சீதரவதிக்கு மேற்கு கணவதி
வாய்க்காலுக்கு தெற்கு எட்டாங் கண்ணாற்று முதற் சதிரத்து கிழக்கடைய நிலம்
மூன்றுமா நீக்கி இதன் மேற்கு நிலம் மூன்றுமாவில்
5. தெற்கடைய நிலம் ஒருமாவில் மேற்கடைய நிலம் அரைமாவில் கிழக்கடைய
திருநாமத்துக் காணியான புன்பயிருக்கு இறுக்கு நிலங் காணியும் அழகிய
மணவாளநல்லூர் சங்கரநாராயணவதிக்கு மேற்கு கணவதி வாய்க்காலுக்கு
தெற்கு ஏழாங்கண்ணாற்று மூன்றாஞ்சதிரத்து மேற்கடையத் திருநாமத்துக்
காணியாக நிலம் ஒருமாவரையில் புன்பயிருக்கு இறுக்கு நிலம் முக்காணி
முந்திரிகையும் ஆக நிலம் ஒருமா முந்திரிகையும் தடிமாற்றாக புன்பயிருக்கு
இறுக்கவும் ஊற்கீழ் இறையிலி விட்ட நிலம் இரண்டு மாவும் வரம்பறுத்துத்
திருத்திப்பயிற் செய்து பூஜைக்குடலாக கொண்டு இந்நிலத்துக்கு
6. அந்தராயங் கொள்ளுமிடத்து முதலாண்டு திருத்திப் பயிற் செய்ய அந்தராயங்

கொள்ளா தொழியவும் இதன் எதிராமாண்டு நிரம்பவும் இந்நிலம்
இரண்டுமாவுக்குங் குடிமை தவிரவும் கடவதாகவும் சொந்நோம் இப்படி செய்க
பணியால் ஊர்க்கணக்கு உத்தமப் பிரியன் எழுத்து இப்படிக்கு இவை ஆதநூர்
திருவரங்கநாராயண பட்டன் எழுத்து இப்படிக்கு கோமடத்து த்ரைலோக்ய நாத பட்டன் எழுத்து உ
7 இவை லக்ஷ பட்டன் எழுத்து உ பருத்திப்புறத்து தக்ஷணாமூர்த்தி பட்டன்
எழுத்து இவை சிறுபுளூர் இளைய தாமோதரபட்டன் எழுத்து உ இவை ஒலி
கொன்றை நாராயண பட்டன் எழுத்து உ இவை திருவரங்க தேவபட்டன் எழுத்து
உ இவை இறையாஞ்சேரி நாராயண பட்டன் எழுத்து உ இருங்கண்டி எக்ஜப்ரம்ம
பட்டன் எழுத்து உ இவை ஆதநூர் ஆளவந்தான் பட்டன் எழுத்து உ இவை
ஆதநூர் அளைந்தகோளரி பட்டன் எழுத்து உ இவை ஒலிகொன்றை தாமோதர
பட்டன் எழுத்து உ

28 : 5

இடம் : மேற்படி கோயில் மகாமண்டபத் தென்புறச் சுவர் (நுழைவாயில் இடது புறம்).

காலம் : மூன்றாம் இராஜராஜன், யா. 21, கி.பி. 1237.

செய்தி : ஸ்ரீ பராந்தகச் சதுர்வேதிமங்கலத்தின் மேற்குப் பிடாகையான தூற்றூரில் உள்ள திருவெண்பபேறுடையார் கோயில் தேவகன்மிகள் இக்கோயிலில் இருக்கும் சைவத் துறவி (ஆண்டார்) கூடாகுடையார் அம்மையப்பரான ஈசான தேவர் முதலியாருக்கு மடமாகக் கொடுத்த பரிவத்தனை நிலம் பற்றி குறிப்பிடுகிறது. இவர் அமைத்த மடத்தின பெயர் திருஞான சம்பந்தன் திருமடம் என அழைக்கப்பட்டது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவன சக்கரவத்திகள் ஸ்ரீஇராஜராஜ
2. தேவற்க்கு யாண்டு உயக-வடகரை விக்கிரம சோழ வளநாட்டு
3. ஸ்ரீ பராந்தகச் சதுர்வேதி மங்கலத்து மேல் பிடாகை தூற்
4. றூர் உடையார் திருவெண்ப பேறுடையார் கோயில் ஆதிசண்டேஸ்வர தேவ
5. ர் கன்மிகளோம் இந்நாயநார் கோயிலில் கும்பிட் டிருக்கும் ஆண்டார்களி

6. ல் கூடாகுடையார் அம்மை அப்பரான ஈசான தேவர் முதலியாற்கு மடம

7. ாகக் குடுத்த மனைக்கு பரிவத்தனை பண்ணிக் குடுத்த பரிசாவது முந்நாளில் இந்நா

8. யநார் திருமடை விளாகத்துக் கீழைத் திருவீதியில்க் கீழ்சிறகில் கீழ்பாற்கெ

9. ல்லை திருநாமத்துக்காணி விளைநிலத்துக்கு மேற்கும் தென்பாற்கெல்லைபி

10. ரான் குடையான் பொய்கைநாட்டு வேளாண் குடியிருப்பு மனைக்கு வடக்கு

11. ம் மேல்பாற் கெல்லை திருவீதிக்கு கிழக்கும் வடபாற்கெல்லை திருஞாந சம்ப

12. ந்த பட்டன் மனைக்கு தெற்கும் ஆக இந்நான்கெல்லைக்கு நடுவுபட்ட

13. மனையும் வாய்நீளமும் குழி எயஉ ல நிவ இ வ இந்நிலம அரைக காணி

14. க் கீழ் காலுக்கும் பரிவர்த்தனையாக இந்த ஈசாநதேவர் முதலியார் தந்த நில

15. மாவது சங்கர நாராயண வதிக்கு மேற்கு கணவதி வாய்க்காலுக்குத் தெற்க்கு எட்

16. டாங் கண்ணாற்று நாலாஞ் சதிரத்து இறைச்சல் விளை நிலமும் மனை நிலமும்

17. கிழக்காலும் பரிவத்தனையாக கைய்கொண்டு பரிவத்தனைத் தீட்டு கு

18. டுத்தோம் ஆதி சண்டேஸ்வரதேவர் கன்மிகளோம் இவை கோயில்

19. கணக்கு மருதூருடையான் சீமாஹேஸ்வரப் பிரியன் எழுத்து இவை

20. தேவகன்மி சீ பராந்தக பட்டன் எழுத்து இவை ஆலால சுந்தர பட்ட

21 ன் எழுத்து இவை நல்ல ஞாநசம்பந்தன் எழுத்து இது திருஞான சம்பந்தந் திருமடம்

**28 : 6**

**இடம்** : மேற்படி கோயில் மகாமண்டப தெற்குச் சுவர் குமுதப்படை.

**காலம்** : மூன்றாம் இராஜேந்திரன், யா. 8, கி.பி. 1254.

**செய்தி** : பராந்தகச் சதுர்வேதிமங்கலத்து கிராம காரியம் செய்கின்ற கூட்டப் பெருமக்கள் மற்றும் இவ்வூர் குடிமைக் கணக்கு எழுதுகின்ற நாலாயிரப்பிரியன் ஆகியோர் வழங்கிய வரிச்சலுகை பற்றி இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது. இச்சதுர்வேதிமங்கலத்தின் பிடாகையான தூத்தூர் கட்டளை, அழகிய மணவாளநல்லூர் கட்டளை ஆகிய ஊர்களில் ஆண்டார் ஈசான தேவர் திருஞானசம்பந்தர் என்பவர் தூற்றூரில் இருந்த மடத்திற்கு

நிலங்கள் வாங்கி மடப்புறமாக கொடுத்துள்ளார். அந்நிலத்திற்கு சபா விநியோகமாக வசூலிக்கப்படும் வரியை விதிப்பதில்லை என (தவிர்ந்து) பராந்தக சதுர்வேதிமங்கலத்து சபையார் முடிவு செய்தனர்.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீஇராஜேந்திர சோழ தேவற்க்கு யாண்டு அ விக்கிரமசோழ வளநாட்டு பராந்தகச் சதுர்வேதிமங்கலத்து கற்கடக நாயறு முதல் க்ராமக் காரியஞ் செய்கிற கூட்டப் பெருமக்கள் எழுத்து குடிமைக் கணக்கு நாலாயிரப்பிரியன் கண்டு நம்மூர் பிடாகை தூற்றூர் கட்டளையில் ஆண்டார் ஈசானதேவர் திருஞான சம்பந்தன் மடப்புறமாக கொ

2. ண்டு விட்ட இக்கட்டளையில் கார் மறு நிலம் ஒருமா அரைக்காணி கீழரை நிலம் ஒருமா கீழே ஒருமாவரையும் அழகிய மணவாள நல்லூர் கட்டளையில் ஒரு பூ நிலம் அரைக்காணி முந்திரிகை காணி கீழரையும் ஆக நில கொண்டு மாமுக்காணியரைக் காணியும் அ-காத்திகை மாதத்துப் பத்தாந் தியதி முதல் ஸபா வினியோகத்துக்கு நியோகப்படி வரிக் கொ

3. ண்டு தண்டுங் காசும் ஆளும் இம்மடத்துக்கு ரக்ஷாத்யமாக ஸந்த்ராதித்யவரை தவிரக் கடவதாகச் சொன்னோம் இப்படி செய்வதே பணியால் இவை நாலாயிரப்பிரியன் எழுத்து உ இருங்கண்டி வினாயக பட்டன் எழுத்து கோமடத்து வெண்ணை பட்டன் எழுத்து இருங்கண்டி-------- ஆதனூர் ஜாதவேத பட்ட

4. ன் எழுத்து கோமடத்து ஸ்ரீமாதவ பட்டன் எழுத்து காராம்பிச் சேட்டு சூரிய தேவபட்டன் எழுத்து கோமடத்து திருவாய்மூரடிகள் பட்டன் எழுத்து திருமிழலை ஸ்ரீதரபட்டன் எழுத்து இருங்கண்டி ஸ்ரீதர பட்டன் எழுத்து ஆதனூர் கூத்த பிரான் பட்டன் எழுத்து வழுகூராட் கொண்ட வில்லி பட்டன் எழுத்து காரம்பிசேட்டுஸ்ரீ க்ருஷ்ணபட்டன்

5. எழுத்து வீரவல்லி மலைக்கினிய நின்றான் பட்டன் எழுத்து சிறுபு(ள்)ளுவில் கேசபட்டன் எழுத்து காரம்பிச்சேட்டு விஷ்ணுபட்டன் எழுத்து கோமடத்து இராமபிரான் பட்டன் எழுத்து வேற்புறத்து பத்மநாத பட்டன் எழுத்து அன்பில் சிங்கப்பிரான் பட்டன் எழுத்து இறையான்சேரிச் சிவன் திருச்சிற்றம்பல முடையான் பட்டன் இருங்கண்டி எஜ்ஞ

6. பட்டன் எழுத்து இருங்கண்டி ராமாநிச பட்டன் எழுத்து இறையான்சேரி உலகுடையான் பட்டன் எழுத்து குமிண்டிலி ஸ்ரீராம பட்டன் எழுத்து இறையான் சேரி நாராயண பட்டன் எழுத்து ஆதனூர் அளைந்த கோன் பட்டன் எழுத்து

28 : 7

இடம் : மேற்படி கோயில் மகாமண்டப தெற்குச் சுவர் ஜகதிப்பீடம்.

காலம் : மூன்றாம் இராஜேந்திரன், யா. : 33, கி.பி. 1279.

செய்தி :

குலோத்துங்க சோழ வளநாட்டு திருநறையூர் நாட்டு அகரம் ஸ்ரீஇராஜராஜ சதுர்வேதிமங்கலத்து சபையாரும், மகா சபையாரும் தூற்றூர் திருவெண்பபேறுடையார் திருக்கோயிலில் உள்ள எதிரிலி சோழன் மண்டபத்தில் கூட்டம் கூடி கிராமத்துக்கு நன்றாக வேண்டுமென்று அச்சதுர்வேதிமங்கலத்துப் பிடாகை கருப்பூரில் நிலம் தானமாக வழங்கியுள்ளனர். திருவெண்பபேறுடையார் கோயிலில் திருப்பள்ளி எழுச்சியின் போது ஐந்நூற்றுவன் சந்தி என்ற பெயரில் பூஜை நடத்தி இறைவனுக்கு திருவமுது படைக்க அந்நிலம் கொடுக்கப்பட்டது என அறிகிறோம்.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. திரிபுவநச் சக்கரவத்திகள் ஸ்ரீராஜேந்திரசோழ தேவற்குயாண்டு 33 துலாநாயற்றுபூர்வபக்ஷத்து த்ருதியையும் புதன் கிழமையும் பெற்ற அநிழத்து நா
3. திருவெண்பபேறுடையார் திருக்கோயிலில் எதிரிலி சோழன் திருமண்டபத்துத் தன்மி செய்து பெருங்குறி கொட்டி விவஸ்தை பண்ணினபடி
4 க்ராமததுக்கு அகப்ஜயாந்தர்மாக நமூர் பிடாகை கருப்பூர் உலகுடை முக்கோட்கிழானடி வதிக்கு மேற்கு ராஜ வாடக்கு ரு-திசா சதிரத்து தெற்கடைய நி இந்நில மூ
5. ன்ற மாவில் நடுவடைந்த நிகாம கருப்பூர் நத்தத்து வடசிறகில் ஒழுகின்படி மிகுதிக் குறைவுட் பட மனை நி சொம ஆக நிகாகிதெ இந்நில ஒ
6. ருமாவின் கீழ் முக்காலும் நமூர் முதற் சதிரமுன்றாந் துண்டம் ஸிஹஸை தாமோதரபட்டன் தன்னுடைய அபவாற் காலத்திலே உடையார் திருவென்
7. பபேறுடையார் நாயனார்க்கு பிரமாணம் பண்ணிக் குடுத்துத் தானத்தார் இந்நாள் வரையும் அனுபவித்துப் போதுகிற இந்நில இந்நாள் முதல் இந்நிலத்துக்கு வரும் பா
8. (ய) பாலம் (மு)க்காலும் கடமையும் வினியோக(ங்)களும் கிராமத்துக்க அகபு தாத்தமாகத் திருப்பள்ளியெழுச்சி காலத்து ஐஞ்ஞூற்றுவன் சந்தி என்று அமுது (முற்றுப்பெறவில்லை)

28 : 8

இடம் : மேற்படி கோயில் கிழக்கு வாயிலில் நடப்பட்டுள்ள கற்பலகை.

காலம் : ஸ்ரீகிருஷ்ணதேவராயர், பவ வருஷம், 1514.

செய்தி : கிருஷ்ணதேவராயரின் பிரதிநிதியான வீரநரசிங்கராய நாயக்கர் திக்கு விஜயம் செய்து வெற்றி பெற வேண்டும் என வேண்டிக் கொண்டு வீரநரசிங்கராய நாயக்க முதலியாரும் ஸ்ரீபராந்தக நாட்டு மனிதர்களும் (பிரதிநிதிகள்) தூற்றூர் திருவெண்பபேறுடைய நாயனார் கோயிலில் பூஜை திருப்பணிக்காக கொற்றிலக்கை சூலவரி ஆகிய வரிகளின் வருமானத்தைச் சர்வமானியமாக வழங்கியுள்ளனர்.

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீமன்
2 மகா மண்ட
3 லேஸ்வரன் ஸ்ரீகிருஷ்ண
4. தேவமகாராயர் காரி
5. யத்துக்கு கடவரா
6. ன வீரநரசிங்கராய நாய
7. க்கற் திகக விசைய
8. ம் உண்டாக வேணும்
9. என்று பவ வருஷம் ஆடி மீ ய உ
10. வீரநரசிங்கராய
11. நாயக்க முதலியாரும்
12. ஸ்ரீபராந்தகன் நாட்டு
13. மனித்தரும் தூற்றூர்
14. நாயனார் திருவெண்ப பே
15. றுடைய நாயனார் கோயி
16. லுக்கு பூசை திருப்பணிக்
17. கு ஆக கோற்றிலக்கை சூல
18. வரி சறுவமான்னியம்மாக
19. பண்ணி கல்லுவெட்டி குடுத்
20. த படியாலே யிந்த நின்றை
21. யத்துக்கு சந்திராதித்தவரை
22. யும் சறுவமான்னியமாக ந
23. டத்திக் கொள்ளவும் யிந்தத் த
24. ன்மத்துக்கு யாதொருத்தர்
25. அயிதம் நினைத்தபேர் சிவத்து
26. ரோகியுமாக கெங்கை க
27. ரையிலே காராம் பசுவை
28. க் கொன்ற பாவத்திலே போ
29. கக் கடவனாகவும் உ

# 29. பெரியமறை, சென்னிவனம் கல்வெட்டுகள்

இல.தியாகராஜன், அரியலூர்

29 : 1

**இடம்** : அரியலூர் மாவட்டம், வட்டம், பெரியமறை காளிக்கோயில் நிலைக்கால்.

**காலம்** : முதலாம் இராஜராஜன், யா : 27, கி.பி. 1012.

**செய்தி** : இவ்வூரின் பழைய பெயர் விறை என்பதாகும். சோழர் காலத்தில் இவ்வூர் பெரிய வணிக நகரமாக இருந்துள்ளது. விறை நகரத்தார்கள் திரணி எறிந்து நிரையாகக் கொண்டு வந்த 236 ஆடுகளை ஆட்டமலி உஞ்சனை மாகாளமுடைய பட்டாரகிக்கும் (காளி) உஞ்சேனை மாகாளமுடைய கூத்தர்க்கும் திருவிளக்கு வைத்து ஏற்றக் கொடுத்துள்ளனர் என்று இக்கல்வெட்டு தெரிவிக்கிறது. இவ்வூர் இராஜேந்திர சிங்க வளநாட்டு விறைக்கூற்றத்தின் கீழ் இருந்துள்ளது. விறை என்னும் ஊர்ப் பெயர் மருவி இன்று பெரியமறை என அழைக்கப்படுகிறது. திரணி என்ற ஊர் பெரம்பலூர் வட்டத்தில் காரை அருகே உள்ளது. இக்கல்வெட்டு மதிரை கொண்டான் ஸ்ரீஇராஜராஜ தேவர் என்று முதலாம் இராஜராஜன் பெயரைக் குறிப்பிடுகிறது. இம்மன்னருக்கு மதிரை கொண்டான் என்ற பட்டப்பெயர் இருந்ததை இக்கல்வெட்டால் அறிகிறோம். மதிரை கொண்ட பரகேசரிவர்மன் என்று முதலாம் பராந்தகசோழரும், மதிரைகொண்ட இராஜகேசரி என்று சுந்தரசோழரும் அழைக்கப்பட்டதைக் கல்வெட்டுகளில் காண்கிறோம். ஆனால் இராஜராஜனும் இப்பட்டப் பெயரால் குறிப்பிடப்படுவதை இக்கல்வெட்டில்தான் காண்கிறோம்.

1. ஸ்வஸ்திஸ்ரீ மதி
2. ரை கொண்ட
3. ன் ஸ்ரீஇராஜ ராஜ
4. தேவர்க்கு யாண்
5. டு உயஎ - ஆவ
6. து இராஜேந்த்ர ஸி
7. ங்க வளநாட்டு
8. விறைக்கூற்றத்து
9. விறையில் ந
10. கரத்தோம் நாங்
11. கள் திரணி யெ
12. றிஞ்ச னிரை கொ
13. டு வந்த ஆட்டா
14. ல் உஞ்சேநை மா
15. காளமுடைய ப
16. ட்டாரகிக்கு
17. ம் உஞ்சே
18. நை கூத்தர்க்கு மா
19. க விளக்கு இரண்
20. டே காலுக்கு உப
21. யமாக விட்ட வாடு
22. 236 இ

23. வை எங்கள் பக்க
24. ல் ஆடொந்றுக்
25. கு அட்டு நாழி டெ
26. ந(ய்)யட்ட கடவ
27. களாக கொண்ட
28. .........

**29 : 2**

**இடம்** : மேற்படியூர் சுவேதபுரீஸ்வரர் கோயில் முன்மண்டபக் கிழக்குச் சுவர்.

**காலம்** : மூன்றாம் குலோத்துங்கன், யா. 32, கி.பி. 1210.

**செய்தி** : விறையான அகளங்கபுரத்தில் உள்ள திருப்பார்பதீஸ்வரமுடைய நாயனார்க்கு திருவோலக்க மண்டபம் எடுக்கப்பட்டது. இம்மண்டபத்தின் பெயர் எடுத்தது வலியபெருமான் என்பதாகும். இம்மண்டபத்தைச் சென்னிவலக் கூற்றத்து ஆற்றூருடையான் பட்டன் பொன்பரப்பினானான சித்திரராயன் என்பவர் கட்டியுள்ளார். இவர் ஆறகளூருடைய பொன்பரப்பினான் வெட்டும் இராஜராஜ தேவனாரான விக்கிரமசோழ மகதை நாடாழ்வாரின் கீழ் அமைச்சராகப் பணியாற்றியவர் ஆவார். இவர் தன் எஜமானர் பெயரால் இம்மண்டபத்தை எடுத்துள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் மதுரையும் ஈழமும் கருவூரும் பா
2. ண்டியன் முடித்தலையும் கொண்டு வீரா அபிஷேகமும் விஜையா அபிஷே
3. கமும் பண்ணி அருளிய திரிபுவ வீரதேவற்கு யாண்டு முப்பத்திரண்டாவது
4. ன அகளங்கபுரத்து உடையார் திருப்பார்பதீஸ்வரமுடைய நாயநார்க்கு ஆறகளூருடைய பொ
5. ன் பரப்பினான் வெட்டும் இரா(ஜ) ரா(ஜ) தேவனாரான விக்கிரமசோழ மகதை நாடாழ்வார் திருநாமஞ்சாத்தி செய்
6. த திருவோலக்க மண்டபம் எடுத்தது வலிய பெருமானென்று இது செய்வித்தான் சென்னிவலக்கூற்
7. றத்து ஆற்றூருடையான் பட்டன் பொன்பரப்பினானான சித்திரராயன் ஸ்ரீமாயேஸ்வர ரக்ஷை.

**29 : 3**

**இடம்** : மேற்படி கோயில் மகாமண்டபத் தெற்குச் சுவர்

**காலம்** : மூன்றாம் குலோத்துங்கன், யா. 32, கி.பி. 210.

**செய்தி** : விறையான அகளங்கபுரத்து நகரத்தார்கள் திருப்பார்பதீஸ்வர முடைய நாயனார் கோயில் பூஜைக்கும் திருப்பணிக்கும் உள்ளூரிலும் இவ்வூரைச் சேர்ந்த சிற்றூர்களிலும் வசிக்கும் குடும்பங்கள் ஒரு நாளும் ஆண்டுக்கு ஒரு நாள் வீதமும் ஊர்ச் சபை

நியோகப்படி வரிவிதித்து தண்டிக் கொள்ளவும் அப்படி கொடுக்காதவர்களைப் பிணையம் எடுத்துக் கொள்ளவும் புதுக்குடையார் இடர் தீர்த்தார், மீ செங்கிளி நாட்டு மூவேந்த வேளான் மற்றும் ஆவினி எதிரிலி சோழ கண்ணகப் பேரரையன் ஆகிய அதிகாரிகளுக்கு வழங்கிய ஆணை பற்றி இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது.

1. ம் பெற்றசோதிநாள் விக்கிரம சோழவளநாட்டு விறைக்கூற்ற
2. த்து விறையான அகளங்கபுரத்து நகரத்தோம் இவூர் உடையார் திருப்பார்பதீஸ்வரமுடை
3. ய நாயனாற்குப் பூஜைக்கும் திருப்பணிக்கும் உடலாக உள்ளூரும் புறஞ்சேரியும் பிடாகைகளும்
4. முள்ளார் தத் தாம் குடும்பத்துக்கு உண்ணும் சிவனாமத்தார் ஒரு நாளும் பசானம் ஒரு நாளு
5. ம் புதுக்குடையார் இடர் தீத்தாரும் இக்கோயில் தானத்தாரும் உபயம் தண்டுவதென்ற ஊரவர் நி
6. யோகப்படி தண்டி கொள்ளவும் இப்படி தாராதாரை பிணையம் எடுத்து கொள்ள சொன்னோம் இப்படி
7. க்க இவை ஆவினி எதிரிலி சோழக் கண்ணக பேரையன் எழுத்து என்றம் புதுக்குடையான் எழுத்தென்று
8. ம் புதுக்குடையார் மீ செங்கிளி நாட்டு மூவேந்த வேளாண். ........

(கல்வெட்டின் தொடக்கப்பகுதி கிடைக்கவில்லை).

**29 : 4**

**இடம்** : மேற்படிக் கோயில் அர்த்தமண்டப உட்சுவர் (வடக்குப் பக்கம்).

**காலம்** : சோழர், கி.பி. 10- ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : இக்கோயில் சாலகம் (கோமுகம் - சிவலிங்க அபிஷேகத் தண்ணீர் வெளியே செல்லும் பாதை) செய்தவர் விறை உடையான் பெரியாழ்வான் என்று குறிப்பிடுகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ இந்த திருச்சா
2. லகம் செய்வித்தாந்
3. விறை உடையாந் பெரியாழ்வாந்.

**29 : 5**

**இடம்** : மேற்படிக் கோயில் மகாமண்டபத் தெற்குப்புற வாயில் அருவுகால்.

**காலம்** : சோழர், கி.பி. 12 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : இவ்வூர் நிலங்களுக்கு கூடுதல் வரிநிர்ணயம் செய்யக்கூடாது எனவும் வெட்டி என்ற இலவசப் பணி செய்வதில்லை எனவும் நகரத்தார்கள்

முடிவு செய்தனர். இம்முடிவை எதிர்த்து அதிகமாக வரிவிதிப்பது அல்லது இந்த முடிவை எதிர்ப்பது ஆகியவை செய்தால் விரையாக்கலி சண்டேஸ்வரர் திருவாணை, புவனமுழுதுடையார் ஆணை மறுத்தவர்களுக்கு விதிக்கப்பட்ட தண்டனை பெறுவார்கள்.

1. ஏற்றம் தரமி
2. டா தோமாகவு
3. ம் இன்நிலத்
4 துக்கு வெட்
5. டி செய்யக் க
6. டவதன்றாக
7. வும் இத்தர
8. ப்படிய ல்
9. லது ஏற்றந்
10. தரமிடுவா ரு
11. ம் மித்தரத்
12. துக்கு அழிவு
13. செய்வாரும்
14. விரையாக்க
15. லி ஸண்டே
16. ஸ்வரம் திருவா
17. ணை புவந மு
18. ழுதுடை
19. யாராணை.

29 : 6

இடம் : அரியலூர் மாவட்டம், வட்டம், சென்னிவனம் தீர்க்கபுரீஸ்வரர் கோயில் அர்த்தமண்டப மேற்கு, தெற்குச் சுவர் பட்டிகை.

காலம் : முதலாம் இராசேந்திரன், யா. 3, கி.பி. 1015.

செய்தி : வடகரை இராஜேந்திர சிங்க வளநாட்டு மேல்காரைக்காட்டு சென்னிவலக் கூற்றத்து நாட்டுப் பிரிவுகளின் கீழ் இவ்வூர் இருந்துள்ளது. இவ்வூர் திருச்சென்னிவலமுடைய மகாதேவர்க்கு இவ்வூர் பிராமணன் பாரதாயன் சைவாசாரியம் பண்ணவும், திருவிளக்கு எரிக்கவும் காணியாக இவ்வூர்ச் சபையினர் நிலம் வழங்கியுள்ளனர்.

1. ஸ்ரீகோப்பரகேசரிபம்மரான உடையார் ஸ்ரீராஜேந்த்ரசோழ தேவற்க்கு யாண்டு மூன்றாவது வடகரை ராஜேந்த்ர சிங்க வளநாட்டு மேல் காரைக்காட்டு சென்னிவலக் கூற்றத்து நெடுவாயிலான வீரசோழ (நல்லூர் ஊரோம்) இவ்வூர் திருச்சென்னிவலமுடைய மாதேவர்க்கு இவ்வூர் ப்ராஹ்மணன் பாரதாயன் (னுக்கு)
2. குடுத்த நிலமாவது இவ்வூர்ப் புதுக்குளத்துக்கு மேற்க்கடைய.... யோடும் அடைந்த .. (நொ)ந்தா விளக்கு... இந்நிலம் நீரோடட்டி
3. ....மாதேவ..... சைவாசாரியம்பண்ணச் சந்திராதித்தவற்க் காணியாக நீரோடட்டி காணியாகச் செய்து குடுத்தோம் இ ஸ்ரீகோயில்.... இது பந்மாஹேஸ்வர ரக்ஷை.

29 : 7

**இடம்** : மேற்படி கோயில் மகாமண்டபத் தெற்குச் சுவர்ப் பட்டிகை.

**காலம்** : இரண்டாம் இராஜேந்திரன், கி.பி. 1052-1064.

**செய்தி** : மன்னரின் மெய்க்கீர்த்தியின் ஒரு பகுதி உள்ளது.

1. கொல்லாபுரத்து ஜயஸ்தம்பம் நாட்டி பேராற்றங்கரை கொப்பத் தாகவமல்லனை....
2. கொண்டு விஜயாபிஷேகம் பண்ணி வீரசிம்மாசனத்து வீற்றிருந்தருளிய கோப்பரகேசரி ... (மீதிப்பகுதி சிதைந்துவிட்டது).

29 : 8

**இடம்** : மேற்படி கோயில் கருவறை மேற்குச் சுவர்.

**காலம்** : இரண்டாம் குலோத்துங்கன், யா. 4, கி.பி. 1137.

**செய்தி** : வடகரை விருதராஜ பயங்கர வளநாட்டு கீழ்க்காரைக்காட்டு சென்னிவலக் கூற்றத்து நெடுவாயில் ஊரவர்கள் திருச்சென்னிவல முடைய நாயனார் திருப்பள்ளியறை நாச்சியார்க்குப் பூஜை வழிபாட்டுக்கு நிலம் வழங்கியுள்ளனர்.

1. திஸ்ரீ பூமன்னுபதுபூத்த (மெய்க்கீர்த்திப் பகுதி) செம்
2. பொன் ஸிங்ஹாஸநத்து புவநிமுழுதுடையாளொடும் வீற்
3. றிருந்தருளிய கோவிராஜகேஸரி (பன்மரான திரிபுவன)
4. (ச் சக்கரவத்திகள் ஸ்ரீ) குலோத்துங்க சோழதேவற்கு யாண்
5. டு ச ஆவது வடகரை விருதராஜபயங்கர வளநாட்
6. டுக் கீழ் காரைக் காட்டுச் சென்னிவலக கூற்றத்து நெடு
7. வாயில் ஊற்குச் சமைந்து நெடுவாயிலுடையான் தி
8. ருவரங்க முடையாந் ஒற்றி கொண்டானும் குலோத்துங்
9. க சோழச் சென்னி நாட்டு வேளானும் நெடுவாயி(ல் உ
10. டையான்) ராஜேந்திரசோழச் செந்நி நாட்டு வேளானும்.....
11. .......
12. ழந் தேவந்நான எதிரிலிசோழச் சென்னி நாட்டு வேளா
13. னும் நெடுவாயிலுடையாந் திருவரங்க முடையா......
14. டையானும் இந்நால்வோம். .
15. ஆதிதண்டேசுர தேவற்க்கு நிலவிலையாவணஞ் செய்து குடுத்த பரிசாவது
16. வடகரை விருதராஜபயங்கர வளநா
17. ட்டு மேற்கானாட்டு பெண்ணாகடமான முடிகொண்ட
18. சோழச் சதுர்வேதிமங்கலத்துப் பிடாகை (காராணை)

19. கோட்டையில் இருந்து திருமுந் கைப்படி திருமுக கா
20. ணி பெற்ற பள்ளிச் சேந்தந் சுத்தமல்லனாந வாண
21. கோவரையந் திருச்செந்நிவலமுடைய நாயனார்க்குத் திருப்
22. ..................... னுடையாந் சோழதேவனான எதிரி........
23. வேளானும் நெடுவாயி ..............
24. யாந் .............. னும் இந்நால்வோம்
25. ................................. திருப்
26. பள்ளியறை நாச்சியாரை எழுந்தருளுவித்துக் கொண்டு
27 ............ விற்று பொருளறக் கொண்டு
28. ஸ்ராவணம் செய்துகுடுத்தோம் நெடுவாயிலுடையாந்............
29. ...... நெடுவாயிலுடையாந் நக்கந் கூத்தந்
30. ராசேந்திர சோழச் சென்னி நாட்டு வேளானும் நெடுவாயி
31. லுடையாந் சோழன் தேவனான எதிரிலிசோழ சென்னி
32. நாட்டு வேளானும் நெடுவாயிலுடையான் திருவரங்க
33. முடையானும் இந்நால்வோம்.

**29 : 9**

**இடம்** : மேற்படி கோயில் மகாமண்டபத் தெற்குச் சுவர்.

**காலம்** : இரண்டாம் குலோத்துங்கன், யா. 8, கி.பி. 1141.

**செய்தி** : மன்னர் இக்கோயிலுக்கு வந்து வழிபட்டு இறைவனுடைய திருவடிகளைத் தொழுது கோயில் வழிபாட்டு பூஜைகளுக்கு இறையிலியாக நிலம் வழங்கியுள்ளார். கீழ்க்காரைக்காட்டு நெடுவாயிலான வீர சோழ நல்லூர் திருச்சென்னிவலமுடைய மகாதேவர்க்கு வேண்டும் நிவந்தங்களுக்கு மேல்க்காரைக்காட்டு காவனூரில் நிலம் வழங்கி உள்ளார். இவ்வாணையில் பல வருவாய்த் துறை அலுவலர்கள் கையொப்பமிட்டுள்ளனர். காவனூர் சென்னிவனத்தின் அருகில் உள்ளது. சென்னிவனத்தின் ஒரு பகுதி சோழன்குறிச்சி என அழைக்கப்படுகிறது. இதுவே கல்வெட்டுக் குறிப்பிடும் நெடுவாயிலான வீரசோழநல்லூர் ஆகும்.

1. ஸ்வஸ்திஸ்ரீ பூமன்னுபதுமம் பூத்த (மெய்கீர்த்திப் பகுதி) செம்
18. பொந் வீரஸிங்ஹாஸநத்து புவநிமுழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய கோராஜகேசரிபத்மராந திருபுவந
19. சக்கரவத்திகள் ஸ்ரீகொலோத்துங்க சோழ தேவர்க்கு.... கோயில்......
20. ..........திருவடித்தொழுது இடுவித்த ஊர்கள் தேவதான இறை
21. யிலிட்டபடிக்கும் வேறுபிரிந்தபடிக்கும் உள்வரி கீழ் காரைக்காட்டு நெடுவா
22. யிலாந வீரசோழநல்லூர்த் திருச்செந்நிவலமுடைய மஹாதேவர்க்கு வேண்டும் நிமந்த

23. ங்களுக்கு இறுப்பதாக யித்தேவர்க்கு யிவ்வூரிக் கீழ்யிறை யிலியாய் வருகிற நிலமாய்

24. பழம் பேர் தவிர்த்து யாண்டு ஏழாவதின் எதிராமாண்டு முதல் தேவதான யிறையிலி......

**தொடர்ச்சி துண்டு கல்**

25. றளளருள தேவதாந இறையிலி இட்டபடிக்கு உள்வரி

26. கீழ்காரைக்காட்டு நெடுவாயிறு வீரசோழநல்லூர்

27. ச்செந்நிவலமுடைய மஹாதேவர்க்கு வேண்டும் நிமந்த

28. ங்களுக்கு இறுப்பதாக யாண்டு ஏழாவதிந் எதிராமாண்டு முத

29. ல் தேவதான இறையிலி இட்டபடிக்கு கீழ்க்காரைக்காட்டு

30. ...............

31. படியா ள்எறறயதாக 110 நூற்றொருபத்து ஒருகலனே

32. எழுகுறுணி நாநாழியும் மேல்காரைக்காட்டுக் காவனூரில விட்ட.....

33. ரை....ய சந்... ளய எண் கல ய நெல்லு...... கத இருநூற்றெண்

34. பத் தெண்கலநேய் தூணி நாநாழியும் யாண்டு ஏழாவதின் எதிராமாண்டு

35. முதல் தேவதாந இறையிலி இட்டமைக்கு இவை புரவரி ஸ்ரீகரண

**மூன்றாம் துண்டு**

36. ரணநாயகம் வாகையூருடையான் எழுத்து இவை புரவுவரி ஸ்ரீகரணநாயகம் தலைநாருடையாந் எழுத்து... ரையன் எழுத்து இவை சிங்கள

37. ராயன் எழுத்து இவை பங்களராயந் எழுத்து இவை புரவுவரி ஸ்ரீகரணத்து முகவெட்டி தைஞ்சாவூர் கிழவந் எழுத்து

**நான்காம் துண்டு**

38. இறையிலி இட்டமைக்கு இன்னித்துக்கு....

39. மைக்கு எண்கலப்படியால் வந்த நெல்லுக்கு.. யமாகி வ......... நெல்லுக்கு இறைபார்த்துக் கொள்வத ........

40. வெட்டி நே...... மரமுடையாந் எழுத்து இவை புரவுவரி ஸ்ரீகரண நாயகம்............ எழுத்து இவை புரவுவரி

**29 : 10**

**படம்** : மேற்படி கோயில் கருவறை வடக்குச் சுவர், பட்டிகை, குமுதம், மேற்குச் சுவர்.

**காலம்** : சோழர், கி.பி. 12-ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : இவ்வூர்ப் பெயர் சென்னிவனமான வித்யாதர சோழநல்லூர் என குறிப்பிடப்படுகிறது. இராஜேந்திர சோழப் பேராறு என்ற ஆறும், அதிகாரி தேவராஜன் என்பவர் பெயரும் குறிப்பிடப்படுகின்றன.

1. சென்னிவனமான வித்யாதர சோழ நல்லூர்.........
2. ......... இராஜேந்திர சோழப் பேராற்றுக்குத் தெற்கு..........
3. .... ..... தேவராஜன் நமக்குச் சொந்நமையில்..................
4. கொண்டு.......... .. திருக்காப்பு நீக்கி ............
5. திருநொந்தா விளக்கெரிக்க கடவராக.......

**29 : 11**

**இடம்** : மேற்படி ஊர் மேற்கு கல் நாட்டி கொல்லையில் உள்ள கல்வெட்டு.

**காலம்** : காளாக்கதோழ உடையார், துன்முகி வருஷம், கி.பி. 1621.

**செய்தி** : சென்னியை ஆண்ட தம்பிரான் கோயிலுக்கு காளாக்கத் தோழ உடையார் சர்வமானியமாக ஐம்பது குழி நிலம் வழங்கியுள்ளார்.

1. துன்
2. முக வருஷம் பங்குனி மீ க உ
3. ஸ்ரீமது சென்னி யாண்ட
4. தம்பிரானாற்கு காலாட்கள்
5. தோழ உடையார் புண்ணி
6. யமாக காலிங்கராயர் மே
7. ல் நந்தவானத்துக்கு சறு
8. வ மாநியக் கட்டளை யிட்ட
9. நிலம் குஉ ருய இந்த குழி
10. அன்பதும் சந்திராதித்தி
11. யவரையும் அனுபவி
12. த்துக் கொள்ளவும் உ
13. யிந்தப் புண்ணியத்தை
14. அகுதம் பண்ணின பேர்
15. கங்கைக் கரையிலே ஆ
16. யிரம் காராம் பசுவை கோ
17. தானம் பண்ணின பல
18. ன் பெறுவர்

# 30. வாலிகண்டபுரம் வாலீஸ்வரர் கோயில் கல்வெட்டுகள் - II*

இல.தியாகராஜன், அரியலூர்

30 : 1

**இடம்** : கருவறைத் தெற்குச் சுவர் (தட்சிணாமூர்த்தி கோட்டம் வலப்பக்க கால் பகுதி).

**காலம்** : சோழவரசன், இராஜகேசரி.

**செய்தி** : உகளூர் கூற்றத்து அத்தியூரைச் சேர்ந்த திருவாலி வீரைநாரணன் என்பவர் இக்கோயிலில் அரைவிளக்கு எரிய வைக்கப் பொன் வழங்கியுள்ளார். இதைப் பெற்றுக் கொண்ட நகரத்தார் தினமும் ஆழாக்கு நெய் வழங்கியுள்ளார். கல்வெட்டில் கொடையாளரின் பெயர் உள்ளிட்ட சில பகுதிகள் சிதைந்துள்ளன. இருப்பினும் கருவறை வட சுவரில் பரகேசரிவர்மனின் (உத்தமசோழன்) 13-ஆம் ஆண்டு கல்வெட்டில் இவர் குறிப்பிடப்படுகிறார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோராஜகேசரிபன்மற்கு . ..
2. ஆவது திருவாலீஸ்வரத்து மஹாதேவற்க்கு (உகளூற் கூ)
3. ற்றத்து அத்தியூருடையதிருவா(லி வீரை நாரணன் வைத்த)
4. அரை விளக்காற் பொன் ......
5. சை மேலை நகரத்தார்.....
6. நாராயத்தால் நிசதி ஆழாக்.....
7. ...... சந்த்ராதித்திய......

30 : 2

**இடம்** : அலங்காரமண்டப பீடத்தில் வைத்துக் கட்டுப்பட்டுள்ள துண்டுக்கற்கள்.

**காலம்** : முதலாம் இராசேந்திரன், யா : 5 அல்லது 6.

**செய்தி** : கல்வெட்டு பல துண்டுகளாக உள்ளது. இதில் முதலிரண்டு வரிகள் முதலாம் இராசராசன் கல்வெட்டாகும். அதன் கீழ் இராசேந்திரனின் கல்வெட்டு எழுதப்பட்டுள்ளது. அருமொழிதேவ ஜீனாலயத்தில் விளக்கு ஏற்ற பொன் கொடை வழங்கப்பட்டுள்ளது. வாலிகண்டபுரத்து மணிக்கிராமத்து வியாபாரிகள் கொடை வழங்கியுள்ளனர். கேரளாந்தகபுரத்து நகரத்தார், சங்கரப்பாடி

---

* இக்கோயிலில் உள்ள 33 கல்வெட்டுகள் ஆவணம் இதழ் 18ல் வெளி வந்துள்ளன. எஞ்சிய கல்வெட்டுகள் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன.

நகரத்தார் குறிக்கப் பெற்றுள்ளனர். நகரக்கல் என்ற எடைக்கல் குறிக்கப்படுகிறது. பல கல்வெட்டுகளில் பல்பழந்தீவு வெற்றியுடன் முடியும் இம்மன்னரின் மெய்கீர்த்தி 5 அல்லது 6-ஆம் ஆட்சி ஆண்டுகளில் எழுதப்பெற்றுள்ளது''இ.க.ஆ. 244/1902, 22/1895, 185/1902) எனவே கீழ்உள்ள மெய்கீர்த்திப் பகுதியும் பல்பழந்தீவுடன் முடிவதால் இக்கல்வெட்டின் காலம் 5 அல்லது 6 ஆம் ஆண்டுகள் எனக் கொள்ளலாம்.

துண்டு-1

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமன்னிவளர இருநிலமடந்தையும்
2 யரோங்கெழில் முடியு முன்னவர் பக்கல றென்னவர்
3 மற்றீவரண் கருதி இருததிய (செம்பொன்)

துண்டு-2

1 கொள்ளிப் பாக்கையும் நண்ணற் கருமுரண் ம
2. டகோப்பரகேசரிபன்மரான இராசேந்திர சோழதேவ
3. ண்டபுரத்து நகரக் கல்லால் பதினாற் கழஞ்சு
4. பொன் இருகழஞ்சரை இ-விளக்கொன்றுக்கு இது

துண்டு-3

1 மாங்கவர் தேவியரோங்கெழி....
2 புரத்து அருமொழிதேவ சீனாலைய
3. ற்பேர்த்த துளை ஒடொப்பது பட்டம்
4. வல் குடுத்தின

துண்டு-4

1. ண்ணைக் கடக்கமும் பொ..

துண்டு-5

1. ன்னர் பக்(கல்) ... டியுமிந்திரனாரமும் மெறிய
2 .... கொண்ட சோழப்பேரையன்
3. ..... பொன் ஐங்கழஞ்சேய் எழுமஞ்சாடியும்---கு ஒன்பது மாறிப்பட்டம் ஒன்

துண்டு-6

1 வாசியுஞ்சுள்ளிச் சூழ்மதி
2 தீவும் மாப்பொருதண்டாற் கொண்
3. ர்க்கு குடுத்த பொன்னிற் வாலிக
4. இதில் மோடன் ஐயாறன்

துண்டு-7

1. ந்தியும் ஊத ஐஞ்சு காசு கொண்டு திங்கள் இரண்டக்கம்
2. யும் ஒருகாளம் ஊதக்கொண்ட் காசு ஐஞ்சினாலும் பலிசை

துண்டு-8

1. இன்புற்று நெடுதிசை ஊழி இடைதுறை
2. கரை கரிகாலகன்ன வளநாட்டு வந்நாட்டு வாலிகண்டபுரம்
3. இவ்வூர் மணிக்கிராமத்து வியாபாரிய்கள் சந்திராதித்
4. நகரத்தோமு இ சங்கரப்பாடி நகரத்தோமு

துண்டு-9

1. பள்ளி உடையார் சாத்திவிளக்கு... யான் வசம்
2. காசு நிறை பெரியதேவர்க்குப் பிரபை
3. கேரளாந்தகபுரத்து நகரத்தோம்

துண்டு-10

1. று பெரிய எறிமணி ஒன்று தூபம்
2. ன்று பட்டமொன்று முகவை ஒன்

துண்டு-11

1. விளக்காறு பரிகல இசப்பானை இரண்டு
2. ப்பூ ஐஞ்சு நிறை கழஞ்சேய் முக்கால்

30 : 3

**இடம்** : மகாமண்டபத் தென்பகுதி மேற்குச் சுவர் (1008 லிங்கம் உள்ள அறை).

**காலம்** : வீர சோமேஸ்வரன் (கி.பி. 1233-1262).

**செய்தி** : போசள மன்னர் சோமீஸ்வரனின் தாதி (பணிப்பெண்) பதுமவ்வை என்பவர் மன்னரின் நலனுக்காக இக்கோயிலில் ஒரு சந்தி அமுது படைத்திட சிறுகூடல் ஊர் ஏரி கீழ் அரை நிலம் வாங்கிக் கொடையாகக் கொடுத்துள்ளார். இந்நிலத்தை வரி நீக்கி (இறையிலி) கோயிலுக்கு மன்னர் அளித்து இதுபற்றி கோயில் அலுவலர்களுக்கு (தானத்தார்) ஆணை (ஓலை) அனுப்பினார். இது சோழமன்னன் மூன்றாம் இராசராசனின் ஆட்சியின்போது செய்யப்பட்டது. மேலும் சோழர் மற்றும் போசளர் ஆகியோரின் கூட்டாட்சி இக்காலக் கட்டத்தில் இப்பகுதியில் நிலவியதை இக்கல்வெட்டுக் காட்டுகிறது. கல்வெட்டின் மீது சுவர் வைத்து மறைக்கப்பட்டுள்ளதால் சோழ அரசரின் ஆட்சியாண்டை அறியமுடியவில்லை.

1. ஸ்வஸ்திஸ்ரீ போசள வீரசோமீஸ்வரதேவரைசர் ஓலை வ(ன்னாட்டு வா)
2. லிகண்டபுரத்து உடையார் திருவாலீஸ்வரமுடைய நாயனார் (கோயில் தா)
3 னத்தார் கண்டு திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீஇராசராச (தேவற்கு..)
4 வதில் நம் தாதி பதுமவ்வை நமக்கு நன்றாக ஒரு சந்தி அமுது... (நா)

5. ச்சியார் ஸ்ரீகத்தத்து நீர்வாத்து இந்நாட்டு சிறுகூடல் ஏரிகீழ்....
6. த்து தேவதான இடையிலியாக இட்ட நிலம் அரை.....
7. க்கும் திருச்சூலதாபனம் பண்ணித் திருக்கற்றளியிலே......
8. ட்டி கல்வெட்டி கொள்வதே இதுமாறு மாறுவான் தந்மிணாட்டியை பு
9. லையற்கு குடுப்பாந் இது ஸ்ரீமாஹேஸ்வர ரக்ஷை//.

30 : 4

**இடம்** : நடராஜர் சன்னதி தெற்குச் சுவர் பீடம்.

**காலம்** : யா : 18. சுந்தரபாண்டியன், கி.பி. 1296.

**செய்தி** : திருவையாறுடையான் வில்லி மகதராயரான இருங்கோளன் என்பவர் இக்கோயில் இறைவன் ஏறி அருள திருவாடலரங்கும் திருப்பள்ளியறையும் செய்வித்துள்ளார். இவர் வாலீஸ்வரமுடைய நாயனார் கோயிலுக்குத் திருநாமத்துக்காணி இறைலியாக இருந்த பிரம்மதேசமான திருவாபரணமீட்ட பெருமாள் நல்லூரில் காணி உரிமை உடையவராக இருந்துள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோற்ச்சடபன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீஸுந்தரபாண்டிய தேவற்கு யாண்
2 டு யஅ-வது வெம்பார் நாட்டு கீழ்கூற்று வாலிகண்டபுரத்து உடையார் திருவாலீஸ்வரமுடைய னாயனார்
3. திருநாமத்துக் காணி யிறையிலியான பிரமதேசமான திருவாபரண மீட்டபெருமாள் நல்லூர் குடிநீங்காதிருநாமத்துக்
4. காணியுடைய திருவையாறுடையான் வில்லி மகதராயரான இருங்கோளனேன் இன்னனயனார்க்
5 கு ஏறியருள திருவாடரங்கும் திருபள்ளி அறையும் செய்வித்தேன் என் தன்மம்.

30 : 5

**இடம்** : மகாமண்டபத் தென்சுவர் பட்டிகை.

**காலம்** : விஜயநகர், சகம் : 1311, சுக்லவருஷம் கி.பி.1389.

**செய்தி** : கற்பாடி (கல்பாடி) ஊரைச் சேர்ந்த சக்கரவர்த்தி என்பவர் இக்கோயிலில் ஸ்ரீபலிபீடம் மற்றும் கிணறு ஆகியவற்றை அமைத்துக் கொடுத்துள்ளார். கோபுரத்துக்கு அருகில் உள்ள குளம் இவர் அமைத்தது எனக் கொள்ளலாம். இச்செய்தி பாடல் வடிவில் எழுதப்பெற்றுள்ளது.

1. திழவாலிநாதற்கு சிறி பெலி பீடமுந்தான் சமைத்து மருவார் பொழிலுங் கிணறுங் கண்டான் வனசத்துறையுந் திருமாது சேர்புயன் கற்பாடி ஆதி செகம்புரந்து

2. தருவாகிய கொடைச்சீரன் எங்கோன் சக்கரவத்தியே உ ஸகாப்தம் சத 1311- இதன் மே... ஸுக்ல ஸம்வத்ஸரத்துச் செயதான் ஸ்ரீமாஹேஸ்வர ரக்ஷ.

30 : 6

இடம் : மகாமண்டப கிழக்குச் சுவர் பட்டிகை (நுழைவாயில் வலப்பக்கம்).

காலம் : எறமாஞ்சி செங்காயபத் திம்மையநாயக்கர், சகம் 1418 நள வருஷம், கி.பி. 1496.

செய்தி : இக்கோயில் பூஜைத் திருப்பணிக்கு அகரப்பற்று (பிரதேயம்) கோயில்பற்று (தேவதானம்) உள்ளிட்ட பகுதிகளில் வசிக்கும் குடும்பங்கள் (குடி) செலுத்தவேண்டிய பண அளவு இப்பகுதி நாட்டார்களால் நிர்ணயிக்கப்பட்டமை.

1. சுபமஸ்து ஸ்வஸ்திஸ்ரீ தம்மயறாயர் ப்ருதிவி ராஜ்யம் பண்ணி அருளா நின்ற சகாத்தம் 1418 இதன் மேல் செல்லா நின்ற நள ஸம்வத்
2 ஸரத்து மேஷ நாயற்று அபரபக்ஷத்து சதுர்த்தியும் சுக்கிற வாரமும் பெற்ற அனுழ நாள் ஸ்ரீமது நரஸோகர் கண்ட வங்கிநாராயணன் எறமாஞ்
3. சி செங்காயப... கரிகாலகந்த வளநாட்டு வன்நாடான வெண்பார் நாட்டு வன்னாட்டு நாட்ட
4. வரோம் நாயனார் திருவாராதனை திருப்பணிக்கு இன்னாட்டுக்குள்ள அகரப்பற்று கோயிற்பற்று தான
5. மானியம் இறையிலி மலைப்பற்று நாடு சேர குடிக்கு ஒரு பணம் குடுக்கத் தக்கது ஆகவும் கல்வெட்டிக் குடுத்தோம்
6. யின்னாட்டவரோம் யிந்த தன்மத்துக்கு யாதொருத்தர் அகிதம் பண்ணின அவர்கள் கெங்கைக்கரை
7. யிலே காராம் பசுவைக் கொன்ற பாவத்திலே போகக் கடவர்களாகவும் இப்படிக்கு நாட்டவர் பணி
8. யால் நாட்டுக் கணக்க......

30 : 7

இடம் : மகாமண்டப வடக்கு-மேற்கு சுவர் பீடம்.

காலம் : கிருஷ்ண தேவமகாராயர், சகம் 1436. பவ வருஷம், கி.பி. 1514.

செய்தி : இக்கோயில் நாயகர் திருமுன் மண்டபத்தில் வன்னாட்டு நாட்டாரும் கைக்கோள முதலிகளும் கூட்டம் கூடி முடிவெடுத்து ஆணை பிறப்பித்தனர். வாலிகொண்டாள் என்ற பெண்மணி குறிப்பிடப்படுகிறார்.

1. உ சாகரஞ் சூழ் வைய்யகத்துத் தண்டீசன் கருமன் ஆ(ராய்)தலால் பண்டே அறஞ்செய்தான் செய்தான் அறங்காத்தான் பாதந்

திறம்பாமற் சென்னியின் மேல் வைய்த்து திருக்காவேரிக்கு வடகரை கரிகாலகன்ன வளநாட்டு வன்னாட்டு வெண்பாநாட்டு வாலிகண்டசோழபுரத்து நாயனார் திருவாலீசுரமுடைய நாயனார் கோயிலுக்கு தேவகாரியப் பிறதானரான ஆதிதண்டேசுரர் திருமுகம்மாவனம் ஸ்ரீமன்மாக மண்டலேசுரன் சதுற்சமுத்திராபதி ஸ்ரீவீரப்பிறதாபரான கிஷ்ணதேவ மகாராயர் பிறுதுவிராச்சியம் பண்ணி அருளா

2 நின்ற சகாற்தம 1436 - இதன் மேற் செல்லா நின்ற பாவ சங்கடகரத்து உத்தராயணத்து மகர நாயற்று பஞ்சமியும் மிறுகசீரிஷமும் பெற்ற சுக்கிற வாரத்து நாள் இன்னாயனார் திருக்கோவிலில் நாயகர் வாசலில நாயகர் திருமுன்மண்டபததில் இன்னாடு நாட்டவரும் நாட்டவரும் கோயில் தானசமையம் நால்வகைக் கைய்க்கோளமுதலியள் பரிகலத்தாரும் குறைவறக் கூடி நிறைவற இருந்து பொருட் கொடு இசைந்து சண்டேசுரத் திருமுகம் குடுத்தபடி செவத்தி சந்நிதி ஆன ஆண்ட பெருமாள் துலுக்கணன் மெச்சிதுக்கச்சி பெரிய நாச்சி வாலிகொண்டாள்.

30 : 8

இடம் : இரண்டாம் கோபுர கிழக்கு பீடம் (வாயில் வலப்பக்கம்).

காலம் : கிருஷ்ண தேவமகாராயர் காலம், சித்திரபானு வருஷம், கி.பி. 1522.

செய்தி : திருவிழா நாட்களில் சுவாமி புறப்பாடு செய்யப்படும் போது குடைபிடிப்பது வழக்கம். இத்தகைய பணியைச் செய்யும் மூன்று நபர்களுக்கு இசனை, தேவையூர் ஆகிய ஊர்களில் 500 குழி நன்சை நிலத்தைப் பெரிய எல்லாப்ப நாயக்கர் வழங்கியுள்ளார். அந்நிலம் குடை ஆள் ஜீவிதம், கடை ஆள் மானியம் என அழைக்கப்பட்டுள்ளது.

1 சுபமஸ்து சித்திரபானு ௵ சித்திரை ௴ யரு உ ஸ்ரீபெரிய
2 எலல(ப்ப) நாயக்கர் தானத்தார் வாலிநாயக பட்டற்கும்
3. தேவர் தண்ட நம்பிக்கும் வாலிநாயகப் பிரியற்க்கும் குை
4 ட ஆள்சீவிதம் இசனை நன்செய் நிலத்திலே முன்னூறு குழியும்
5. தேவையூர் நன்செய் நிலத்திலே இருனூறு குழியும் ஆக அஞ்ஞூறு குழியும்
6 மூவர்க்கும் கொடை ஆள மானியம் ஆக கட்டளை
7. இட்டபடியாலே சந்திராதித்ததியவரையும் அனு
8. பவித்துக் கொள்ளவும்

30 : 9

இடம் : அம்மன் சன்னதி மேற்கு சுவர் பீடம்.

காலம் : வேங்கடபதி தேவமகாராயர், சகம் 1544, துந்துபி வருஷம், கி.பி.1622.

செய்தி : கீரனூர் உலகங்காத்தவாணாதரையர் சதுர்வேதிமங்கலம் என அழைக்கப்படுகிறது. இவ்வூரிலிருந்த வீடு மற்றும் நிலங்களை சிலர் இக்கோயிலுக்கு அபிஷேக கட்டளைக்கு கொடுத்தது பற்றிக் கூறுகிறது. கோயில் அலுவலராகக் கண்காச்சி திருமலை ரெட்டியார் குறிப்பிடப்படுகிறார். இவ்வூரின் எல்லைகளாக மேலனூர், சிறுதொழுவூர், இரையூர், நீவாநதி (வெள்ளாறு) ஆகியவை காட்டப்பட்டுள்ளன.

1. ஸ்ரீமத் ஸ்வஸ்தி ஸ்ரீமந மஹாமண்டலேஸவரந் ஹரி ஹர ராயவிபாடந் பாஷைக்குத் தப்புறாயர் கண்டந் மூவராய கண்டந் ஸண்டபரஸண்டந் கண்டனாடு கொண்டு கொண்டனாடு குடாதான் பூர்வதக்ஷிண பச்சிமோத்தர ஸதுஸமுத்ராதிபதி வேங்கடபதி தேவமஹாராயர் ப்ருதிவிராஜ்யம் பண்ணி அருளா நின்ற ஸ்வஸ்திஸ்ரீ ஸ

2. காப்தம் 1544- இதின் மேல் செலலா நின்ற துந்துபி ஸம்வத்ஸரத்து மேஷ நாயற்று பூர்வபக்ஷத்து த்ருதியும் ஸோமவாரமும் பெற்ற ரேவதி ரக்ஷத்ரத்து னாள் காவேரி வடகரை விருதராஜபயங்கர வளனாட்டு மேற்கால் னாட்டு இருங்கோளப்பாண்டி வளனாட்டு வெண்பார் னாடாகிய உகளூர்

3 கூற்றத்து ப்ரஹ்மதேஸமாந கீரனூருக்கு பரதினாமமான உலகஙகாதத வாணாதரையர் ஸதுாவேதிமஙகலத்து கீரனூர் ஸோமயாஜியார் கோலவராக கவிபெற்றாரும் ஆச்சாம்பிள்ளை பெற்றாரும் --- நாராயணந் (புத்ர) வேதாயி உள்ளுட்டாரும் அனந்தர் மூவராபுக்கு ஆயி அம்மனும் இவர்கள் எல்லாருமாக பிலப்பரட்டி திம்மிரட்டியார் புதர

4. ந் கண்(க)காசசி திருமலை ரட்டியார் அவர்களுக்கு (உபாக்ஷயயரா பகுகை) குடுத்தபடி இற்ற னாள் யெங்களுடைய கராமம் முழுதும் வரும பாகம் அ-ம் மனை அ-ம் உபகக்ஷயயா பூர்வம் பண்ணக் குடுத்தபடியினாலே பாக விபரம் கோலவராக பெற்றார் பாகம் -ரு-க்கும்-மனை ரு-க்கும் ஷெ யாா (பௌத்ரந்) னாராயணந் புக்கு இவதாயி உள்ளுட்டார் பாகம்-க-ம-மனை-க-ம்

5 அனந்தாழ்வார் ஆயி அம்மந் பாகம -ரு-மனை அரையும் ஆச்சான் பிள்ளை பெற்றார் பாகம் க-மனை ஒன்றும் ஆக பாகம் எட்டும் மனை எட்டும் உபயாங்கமாக நிச்சயிற்ற -- இந்த பொன் னூற்று தொண்ணூற்று இரண்டும கண்க்காச்சி ரட்டியார் அவர்கள் குடுத்து வாலீஸ்வரர்க்கு அபிஷே

6. க கட்டளைக்கு சேற்றபடியினாலே ஆசந்த்ராக்கம் ஸ்தாயி ஆக புத்ர பௌத்ர பரம்பரை ஆக தானாதி விந்மய விக்ரயங்களுக்கும் யோகயமாக அனுபவிற்றுக் கொள்ள கடவராகவும் இதுக்கு த்ரவ்யச் சிலவு வாலிகண்டபுரம் னோட்டம் கையிலாசன்

பார்வையாக பற்றிக் கொண்டபடியினாலே இதுவே த்ரவ்யச்சிலவ்வு (கை இடாலகடகல்ல வாகவும்) க்ராமம் உலகங்

7. காத்த வாணதரையர் ஸதுர்வேதிமங்கலத்தில் கீரனூர் அகரம் முழுதும் ஸகல ஸமுதாய ப்ராப்தியும் னாந்கெல்லைக்குள்பட்ட மேலனூர் எல்லைக்கு கிழக்கு சிறுதொழுவூர் எல்லைக்கு மேற்க்கு யிரையூர் எல்லைக்கு வடக்கு நீவாவாற்றுக்கு தெற்கு னாந்கெல்லைக்குள் பட்ட ஸகல ஸமுதாய ப்ராப்தியும் நிதி நிஷேப ஜலபாஷாண

8. ........ என்கின்ற அஷ்டபோக தேஜஸ்தலாம்யங்களம் உள்படப் பெற்றக் கொண்டு கண்க்காச்சி ரட்டியாரவர்கள் வாலீஸ்வரருக்கு அபிஷேக கட்டளைக்கு கொண்டு சேற்றபடியினாலே ஆசந்த்ராக்க ஸ்தாயியாக புத்ர பௌத்ர பாரம்பரையாக தாநாதி விநிமய விக்கிரயங்களுக்கும் யோக்யமாக ஆசந்திராதித்யவரையும் அநுபவிற்றுக் கொள்ளக் கடவராகவும்

9. இந்த உபக்ஷ வையார் எபதின யெக்க ஒலைக்குற்றம் வரிமாறாட்டம் வாசகப் பெழை முறி நெரிசல் மருப்பு மாயேறு வெட்டு சிதுக்கு எக்குற்றம் உண்டானாலும் குற்றமென்று சொல்லக் கடவதல்லவாகவும் இப்படிக்கு கண்க்காச்சீரட்டி திருமலை ரட்டியார் அவர்களுக்கு கீரைனூர் ஸோம

10. யாஜியார் பெற்றாரும் ஆச்சாம்பிள்ளை பெற்றாரும் வேதாயி ஆயி அம்மனும் (உபக்ஷயதாரா பூர்வத்ருகை) பண்ணிக்குடுத்தோம் உ.

**30 : 10**

**இடம்** : பிரசன்ன வெங்கடேசப் பெருமாள் கோயில் ஆண்டாள் சன்னதி கருவறை-அர்த்த மண்டபத் தென்சுவர் முப்படைக் குமுத பீடம்.

**காலம்** : இராமதேவமகாராயர், சகம் 1551, விபவ வருஷம், கி.பி. 1629.

**செய்தி** : சேலம் சின்னமநாயக்கர் பிரசன்ன வெங்கடேச பெருமாள் கோயிலில் சூடிக்கொடுத்த நாச்சியார் (ஆண்டாள்) சன்னதி, அர்த்தமண்டபம், திருமதில், முதல் பிரகாரம் ஆகியவற்றைக் கட்டி நாச்சியாரையும் பிரதிஷ்டை செய்து பூஜை வழிபாட்டுக்குத் தம்பை ஊருக்கு வெங்கடேஸ்வரபுரம் எனப்பெயரிட்டு ஊர் முழுவதையும் இறையிலியாக வழங்கியுள்ளார்.

1. ஸ்வஸ்தி ஸ்ரீமந் மஹாமண்டலேஸ்வரந் பூர்வதக்ஷிண பச்சிமோத்தர ஸதுச்சமுத்ராபதி ஸ்ரீவேங்கடபதிராயர் ஸ்ரீராமதேவஹாராயர் ப்ருதிவிராஜ்யம் பண்ணி அருளாநின்ற ஸாலிவாஹன ஸகாப்தம் 1551 இதின் மேல்ச் செல்லாநின்ற விபவ ஸம்வத்ஸரத்து வ்ருஷப னாயற்று பூர்வபக்ஷத்து த்ரயோதஸியும் ஸோமவாரமும்

2. பெற்ற அனுராத நக்ஷத்ரத்து னாள் காவேரிவடகரை கரிகாலகன்ன வளனாட்டு வெண்பார் னாட்டு வாலிகண்டபுரத்து பெருமாள் ப்ரஸன்ந வெங்கடேஸ்வர ஸ்வாமியாருக்கு நரலோகர் கண்ட

வங்கினாறாயண சேர சோள பாண்டிய வல்லாளராய மநோபயங்கர யாதவராய ஸ்தாபநாச்சார்ய----- பதினெட்டு மன்னிய

3. ர் கண்டரான செவிடு குல வம்ஸோதாரகரான சேலம் சின்னம னாயக்கர் புத்ரறான எறம்மாள் பரப்ரஸாகராந க்ருஷ்ணப்ப னாயக்கர் அய்யன் அவர்கள் உண்டாக்கிச் செய்ததிருப்பணி சூடு குடுத்த னாச்சியார் ஸந்திதி கர்பக்ரஹம் அர்த்தமண்டபமும் திருப்ரதிஷ்டையும் சற்று திருமதின் முதல் ப்ரகாரமும் ஸ்வாமியாருக்கு திருவிளையாட்டு க்ராமம் தம்

4. பைக்கு ப்ரதிநாமமாந வெங்கடேஸ்வரபுரமும் மற்றும் இது முதலான திருப்பணிகள் எல்லாம் குறவறச் செய்து குமுதப்படையில் கல்வெட்டிக் குடுத்தபடி ஸ்ரீவெங்கடேஸ்வர ரக்ஷை உ அண்ணாமலை பட்டன் சதா சேர்வை உ.

**30 : 11**

**இடம்** : அம்மன் சன்னதி வடக்குச் சுவர் குமுதப்படை.

**காலம்** : கி.பி. 16-17 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : இக்கோயிலில் பணி செய்து வந்த கொல்லன் வாலி ஆசாரி என்பவருக்கு ஆண்பிள்ளை வாரிசு இல்லை. எனவே வாலியூர் (வாலிகண்டபுரம்) கருப்பன் ஆசாரியின் மகன் சின்னான் ஆசாரி என்பவரை வாலி ஆசாரியின் தத்துப் பிள்ளையாக (மஞ்சனி பிள்ளை) கொண்டு வாலி ஆசாரியின் பணி உரிமைக் காணியாட்சியை சின்னானுக்குக் கோயில் அதிகாரிகள் (தலத்தார்) வழங்கியமை.

1. உ கொல்ல வாலி ஆசாரிக்கு புத்திரன் பிள்ளையில்லாத படியினாலே வாலியூர் கருப்பன் ஆசாரி மகன் சின்னான் ஆசாரி

2 யை மஞ்சனி பிள்ளையாக வாலி ஆசாரி காணியாக்ஷி புத்திர புத்திர பாரம்பரியமாக நடக்கத் தக்கதாக தலத்தார் கட்டளை

3. யிட்டபடியினாலே சின்னான் ஆசாரி புத்திரன் வாலி ஆசாரி சதாசேர்வை உ.

# 31. திருத்துறையூர்க் கல்வெட்டுகள்

கோ.விசயவேணுகோபால், புதுச்சேரி

31 : 1

இடம் : கடலூர் மாவட்டம் பண்ருட்டிக்கருகில் பெண்ணையாற்றின் வடகரையிலுள்ளது திருத்துறையூர். இவ்வூர்ச் சிவனைப் போற்றிச் சுந்தரர் பதிகம் ஒன்று பாடியுள்ளார். இக்கோயிலில் பத்துக்கும் மேற்பட்ட கல்வெட்டுகள் காணப்படினும் மத்தியத் தொல்லியல் துறையினர் ஒரேயொரு கல்வெட்டினை மட்டும் (1950-51, 107) படியெடுத்துள்ளனர். இவற்றின் வாசகம் இன்னமும் வெளியிடப்படவில்லை. கல்வெட்டுகளின்மீது சுண்ணம் முதலியன பூசப்பட்ட நிலையில் நன்றாகக் காணும் நிலையிலுள்ள கல்வெட்டுகள் மட்டும் படிக்கப்பட்டன.

காலம் : முதலாம் குலோத்துங்கன், யா. 3, கி.பி. 1073.

செய்தி : கல்வெட்டில் வரும் மெய்க்கீர்த்திப் பகுதி (பொ)பாற்பமைந்த முடி சூடிச் செம்பொன் விரஸிம்ஹா...) வீரராசேந்திரனின் புயல்வாய்த்து வளம் பெருக எனத் தொடங்கும் மெய்க்கீர்த்தியில் பொற்பமைந்த முடி புனைந்து" என வருகிறது. எனவே தொடக்கத்தில் முதலாம் குலோத்துங்கன் தன் பாட்டனின் மெய்க்கீர்த்தியையே தழுவி யுள்ளான் போலும். ஆட்சி யாண்டு 3 என்பதால் தொடக்கத்தில் இவ்வாறு செய்திருக்கலாம் எனக் கருதலாம். விளக்குக்கொடை பற்றிக் கூறுகிறது.

1. ........ ......
2. ........பாற்பமைந்த முடி சூடிச் செம்பொன் விரஸிம்ஹா....
3. துங்கசோழதேவற்கு யாண்டு 3 ஆவது ஸிம்ஹ நாயற்றுப் பதினா....
4. டைய நாயனாற்கு இந்நாட்டுக் கிழாமுர் நாட்டுக் கூட.... ராசநாராயணன் எழிசை மோகனான ஜநநாதக் கச்சியராஜன் வைத்த திருநுந்தா விளக்கு நாலு...
5. னொம் இக்கோயிலில் திருவுணாழிகை ...
6. .. . இது பன்மாஹெச்$_2$வரக்கைஷ || உ

31 : 2

இடம் : தெற்கு அதிட்டானச் சுவர்.

காலம் : இரண்டாம் குலோத்துங்கன், ஆட்சி யாண்டு 10, கி.பி. 1143.

செய்தி : நிலக்கொடை அளித்ததைக் கூறுகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ பூமேவி வளர தி(ருப்பொ)
2. பான் மாது புணர நா(மேவுக)

3 லைமகள் நலம்பெரிது (சிறப்ப)

4. விஜைய மாமகள் வெ(ல்புயத்)

5. திருப்ப இசையுஞ்செல்வி....

6 ண்டிசை விளங்க நிருபர் வந்திறைஞ்ச நினில மடந்தையைத் திருமணம் புணர்ந்து...

7 தனமணி முடி சூடி மல்ல ஞாலத்துப் பல்லுயிர் எல்லாம் எல்லையிலின்பமியல்வி லெய்த வெண்கடை நிழற்செ .

8 செ(ங்கொ)லொச்சி வாழி பலூழி யாழி நடப்பச் செம்பொன் விரஸிங்ஙாஸனத்து புவனமுழுதுமுடையாளொடும் விற்றிருந்த(ருளியசு(கே)

9 கூாவிராஜகேசரி பந்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீகுலோத்துங்க சோழ தே$_3$வக்கு யாண்டு பத்தாவது

10 ஐ வளநாட்டு திருமுனைப்பாடி திருத்துறையூர் தவநெறி ஆளுடையார் தேவதானம் கயற்பாக்கத்து

11. தேவகந்மி பங்காறும் விட்டு கல்வெட்டுவிததோம் இவிருவோம் ச$_2$ந்த்$_3$ராதி$_3$த்யவத் செல்லக்கடவதாக

31 : 3

**இடம்** : மேற்படி சிவன் கோயில்.

**காலம்** : இரண்டாம் குலோத்துங்கன், 11, கி.பி. 1144.

**செய்தி** : நிலக்கொடை அளித்ததைக் கூறுகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ த்ரிபுவனசக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு பதிந்நொன்றாவது சோழவளநாட்டு திருமுனைப்பாடி நாட்டு பாக்கை நாட்டு ப்$_3$ரஹ்ம..

2. தெற்கு இந்நிலத்துக்கு கிழ்பாற்கெல்லை இராயூர் தா$_2$மோதிர பட்டந் நிலத்துக்கு மேற்கு தெந்பாற்கெல்லை திருத்துறையூர் நிலத்துக்கு வடக்கு மேல்பா(ற்கெ)ல்

3. ன் அருமொழிமுவெந்தவேளான் திருத்துறையூர் மஹாதே$_3$வர்க்கு சந்திராதித்தவல் இத்தி .கக்கடவதாக இன்நிலங் (கு)டுத்தமையில இன்நிலத்தால் வந்த பலிரை(ச)....

4. றக்கொண்டு இறை இழித்து குடுத்தொம் திருத்து(றையூ)ர மஹாதே$_3$வர் கந்மிகளுக்கு இவ.... நெநம்பிச்சருப்பெதிமங்கலதது ஸபை$_4$யோம் இந்நிலங். ...

31 : 4

**இடம்** : மேற்படி சிவன் கோயில்.

**காலம்** : இரண்டாம் இராசராசன், 6, கி.பி. 1152.

**செய்தி** : நந்தா விளக்கு கொடை பற்றிக் கூறுகிறது.

1 ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீ த்ரிபு$_4$வநச் சக்கரவத்திகள் ஸ்ரீ ராஜராஜதே$_3$வற்கு யாண்டு ஆறாவது ராஜ
2. ராஜவளநாட்டுத் திருமுனைப்பாடிக் கயற்பாக்கை நாட்டுத் திருத்துறைத்தவ
3. நெறி ஆளுடையாற்கு இவ்வூர் கைக்கோளன் அபிமான சில ஜயங்கொண்டாந்
4. தவநாயகநென் இத்தேவற்கு சந்த்ராதித்தவரை எரிவதாக வைத்த திருநுந்தாவி
5. ளக்கு ஒந்று இவ்வொன்றுக்கும் விட்ட ஆடு தொண்ணூற்றாறு இத்தொண்ணூற்றாறு
6. ம் கைக்கொண்டு சந்த்$_3$ராதித்தவரை எரிக்க கடவ. ..
7. காணி உடைய சிவப்$_3$ராம்மணரோம் இத் தந்மம் ஸ்ரீபந்மாஹெச்$_2$வர ரக்ஷை

31 : 5

**இடம்** : மேற்படி சிவன் கோயில்.

**காலம்** : முதலாம் குலோத்துங்கன், 15, கி.பி. 1085. கல்வெட்டு வெட்டப்பட்ட காலம் இரண்டாம் இராசராசன், 5, கி.பி. 1151.

**செய்தி** : முதலாம் குலோத்துங்கனின் 5ஆம் ஆண்டுக் கல்வெட்டு இரண்டாம் இராசராசன் காலத்தே கி.பி.1151 இல் கற்றளியாக மாற்றப்பட்ட பொழுது மீண்டும் வெட்டப்பட்ட செய்தி கல்வெட்டில் குறிப்பிடப் படுகிறது. எனவே இக்கோயில் கற்றளியாக இரண்டாம் இராசராசன் காலத்தே மாற்றப்பட்டமை தெளிவாகிறது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ இ விருத்தம(ா)ந மண்டபத்தில் கல்வெட்டாய் நின்ற கறகய் செங்கல் மண் தவிர்த்(து) திருக்கற்றளி செய்கையிநால் வாங்.... பழய கல்வெட்டுபடி த்ரிபுவன சக்கிரவர்த்திகள் ஸ்ரீ இராஜராஜ தே...யாண்டு ரு வது
2. கல்வெட்டுபடி ஸ்வஸ்திஸ்ரீ த்ரிபு$_3$வனச் சக்கிரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்கசோழ தேவர்க்கு யாண்டு யரு ஆவது இராசேந்த்ரசோழவளநாட்டுத் திருமுனைப்பாடி கயற்பாக்கை நாட்டு கரும்பூர் பள்ளி ஆதிராஜந் மறைக்காடனாந அவிய
3. நூரந் உருப்பெரியரையனும் சூற்றி அப்பி ஆன முனைப்பாடி நாடாழ்வாநும் இவ்விருவோம் எங்களில் பகைத்து எய்தடத்து கிட்டம்பில் விட்ட....ப்பாடிக்கு ஆக அவியனூர் நாட்டு பேர் அரையன் இத்திருத்துறையூர் மஹாதே$_3$வர்க்கு வைத்த தி
4 ரு நொந்தாவிளககு இரண்டுக்கு அறுநூற்றெண்பது........

31 : 6

**இடம்** : மேற்படி சிவன் கோயில்

**காலம்** : விசயநகர மன்னன் அச்சுதேவ மகாராயர், சகாப்தம் 1456, கி.பி. 1534.

**செய்தி** : துவாரபாலகரை எழுந்தருளிவித்தது.

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸ்ரீமன் மஹாமண்டலேசுர மேதினி இசுர கண்(டன்) சாளுவ.....
2. யர கண்டன்முவதீராயர கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட (ந)ாடு கொடாதான் பூறுவ தெட்(சி)ணப பஉ..
3. உத்திர சக்தி சமுத்திராதிபதி கெசவேட்டை கண்டருளிய ஸ்ரீவிரப்பிறுதாவ அச்சுந்த தேவமக காயிரா(யர்)
4. பிரிதிவி ராச்சியம் பண்ணி அருளாநின்ற சகாற்த்தம் 1456 க்கு மேல் செல்லாநின்ற பிலவ வரு
5. யரு உ ராசாதிராச வளநாடு திருமுனைப்பாடி நாடு வழுதிலம்பட்டு உசாவடி கருமுறபற்ற
6. .... தரை திருத்துறையூர் நயினார் தூவன்நெறி ஆளுடை. ஸ்ரீகோயில்...
7. ....ங்கய மாணிக்க... துவாரபாலகரை எழுந்தருளப்பண்ணு .. றையிலி மானியம் ஆக ...

31 : 7

**இடம்** : மேற்படி சிவன் கோயில்.

**காலம்** : விசயநகர மன்னர் அச்சுதேவ மகாராயர், சகாப்தம் 1456, கி.பி. 1534.

**செய்தி** : செய்தி முழுமையாக இல்லை.

1. .....மண்டலேசுர மேதினி மிசுர...
2. மர கண்டன் முவதீராயர கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடான் பூறுவ தெட்(சி)ண.....
3. பச்சி - சத்தி சமுத்திராபதி கேச வேட்டை கண்டருளிய ஸ்ரீ விரப்பிறுதாப அச்சுந்த தேவ மாகயிராம ...
4. பிரிதிவிராச்சியம்பண்ணி அருளாநின்ற சகாற்தம-1456 க்கு மேல் செல்லாநின்ற பிலவ வரு...
5. ....யரு உ ராசாதிராசவளநாடு திருமுனைப்பாடி நாடு வழுதிலம்பட்டு சாவடி கருமுறபற்று ..
6. .... வடகரை திருத்துறையுர் நயினார். .

31 : 8

**இடம்** : மேற்படி சிவன் கோயில்.

**காலம்** : விசயநகர மன்னர். கி.பி. 16 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : நிலக்கொடை.

1. ஸ்வஸ்தி ஸ்ரீமந் மஹாமண்டலேச்$_2$வரந் அரியராய விபாடன் பாஷைக்கு தப்புவ ராயர் கண்டன் முவராயர் கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான் இராசாதிராச பரமேச்$_2$வரன்
2. த்து நாள் இராசஇராசவள நாட்டு திருமுனைப்பாடி நாட்டு வழுதிலம்பட்டு உசாவடி திருவதி நன்மை கருமுர்ப்பற்று தனியூர் திருத்துறைஊர் உடையார் தவநெறி ஆளுடைய தம்பிரானா
3. படிக் குடுததமையில் இந்த தன்மத்துக்கு அகிதம் பண்ணினவர்கள் கெங்கை கரையிலே காராம் பசுவை கொன்ற தோஷத்திலும் தங்களிட குருக்களை கொன்ற தோஷத்திலும்....

0 : 9

**இடம்** : மேற்படி சிவன் கோயில்.

**காலம்** : விசயநகர மன்னர் அச்சுத தேவ மகாராயர், கி.பி. 16 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : நிலக்கொடை.

1. ...கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான் இராசாதிராசன் இ(ரா)ய பரமேச்$_2$வரன் வச்சுந்ததே$_3$வ மகா இராய பிறுதிவி இராச்சியம் பண்ணி அருளாநின்ற காளத..
2. ....மும் பெற்ற திருவோணத்து நாள் இராசாதிஇராச வளநாட்டு திருமுனைப்பாடி கயபாக்கநாட்டு வழுதிலம்பட்டுசாவடி திருவதிச் சீமை திருத்துறைஊர் தம்பரனார் தவநெறியாளு....
3. ....யாலே சந்திராதித்தவரை.... காணியாக குடுக்க கடவதாகவும் முதலியள் தானசூரற்கு ..யத்துக்கு நஞ்சையிலே முன்று மா நிலமும் பூஞ்செ....ல்
4. ....ராம் பசுவை கொன்ற தோஷத்திலும் தங்களிட குருக்களை கொன்ற தோஷத்திலும் தங்களிட மாதா பிதாவை கொன்ற தோஷத்திலும் போக கடவதாகவும்

# 32. மேல்காவனூர் கல்வெட்டுகள்

கி.குமார், சென்னை

32 : 1

**இடம்** : வேலூர் மாவட்டம், காட்பாடி வட்டம், மேல்காவனூர் கைலாசநாதர் கோயிலுக்கு அருகே சாமி சிலைகள் வைத்துப் பாதுகாக்கப்படும் அறையின் எதிரில் வாயிற் படிக்கட்டில் காணப்படும் துண்டு கல்வெட்டு.

**காலம்** : சோழர் காலம் (கி.பி 10 ஆம் நூற்றாண்டு).

**செய்தி** : அவநிசந்ரதேவர் கோயிலுக்கு நிலம் கொடையாக வழங்கியது பற்றியும், அந்நிலத்தின் மூலம் கிடைக்கப் பெற்ற வருவாயைக் கொண்டு தினமும் பூசைகள் நடத்தப்பெற்றதைப் பற்றியும் இக்கல்வெட்டு தெரிவிக்கிறது. மேலும், வீராசந்ர ஊர் என்ற ஊரின் பெயரும் குறிப்பிடப்பட்டுள்ளது.

1. .....ழவளற் அமநிசந்ரதேவர் பக்கல் இறைத்ரவ்யமும் விலைத்ரவ்யமும்..
2. ...விலை ஸ்ராவணை செய்து குடுத்தோம் வீராசந்ர ஊரோமின்னிலம்...
3. . த்திருவமுதுக்கு நிசதமு(ழ)க்கு ( ) ஸக்கு மிந்திரு நாழி அரிசியும் உழ
4. .. பதினெ.. . லி.. வ.....

32 : 2

**இடம்** : வேலூர் மாவட்டம், காட்பாடி வட்டம், மேல்காவனூருக்கு தென்மேற்கே உள்ள தாமோதரம் பேட்டை ஸ்ரீபகவதி அம்மன் கோயிலின் வாயிற்படியில் உள்ளது.

**காலம்** : சோழர் காலம் (கி.பி. 10 ஆம் நூற்றாண்டு).

**செய்தி** : அவநிசந்ர விண்ணகராழ்வார் கோயிலுக்கு இறையிலியாக நிலம் கொடையாக அளிக்கப்பட்டதைப் பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் மூடியாநாப்பட்டு என்ற பெயரும் இதில் குறிப்பிடப் பட்டுள்ளது. இப்பெயர் காவனூருக்கு அருகே உள்ள மூடினாம்பட்டு என அழைக்கப்படும் ஊரின் பழைய பெயராக இருக்கலாம்.

1 மல( ) ர........ பொதி பா(ள)ம் .ஏ . மக்க .......
2. ....... மூடியாநாப்பட்டு மதுடப்பசுந்தலைப்பாடு களத்.....
3. .. .ளுர் அவநிசந்ர விண்ணகராழ்வார்க்கு வைத்த..... .
4. ... வார் பூசத்து புறத்துக்கு தெற்க்கும் .. இன்நாற்ப்பாற்க் கெல்..
5. றயிழ்த்து இறையிலியாக இத்தேவர்க்கு வைச்சோம். . .

32 : 3

இடம் : வேலூர் மாவட்டம், காட்பாடி. வட்டம் மேல்காவனூர் மாரியம்மன் கோயில் தெருவின் நடுப்பகுதியில் உள்ள உடைந்த முப்பட்டைக் குமுதத்தில் இரண்டு துண்டு கல்வெட்டுகள் உள்ளன.

காலம் : கி.பி. 10 ஆம் நூற்றாண்டு (சோழர் காலம்).

செய்தி : முதல் துண்டு கல்வெட்டில் நிலம் கொடையாக வழங்கப்பட்டது குறித்தும், இரண்டாவது துண்டு கல்வெட்டில் நெமலி கிழான் என்ற பெயரும் நிலம் கொடையாக வழங்கியது குறித்தும் தெரிவிக்கப் பட்டுள்ளன.

**முதல் கல்வெட்டு**

1. ......வளிடை விலை. . .
2. . .... கை செ(ய்)து குடுத்.....
3. ....... லேகை செய்து ......

**இரண்டாம் கல்வெட்டு**

1. ஸ்வஸ்திஸ்ரீ மதி(ரை)
2. களரிழைய்ப்ப..........
3. நெமலி கிழான்.....
4 கும் தண்ணீரட்டியும்.....
5. க்கஉரை களிதில்....
6. அய்ங் குழியும் கிழை....

32 : 4

இடம் : வேலூர் மாவட்டம், காட்பாடி வட்டம், மேல்காவனூர் ஊரின் நடுவில் உள்ள சிதிலமடைந்த பெருமாள் கோயிலின் மொட்டை கோபுரத்தின் உட்புறச் சுவரில் காணப்படுகிறது.

காலம் : விஜயநகர காலம். (கி.பி. 16 ஆம் நூற்றாண்டு).

செய்தி : காவனூரின் நடுவில் உள்ள தென் பிருமம் என்றழைக்கப்பட்ட பெருமாள் கோயிலின் கோபுரத்தை நெடுங்குன்றத்தைச் சேர்ந்த ஆளுங்கணத்தான் (உயர் அலுவலர்) சித்தன் திருச்செல்வன் என்பவர் கட்டினார் எனத் தெரிவிக்கப்பட்டுள்ளது.

1. தென் பிரும(ம்)
2. பன்நிறவன்
3. நெடுங்குன்ற
4. ம் ஆளுங்கணத்தான்
5. சித்தன் திருசெ(ல்)வ(ன்)

# 33. புஞ்சை அளவுகோல் கல்வெட்டு

க.கருப்பையா, சென்னை

**இடம்** : நொச்சியம், பெரம்பலூர் வட்ட ம், பெரம்பலூர் மாவட்டம், சிவன் கோயில் மகாமண்டபம் தென்மேற்குச் சுவர்.

**காலம்** : சத்திரபதி சாயுபு, கி.பி. 18 ஆம் நூற்றாண்டு. இ.க.ஆ. 2007-2008.

**செய்தி** : நொச்சியம் கிராமத்தில் புஞ்சை நிலத்தினை அளக்க நாற்பத்திரண்டு அடி அளவு கோல் பயன்படுத்த அனைவரும் கூடி முடிவெடுத்தது பற்றிக் கூறுகிறது.

1. காலயுத்தி லு ஆனி மீ கோபாலசுவாமி கிறாம
2. னொச்சியம் புஞ்சை அளவு ஸ்ரீமதி சத்திரபதி சாயுபவ
3. ர்கள் காரியத்துக்கு கத்ரரான ராச ஸ்ரீராமப்பயரவகளும்
4. னாட்டார் தானாதிபதியள் சகலமும் கூடி கட்டளையிடடது பூர்வம்
5. அத(ன்)படி புஞ்சை அளவு 42 அடி போட்டு அளக்க சொலலிக
6. ட்டளையிட்ட படியினாலே பார்பநியம் சேஷப்பயர் மணியத்தில அள
7. போட்டு எழுத்து வெட்டின (படி) இதுககு ஆரா ஒருதர் அழிவு பண்ணினவர்க
8. ள் கெங்கை கரையிலே காறாம் பசுவை கொண்ட தோஷத்....

# 34. வடசேரிக் கல்வெட்டுகள்

செந்தீ நடராசன், நாகர்கோயில்

34 : 1

இடம் : நாகர்கோயில், வடசேரி பாலமோர் ரோட்டில் அமைந்துள்ள கருத்த விநாயகர் கோவில் கருவறை முன் சுவர்.

காலம் : கொல்லம் 919, ஆனி 4. கி.பி. 1744 ஜுன் வேணாட்டரசு திருவிதாங்கூர் சமஸ்தானம், அனுஷம் திருநாள் வீர மார்த்தாண்ட வர்மர்.

செய்தி : இவ்வூர் செட்டி சமூகம் வசமிருந்த கருத்த வினாயகர் கோயிலை, மொட்டை சாலியர் இது பந்நிகோட்டுச் சாலியரால் தங்களுக்கு அளிக்கப்பட்டது என வழக்குத் தொடுக்க, செட்டிகள் ஆவணம், பந்நிகோட்டுச் சாலியர் ஆவணம், பந்தி கோட்டு சாலியர் வாய் மொழிகளை ஆய்வு செய்து வழங்கப்பட்ட தீர்ப்பு. கோயில் பொட்டை சாலியருக்கு என ஆணை (கல்ப்பனை) வெளியிடப் படுகிறது. வழக்கு நடைமுறையில் ஆங்கிலேயர் நடை முறை புகுந்து விட்டதை இக்கல்வெட்டு தெரிவிக்கிறது. மொட்டை சாலியர், பந்நிக் கோட்டு சாலியர் என்ற வழக்கு தற்போது இல்லை. அவர்கள் தற்போது வள்ளியூர் சாலியர், மலையாளஞ் சாலியர் என அறியப்படுவது கள ஆய்வில் வெளிப்பட்டது.

1. சுபமஸ்து வடசேரியில் கருத்த வினாயக
2. பிள்ளையார் கோயில் காரியங்கொண்டு
3. மொட்டைச் சாலியரும் செட்டிகளும் தம்மில்
4. தற்கிச்சு கல்குளத்து மண்டபத்து வாதுகல்
5. கரையேறுகையில் செட்டிகளெடெ பக்கி
6. லியிருந்ந ஆதாரம் வாயிச்சு கேட்டுட்
7. து 849 வருஷம் ஆனி மாதம் 17 தேதி முதல்
8. கு ஒளள ஆதாரம் கரணங்க கொண்டு
9. ம் சாலியரெடெ பக்கில் ஒள்ள ஆதாரங்
10. கண்டுட்டது 815 வருஷம் ஆவணி மாதம்
11. 25 தேதி பந்நி கோட்டுச் சாலிய ரோடு எளு
12. தி வேண்டிச்ச ஓலைக்கரணங்க கொண்டும்
13. பந்நி கோட்டு சாலியர் மொட்டைச் சா
14. லியர்க்கு கருத்த வினாயக பிள்ளையார்
15. கோயிலும் வகையும் எளுதிக் கொ
16. டுத்தல்லாதே செட்டிகளுக்கு எழுதிக்

17 கொடுத்திட்டில்லா என்னு பறை
18 ஞுது கொண்டும் செட்டிகளுக்கும்
19. அவகாச மில்லா வடசேரியில்க்
20. கருத்த வினாய(க)ப் பிள்ளையார் கோ
21 யில் மொ(ட்)டைச் சாலியருக்குத்தன்
22. னே அவகாசம் யென்னும் வைச்
23. சு செட்டிகளெடெ பற்றில் யிருந்ந
24. ஆதாரங்ஙள் எ(ப்)பேரும் வைய்ப்பிச்
25. சு சாலியருக்கு கொடுத்து மேல்ப்படி
26 கோயில் பூசை காரியவும் வத்துவும் மொ
27. ட்டைச் சாலியர் தன்னே விசாரிச்சு நட
28. த்திக் கொள்ளுமாறும் செயிக யிது 9
29. 19 வருஷம் ஆனி மாதம் 4 தேதி கலிபித்தமைக்கு
30. வடசேரி மொட்டை சாலியர்க்கு நீட்டு
31. எளுதிவிடு எந்நு திருவுள்ளமாயிருந்து
32. நீட்டு சுபமஸ்து

**34 : 2**

**இடம்** : வடசேரி புனித ஜேம்ஸ் தேவாலயத்தின் தெற்குச் சுவரில் வைத்துக் கட்டப்பட்டுள்ள வரிக்கல்.

**காலம்** : கொல்லம் 997 சித்திரை மாதம் 3ந் தேதி கி.பி. 1822 ஏப்ரல்.

**செய்தி** : 1822ற்கு முன் சாதாரண கட்டிடமாக இருந்த இத்தேவாலயத்தை, இவ்வூரைச் சேர்ந்த வண்ணான் திருநெல்வேலிப் பெருமாள் மகன் வன்னிப் பெருமாள் அவர் செலவில் கற்கோயிலாக எடுப்பித்து உள்ளார். தற்போது புனித ஜேம்ஸ் தேவாலயம் என அறியப்படும் இது அன்று சவேரியார் கோவில் என்று அறியப்பட்டுள்ளது.

1. 997 வருடம் சித்திரைமாதம் 3 தியதி வடசேரி சவரி
2. யார் கோவில் கல்ப்பணிக்கு மேல்படியூர் வண்ணா
3. ன் திருநெல்வேலிப் பெருமாள் வன்னிப்பெருமா
4. (ள்) கணக்காயிட்டு குறதீற்த்து வச்ச வரிக்கல்

# 35. இராமேசுவரம்
# பரிசல் ஊழியம் கல்வெட்டு

கி.ஸ்ரீதரன், சென்னை

இடம் : இராமேசுவரம் திருக்கோயில் - கிழக்கு கோபுரம் நுழைவு வாயில் தரையில் பதிக்கப்பட்டுள்ள கல்.

காலம் : கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

செய்தி : சேதுபதி மன்னர்களில் திருஉடையத்தேவர் என்ற விஜயரகுநாத சேதுபதி (1710-25) இவர் இராமேசுவரம் திருக்கோயில் மீது மிகுந்த ஈடுபாடு கொண்டு விளங்கினார். கோயிலுக்கு வரும் பக்தர்கள் பாம்பன் கால்வாய் பகுதியைப் படகில் கடந்து இராமேசுவரம் கோயிலுக்குப் படகு கட்டணம் இன்றி செல்ல ஏற்பாடுகள் செய்தார். இப்பணிக்குத் தன் மருமகனையே நியமித்ததாக இராமநாதபுர மாவட்ட விவரச்சுவடி (கெஜட்டியர்-1990) கூறுகிறது. கடலைக் கடப்பதற்குப் பணி செய்த 'பரிசல் ஊழியம்'காரர் ரெகுநாதசேர்வையின் நிரந்தர பக்தியைக் கல்வெட்டு குறிப்பிடுகிறது. தரையில் பதிக்கப்பட்டுள்ள கல்லில் அவரது உருவம் சேதுபதிகால உடையலங்காரத்துடன், இரு கைகளையும் கூப்பி வணங்கிய கோலத்துடன் உள்ளது. தலைக்கு மேலே கல்வெட்டு காணப்படுகிறது.

1. பரிசல் ஊ 2. ழியம் ரெகு 3. நாதன் செ 4. ருவை காறன்



# 36. புதுவையில் வசவண்ணர் கல்வெட்டு

ந.வேங்கடேசன், வில்லியனூர்

**பசவண்ணர்**

கன்னட நாட்டில் பசவண்ணரின் பெயர் ஒரு துருவ நட்சத்திரம் போல் விளங்குகிறது. பெரிய குழுவின் தலைவராக இருந்து பல செயல்களை ஈடேற்றியுள்ளார். வசன கவிதைகளை எழுதியுள்ளார். பசவண்ணர் வாழ்ந்தது 12ஆம் நூற்றாண்டில் அப்போது ஆட்சி செய்த வேந்தன் கலசூரி வம்சத்தைச் சேர்ந்த பிஜ்ஜளன். இவன் சாளுக்கியப் பேரரசுக்கு வாரிசுதாரனாக ஆனான். அவனிடம், பசவண்ணர் அமைச்சராய் இருந்து சிறப்பாகச் செயலாற்றிய தோடு, வீர சைவ சமயத்தின் வளர்ச்சியிலும் அவரின் பங்கு சிறப்புக்குரியது.

பசவண்ணர் காலத்தில் சமுதாயத்தில் நிலவிய குறைபாடுகள், குற்றங்கள் இவற்றைக் கண்டு மிகுந்த கோபங் கொண்டார். அக்காலத்து, சுத்த சைவம், பூர்வ சைவம், மார்க்க சைவம், ஆதி சைவம் இவற்றுடன் வீரசைவமும் இருந்துள்ளது.

சமுதாயத்தில் காணப்பெறும் சாதி வேறுபாடுகளையும், பொருளாதார வேறுபாடுகளையும், தொழில் முறையான வேறுபாடுகளையும் வீரசைவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. பெண்ணுக்குச் சம மதிப்பளித்தனர். ஆதலின், பசவண்ணர் வீரசைவத்தின்பால் ஈர்க்கப் பெற்றார். இளம் வயதில், பசவண்ணர் தம் பூணூலைப் பிய்த்து எறிந்துவிட்டு மத சம்பிரதாயங் களிலிருந்து வெளியேறினார் பசவண்ணரை வழிப்படுத்தியவர் ஈசான்ய குருக்கள் என்பவரே. அவ்வீரசைவ சமயத்தைச் சேர்ந்தவர் திருவண்ணாமலை ஈசானிய மடத்தைச் சேர்ந்த மதன சுவாமிகள் குமாரர் லிங்கசுவாமிகள் புதுவையில் இயற்கை எய்தினர். அவர் சமாதி புதுவையில் கம்பிளிசாமி மடத்தருகில் மாந்தோப்பில் கல்வெட்டுடன் இருக்கிறது.

**இடம்** : புதுச்சேரி, கம்பிளிமடம் மாந்தோப்பில் உள்ள கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 1849.

**செய்தி** : திருவண்ணாமலை ஈசானிய மடத்தைச் சேர்ந்த மதன சுவாமிகளின் மகன் லிங்கசுவாமிகள் (வசவண்ணசுவாமிகள் வீரசைவத்தைச் சேர்ந்தவர்) அடக்கம் செய்யப் பெற்ற இடம்.

1. சூஅளசயசும் இஉ ஜ சரியான
2. கீலக ஹூ மாசி மீ சுஉ குருவா
3. ரனாள். அமரபட்சம்-
4. அஷ்டமி திதி. அனுஷ
5. நட்சத்திரம். இந்த நாளில்
6. திருவண்ணாமலை ஈசானிய
7. மடம் மதனசுவாமிகள் குமார
8. று லிங்கசுவாமிகள் வசவண்
9. ண சுவாமிகள் பதவி யடைந்தது

# 37. சிதம்பரம் கோயில் மணி

கி.ஸ்ரீதரன், சென்னை

இடம் : நடராசன் திருக்கோயில் சிதம்பரம் - தெற்கு நுழைவு வாயிலின் மேலே அமைந்துள்ளது.

காலம் : கி.பி. 19 ஆம் நூற்றாண்டு.

செய்தி : சிதம்பரம் நடராசர் கோயிலில் மாலை வழிபாட்டின் போது அடிக்கப்படும் மணியில் எழுத்துப் பொறிப்புகள் காணப் படுகின்றன. 1884ம் ஆண்டு சிதம்பரம் நடேசருக்குச் சிங்கப்பூர் தியம் கவுன்சில் தன்கிப்செவ் உபயம் அளித்ததாக குறிப்பிடப்படுகிறது. இம்மணி எங்கு செய்யப்பட்டது என்பதும் காணப்படுகிறது. இம்மணியின் மீது சீன எழுத்துகளும் காணப்படுகின்றன.

JOHN TAYLOR AND CO
PRESENTED BY
TAN KIM CHING
CONSUL FORSIAM
TO THE SHEDVMBARM TEMPLE
IVLY A.D. 1884

சிதம்பரம் நடேசருக்கு சிங்கப்பூரில் சியம் கவுன்சில் தன் கீப் செவ் உபயம் தாரண வருஷம்

இங்கு சிதம்பரம் என்பது 'SHEDVMBARM' எனக் குறிப்பிட்டிருப்பது நோக்கத்தக்கது. சிதம்பரம் கோயிலில் கிழக்கு நுழைவு வாயிலை அடுத்து நடராசர் சன்னதிக்கு அருகே காணப் படும் மணியிலும் எழுத்துப் பொறிப்புகள் காணப்படுகின்றன. இம்மணி ஆராய்ச்சி மணி என அழைக்கப்படுகின்றது. நேரம் காட்டுவதற்கு இம்மணியை உபயோகிக்கின்றனர். இம்மணியில் **"சிதம்பரம் ஆராய்ச்சி மணி யாழ்ப்பாணம் முழாய் சின்னப்பா பிள்ளை உபயம் 1884" - மேலும் அம்மணியின் மேற்பகுதியில் BOCHUMER VEREIN GUSS STAHIFABRIK** - என்ற எழுத்துகள் காணப்படுகின்றன. இம்மணி ஜெர்மனி நாட்டில் BOCHUM என்ற இடத்தில் செய்யப்பட்டுச் சிதம்பரம் கோயிலுக்குத் தானமாக வழங்கப்பட்டதாகும்.

## 38. கிழக்குமேடு கல்வெட்டு

ம.காந்தி, வேலூர்
ப.வெங்கடேசன், காவேரிப்பாக்கம்

இடம் : போளூர் வட்டம், கிழக்குமேடு என்னும் ஊரில் முருகேச கவுண்டர் நிலத்தில் கற்பலகையில் உள்ள கல்வெட்டு.

காலம் : கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

செய்தி : கிழக்கு மேட்டைச் சேர்ந்த வீரப்ப செட்டியார் பள்ளியத்தமன் கோயிலுக்கு தர்மமாக உண்டியல் அமைத்து கொடுத்த செய்தி.

1. கிழக்கு மே
2. டு பள்ளியத்த
3 த்தமன்
4. தர்ம உண்
5. டிகை
6 வீரப்ப
7. செட்டி

## 39. சாத்தூர் மடம் கல்வெட்டு

ஆர்.பாலச்சந்திரன், திருத்தங்கல்

இடம் : குரங்குடி, சாத்தூர் வட்டம், விருதுநகர் மாவட்டம், வைப்பாற்றின் கரையிலுள்ள தோட்டத்தில் நடப்பட்ட தனிக்கல்.

காலம் : கி.பி. 18 ஆம் நூற்றாண்டு.

செய்தி : சாத்தூர் மடத்துக்குக் கோட்டைபட்டி ஊரைத் தானமாகக் கொடுத்தது.

1. சாத்தூர் மடத்துக்கு
2. கோட்டைபட்டி
3. சந்திராதித்தவரை
4. க்கு நடக்கவும் அதுக்கு
5 யாதாமொகுருதர் அ
6. கிதம் பண்ணினார்
7. கெங்கை கரை
8. யிலே காராம் பசு
9. வைக் கொன்ற
10. தோஷத்திலே
11. போவாராகவும்

# 40. விசயநகரஅரசர் சதாசிவராயரின் நுக்கனபல்லி தமிழ்ச் செப்பேடு

சூ.சுவாமிநாதன், மைசூர்

**இடம்** : இச்செப்புப்பட்டையமானது ஆந்திரமாநிலத்திலுள்ள இராஜம் பேட்டை மண்டலத்தின் கண் அமைந்துள்ள நுக்கனபல்லி என்ற கிராமத்திலுள்ள திரு.கிருஷ்ணமூர்த்தி என்பவரிடம் உள்ளது. இது தமிழ் மொழியிலும் தமிழ் எழுத்திலும் 67 வரிகளில் எழுதப் பட்டுள்ளது. இது ஒரே தகட்டின் இரு புறங்களிலும் வெட்டப் பட்டுள்ளது. இச்செப்பேட்டை 2007-ஆம் ஆண்டில் மத்தியத் தொல்பொருள் துறையைச் சார்ந்த முனைவர் முனிரத்தினம் என்பார்படி எடுத்தார். இச்செப்பேடு காஞ்சிபுரத்தில் வசிக்கும் நெசவாளர்கள் செய்து கொடுத்த ஓர் ஒப்பந்தத்தைக் குறிப்பிடுகின்றது.

**காலம்** : கி.பி. 1551 (சக வருஷம் 1473) சதாசிவ தேவராயர். இ.க.ஆ.எண். A/2007-2008.

**செய்தி** : தேவமகாராசாவின் அதிகாரியான தளவாய் திம்மரசருக்கு காஞ்சிபுரத்திலுள்ள ஆயிரத்து தொளாயிர நெசவாளர்கள் குடுத்த ஒரு உறுதிபாட்டைத் தெரிவிக்கின்றது. கொப்ப நாயக்கர் என்பார் இக்கைக்கோளர்களுக்கு பல உதவிகள் புரிந்தும், காத்தும் வந்தபடியாலும், அவரது மகனை அதிகாரியாய் நியமித்தும் நன்மைகள் பல புரிந்தபடியாலும் அவருக்கு காணியாட்சியாகவும், குருதட்சிணையாகவும் அவருக்கும் அவரது சந்ததியினருக்கும், தங்களது இனத்தைச் சார்ந்த ஒவ்வொருவரும் தறிக்கு ஒரு பணம் அவருக்கு வழங்க வேண்டும். இது தென், மேல், கீழ், வடமண்டலம் முதலான சீர்மைகளிலுள்ள தங்களது சாதி கைக்கோளர்களும் அளிக்க வேண்டும் என்கிறது. இவ்வாறு அளிக்கத் தப்பினால் காஞ்சி ஏகாம்பிர நாதருக்கும், இறையிவி காமாட்சி அம்மனுக்கும் பிழைத்தவர்கள் என்று உறுதிமொழி அளித்தனர்.

இரண்டாம் ஒப்பந்தமானது இதே காஞ்சிபுரத்திலுள்ள நெசவாளர்கள் (கைக்கோள முதலிகள்) தளவாய் திம்மராசரும் இவர்களுக்குப் பல உதவிகள் புரிந்தும், தனது மகனை அதிகாரியாய் நியமித்தும் பல அநுகூலங்களைச் செய்தபடியாலே அவருக்கும் குரு தக்ஷிணையாக ஆண்டு ஒன்றுக்கு தறி ஒன்றுக்கு ஒரு பணம் திம்மராசருக்கும் அவரது சந்ததியினருக்கும் வழங்க வேண்டும் என்றும் செய்யாதவர்கள் ஏகாம்பிரநாதன், காமாக்ஷி அம்மனுக்குப் பிழைத்தவர்கள் என்றும் உறுதியளித்தனர். பலரும் கையொப்பம் இட்டுள்ளனர். காஞ்சியிலுள்ள பல தெருக்களின் பெயர்கள் வந்துள்ளன. இவை இப்போது மறைந்துவிட்டன.

இது சதாசிவராயரின் மூன்றாவது தமிழ்ச் செப்பேடு. இம்மன்னருக்கு முன்பாண்ட தேவராயரின் (கி.பி. 1542-43) உயரதிகாரியும், இவருக்குப் பின் பாண்ட இராமராயரின் பாராபத்தியம் (பொறுப்பான அதிகாரி) தளவாய் திம்மராசர், காஞ்சிபுரத்தில் வசிக்கும் நெசவாளர்களுக்கு பல நன்மைகள் புரிந்ததனால், நெசவாளர்கள் தங்களது நன்றியைத் தெரிவிக்கும் முறையில் தறிக்கு ஒரு பணம் வழங்க தலைப்பட்டனர். இவரும், கொப்ப நாயக்கரும் செய்த நன்மைகள் என்னவென்று அறிய முடியவில்லை. இவர்கள் வரிப்பணத்தைக் குறைத்து இருக்கலாம். இவர்களுக்கு இவ்வாறு வழங்கப்பட்ட பணத்தை இவர்கள் ஏற்றுக் கொண்டார்களோ, அல்லது காஞ்சிபுரத்திலுள்ள காமாட்சி அம்மன் கோயிலில் ஏதாவது ஒரு திவந்தத்திற்கு ஈந்து விட்டார்களோ தெரியவில்லை. விசயநகர அரசின் பொருளியல் நிலையை அறிந்து கொள்ள இச்செப்பேடு உதவுகின்றது.

1. சுப$_4$மஸ்து ஸ்வஸ்திஸ்ரீ ஜயாது புத$_4$ய ச$_0$ாலா வாஹந ச$_0$க வரு-
2. ஷம் 1473 ஆன விரோதி ஸ$_0$வர மாக சி$_0$ரச ட$_3$த$_3$ச$_0$மியி
3. லே ஸ்ரீமது ராஜாயிராஜராஜ பரமே சுவர ஸ்ரீவீர பி$_0$ரதாப
4. ஸ்ரீஸதாசி$_0$வ தே$_4$வமஹாராயர் விஜயநகரத்திலே ஹயஸாரே ப்ருத்வஸாமிராஜி
5. யம் பண்ணிகயில் ஸ்ரீமந் மஹாமண்டலேவர ராமரா-
6. [ய] பரப்புத்திமமய[1] தே$^4$வமஹாராஜாவின் காரியதுக்குக் கற்தராந த-
7. ளவாய் திம்மராசர் அய்யனுக்கு காஞ்சிபுரம் ஆயிரத்தொளாயிர-
8. ம்கைக்கோள முதலிய(ள்)ளும் குடுத்த ச$_0$ாஸநம் பூற்வம் கொ-
9. ப்பனாயக்கர் அய்யந் எங்கள் சாதி காரியம் அநேக தேச பெகு-
10. மாநியம் பண்ணிக்குடுத்து இரக்ஷித்து தம்மிட குமாரர் மதிகா-
11. ரியாய் நடத்தி வாறபடியாலே னாங்கள் குருதெக்ஷிணையாக
12. காணி ஆட்சியாக காஞ்சிபுரம் எகாம்பிற னாதந் காமாக்ஷி அம்ம-
13. ந் உள்ள காலமும் கொப்புனாயக்கர் அய்யன் புத்ர பௌத்ர பார-
14. ம்பரையாக காணி ஆட்சியாய் குரு தெக்ஷிணைய் வருஷம் ஒ-
15. ன்றுக்கு தறிக்கு ஒரு பணம் விழுக்காடு குடுத்து நடத்தி வர-
16. கடவொமாகவும் கிழ்மண்டலம் தென்மண்டலம் மே-
17. ல் மண்டலம் வடமண்டலம் உள்பட மற்றும் உண்டா-
18. ன சீர்மையில் எங்கள் சாதி கைக்கோளர(ர்) யிருந் தடம் எல்-
19. லாம் வருஷம் ஒன்றுக்கு தறிக்கொரு பணம் விழுக்காடு வா-
20. ங்கச் சொல்லிக் குடுத்தோம் இப்போதுதளவாய் திம்-
21. மராசர் அய்யனும் எங்கள் சாதியை அநேகம் தேச பெகு-
22. ண்நியம் பண்ணி இ[ர]க்ஷித்து தம்மிட குமாரர்மதிகா-
23. ரியாக எங்களை ரக்ஷித்த படியாலே குருதெக்ஷிணையாக காணி ஆட்சியாக காஞ்சிபுரம் கொம்பிறனாந

24. காமாக்ஷி அம்மந் உள்ளதனைக்கும் தளவாய் திம்மரா-
25 சர் அய்யன் புத்ர பௌத்ர பாரம்பரையாக குருதெக்ஷி-
27. ணையாக வருஷம் ஒன்றுக்கு தறிக்கொரு பணம்
28. விழுக்காடு வாங்கிக் கொள்ளச் சொல்லிக் கு-
29. டுத்தொம் கிழ்மண்டலம் தெந்மண்டலம்
30. மேல்மண்டலம் வடமண்டலம் பற்-
31. றும் முண்டாந் சிர்மையிெ எ[ங்]கள் சாதி கைக்-
32. கோளர் இருந்தும் எல்லாம் வருஷம் ஒன்று
33. க்குத் தறிக்கொரு பணம் விழுக்காடு வாங்கிக் கொ-
34. ள்ளச் சொல்லிக் குடுத்தோம் இந்த குரு-
35. தெக்ஷணையாக குடுத்த காணி ஆட்சிக்கு எ-
36. ங்கள் சாதியிலே யாதொருத்தர் தப்பினா
37. லும் ஏகாம்பிற னாதனுக்கும் காமாக்ஷி
38. அம்மனுக்கும் தப்பிநவர்கள் தங்கள் தாயா
39. ர்த்தகப்பனாரை கெங்கைக் கரையிலே கொன்ற
40. பாவத்திலே பொகக் கடவாராகவும் இதுக்கு தப்பிந
41. வர்கள் எங்கள் சாதிக்கு பிறம்பு காஞ்சிபுரம் எகாம்
42. பிறனாதன் காமாக்ஷி அம்மன் உள்ள தனைக்கால-
43. த்துக்கும் ஆசந்திறாற்க ஸத்₄ராயாக தளவாய் திம்மர
44. சர அய்யன் புத்ர பௌத்ர பாரம்பரையாக வருஷம் ஒ
45. ன்றுக்குத் தறிக்கொரு பணம் விழுக்காடு ஆக கா-
46. ஞ்சிபுரம் முதலாக கிழ்மண்டலம் தென்ம-
47. ண்டலம் மேல்மண்டலம் வடமண்டல-
48. ம் மற்று முண்டாந சிர்மையிலே வாங்கிக் கொ-
49. ள்ளச் சொல்லி ஒப்பிக் குடுத்த சாஸநம் தளவா-
50. ய் திம்மராசர் அய்யனுக்கு இந்த சாஸநம் குடுத் தே-
51. தாம் காஞ்சிபுரம் ஆயிரத்தொளாயிரம் கைக்கோ-
52. ள முதலியளென் | இப்படிக்கு காஞ்சிபுரம் ஆயி-
53. ரத் தொளாயிர முதலியள் சொற்படிக்கு வீர-
54. பரணச்சக்கிறவற்தி எழுத்து | இவை காக்குனாம
55. பெருந்தெரு இருள் நிக்கினாந | சூர[ப] ட்டாரத் தெ-
56. ருகச்சி அப்பன் புதுத்தெரு வழுதி அப்பன்|
57. தெவணாம் பெருந்தெரு செல்லப்பிள்ளை
58. யான்| நல்லகம் [ெ][ப]ருந் தெரு ஏகாம்பரம்| திருக்க-
59. ச்சாலை அரியாபுத்திரந்| திருமேல்தளி பெங்[க]ட
60. கார் எல்லப்பன்|| திருவெரும்பந் தெரு அரிய
61. வன்| கிஷ்ணராயன் பெருந்தெரு ஒளியார் எல்-
62. லப்பன்| கச்சி அப்பர் தெரு எல்லப்பன்| பச்-

63. சைப்பிறமாணம் பெறெறு விளக்குடுகொ-
64. யில் அய்யம் பெருமாள் அகரத்து நல்லாந்
65. னாச்சியார் கோயில் பிள்ளையார் திருமே-
66. ஞ்ஞானத் தெரு சோலை திருப்பாடத்ததெ
67. ரு அறிச்சந்திரன்

நுக்கனப்பல்லிச் செப்பேடு (முன்பக்கம்)



# 41. வில்லியனூர்ச் செப்பேடு

ந.வேங்கடேசன், வில்லியனூர்

இடம் : வில்லியனூர்.

காலம் : மல்லிகார்ச்சுனராயர். சகம் 1563, ஆங்கிரசு வருஷம், ஆனி மாதம், அஷ்டமியும், பூரட்டாதியும் பெற்ற திங்கட்கிழமை. கி.பி. 1641. செப்பேட்டின் காலக்குறிப்பில் முரண்பாடு உள்ளது. தவறாக உள்ளது. 19 ஆம் நூற்றாண்டில் எழுதப்பட்டிருக்க வேண்டும். முன்பதிப்பு : வருண தருப்பணம், பக். 337-339.

செய்தி : இச்செப்பேடு வில்லியனூரில் வரதராசு நாயக்கரிடம் உள்ளது. இதனை மைப்பிரதி செய்து கொள்ள அவர் உடன்படாமையால் 11.5.82 அன்று இதன் வாசகங்கள் பார்த்து எழுதப்பட்டன. இது செம்பினாலான ஒரே செப்பேடு. இதன் நீளம் 46 செ.மீ., அகலம் 30.3 செ.மீ. கனம் 2 மி.மீ. ஆகும். இரண்டு பக்கங்களிலும் எழுத்துகள் பொறிக்கப்பட்டுள்ளன. முதல் பக்கத்தில் 56 வரிகளும் இரண்டாம் பக்கத்தில் 4 வரிகளும் உள்ளன. எழுத்துகள் ஆழமாக இல்லாமல், மிக மெல்லிதாகச் சிறிய வடிவில் எழுதப்பட்டுள்ளன. செப்பேட்டின் முதல் பக்கத் தொடக்கத்தில் சந்திர சூரியரின் உருவங்களும், நடுவே சிம்மாசனத்தில் குடையின்கீழ் அரசன் அமர்ந்திருக்கும் காட்சியும் செதுக்கப்பட்டுள்ளன. ஓரங்களில் வில்லேந்திய வீரர் இருவர் காவல் காப்பது போன்ற உருவங்கள் உள்ளன. அரசனின் இடப்பக்கம் ஆசனத்தின் மீது அமர்ந்த நிலையில் வாளுடன் ஒருவரும், வலப்பக்கம் வாளின்றி ஆசனத்தின் மீது அமர்ந்தவாறு வேறொருவரும் காணப்படுகின்றனர்.

இதில் கொடுக்கப்பட்டுள்ள சகம் 1563 (கி.பி.1641) என்ற ஆண்டும், அதற்கு நேரான 'ஆங்கிரசு வருஷம் மிதுன (ஆனி) மாசத்து பூர்வபட்சத்து அஷ்டமியும் பூரட்டாதி நட்சத்திரமும் பெற்ற சோம வார நாள்' என்பதும் ஒன்றுக் கொன்று முரணாக உள்ளன. சகம் 1563 என்பது ஆங்கிரசு வருஷத்துக்கு உரித்தாகவில்லை. விஷு வருஷத்துக்கு மட்டுமே பொருத்தமாக உள்ளது. சகம் 1554 (கி.பி. 1632), சகம் 1614 (கி.பி.1692) ஆகிய ஆண்டுகளுக்கே ஆங்கிரசு வருஷம் உரித்தானது. அன்றியும் திதி, நட்சத்திரம், கிழமை முதலானவை முரண்பாடாகவே காணப்படுகின்றன. ஆதலின், இதில் உள்ள காலக் குறிப்புகள் முற்றிலும் தவறானவை.

மடம் கட்டுதற்கு வேண்டிய பொருளைச் சேகரித்தல். பல்வகைத் திருமணமுறை மன்னவேடு கிராம மக்கள் வரி செலுத்திய முறை, காக்கும் முறை, இல்லையெனில் பெறும் தண்டனை, பண்டாரத்தார் பெயர்கள், கையொப்பம் ஆகியவை செப்பேட்டில் உள்ளன.

செப்பேட்டின் முதல் பக்கம்

1. உ
2. சுபஸ்ரீ மஹாமண்டலத்திலே சுவர்ண ஆரியராய விபாடன் பாரிசைக்குத தப்புவராத கண்டன் மூவராய கண்டன்
3. கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு கொடாதான் துடுக்கர் தளவிபாடன் துடுக்கா மோகந் தவிர்த்
4. தோன், எட்டியர் தளவிபாடன், ஒட்டியர் கோட்டந் தவிர்த்தோன், பின் மண்டலமுங் கோண்ட இராஜாதிராஜன். இ.
5. ராஜ பரமேஸ்வரன். இராஜ மார்த்தாண்டன். இராஜேஸ்வரன், புயங்கன், இராஜகம்பீரன். இராக்கனத் தம்பிரான். இந்திர துரந்தரன்
6. அஸ்வபதி, கஜபதி துரந்தரன், அஷ்டமனோகர இராயன். அசுரரண விருது நரபாலன் கோதண்ட இராமன். கலியுக இராமன். கண்-
7. ணன். வாளுக்கு வீமன். தோளுக்கு அபிமன்னன். குணத்திற்குத் தருமன். அழகுக்கு அநங்கன், அமர்ந்ததற்கு அரிச்சந்-
8. திரன், ஆண்மைக்கு அனுமான். ஆக்கினைக்குச் சுக்ரீபன், குடைக்குக் கர்னன், செலவத்திற்கு அளகேசுரன் பலத்திற்கு வா-
9. யு பகவான், உலகுக்குக் கதிரோன். உலாவும் உலக மெல்லாம் படைக்க நினைத்தருளிய வீராதிவீர வன்னியப் பிரதாபன். கிரு-
10. ஷ்ண தேவமஹா இராயர். அச்சுததேவ மஹாஇராயர், புஜபல தேவமகா இராயர். திருமலை தேவ மஹாஇராயர்
11. நரசிங்க தேவ மஹா இராயர். இராமதேவ மஹாஇராயர், பிரவிட தேவமஹா இராயர் மல்லிகார்ச்சுன தேவ மஹா இராயர். பி-
12. ரிதிலி இராச்சிய பரிபாலனம் பண்ணி அருளாநின்ற சகாப்தம் 1563 - இதற்கு மேல் நின்ற ஆங்கிரச வருஷத்து மி-
13. துன மாசத்து. பூர்வ பட்சத்து அஷ்டமியும் பூரட்டாதி நட்சத்திரமும் பெற்ற சோமவார நாள் வடகரை விருதப்பசங்-
14. கன் வளநாட்டுக்கு மேற்கு நாடு இருங்கோள், பாண்டிய வளநாடு தொண்ட மண்டலம் சோழ மண்டலம் பாண்
15. டிய மண்டலம் கொங்கு மண்டலம் இந்த நாலு மண்டலத்திற்கு அழகான தொண்ட வளநாட்டுக் குழகான வில்லவன-
16. ல்லூர் திருக்காமேஸ்வரர் குவிலாரம்மை அவர்கள் சந்நிதியாசிய வில்லவநல்லூரிலே அந்தந்த ஜாதிக்கு மடாலய-
17. ங்கள் உண்டாகின்றன நமக்கு சிவாலய பூஜை மாத்திரமிருக்கின்றது தென் தேசத்தில் நமது வம்ச பண்ணாடர் தங்கள் பேரும்
18. பிரதாபமும் உண்டாக வேண்டுமென்று மடங்கள் கட்டியிருக்கிறார்கள் நாம் இராயரைப் போய்க் கண்டு மடங்கட்ட உத்தி-
19. ரவு பெற்று வருவோமென்று திருவக்கரை வல்லவாட்டு மழவராய பண்டாரத்தார். கருத்த நாயனார் பண்டாரத்தார். சி-

20. ன்ன குமாரநாயனார் பண்டாரத்தார் சிதம்பரம் மழவராய பண்டாரத்தார் கச்சி இராயர். பெரியண்ண நாயனார் சிற்றம்பல நாயனா-

21. ர் தாண்டவ நாயனார். சடையப்ப நாயனார். அழகு சிங்க நாயனார். மெய் போக நாயனார் பண்டாரத்தார் இவர்களும் கண்டன்மார். தந்தி-

22. ரியார். படையாக்ஷியார் என்னும் பல பட்டப் பெயர் பெற்ற சோம சூரிய அககினி வம்ச பன்னடரான உறவின் முறையார் அ-

23. னைவரும் போய் இராஜவன்னிய இராஜஸ்ரீ மல்லி- கார்ச்சுன தேவமகா இராயரைக் கண்டு பேச. அப்போது இராயரும் சிம்மா-

24. சனம் விட்டு இறங்கி நமது வம்சத்தாரென்று தெரிந்து தேவாலய பூஜையிருக்க மடத்து தருமம் நமக்கேனேன்று இரா-

25 யரும் கேட்க. அப்போது நாயனார் பண்டாரத்தார் பாண்டிய மண்டலம் சோழ மண்டல முதலிய மற்ற மண்-

26. டலங்களில் குருமடம் கட்டியிருக்க கொண்ட மண்டலத்திலேயும் இருக்க வேண்டுமென்றார் இராயரும் சந்தோஷித்து உங்க-

27. ளுக்கு இடமில்லாமற் போமோ வென்று தானத்தாரை யழைத்து நாயனார் பண்டாரத்தார் அவர்களுக்கு இடம் வி-

28. டப் போமென்று சொல்ல அப்போது தானத்தார் மூத்த முதலியார் திருநாவகத் தொண்ட முதலியார் நம்பித் திருஞானப்பண்-

29. டிதர் மற்றும். முற்றுற்றுடையார். நம்பிக்குருக்கள் வயித்தியநாத குருக்கள். கோவில் கணக்கு. க்ஷேமக் கணக்கு. மற்றுமு-

30. ண்டான. தானத்தார். தலத்தாருங்கூடி கெவி- சித்திலிங்கதேவர். முனையதேவர் தம்பிரானார் திருநாமத்தில் காணியான தெ-

31. ற்குத் தெருவில் தேரொடும் வீதியில் தென்சரகில் பாலையர் மடத்திற்குக் கிழக்கு அம்பலத்தாடும் ஐயர் மடத்திற்கு மேற்கு சட்டையர் மடத்திற்கு வடக்கு அடி கிழக்கு மேற்க்கு (எயரு)

32. தெற்கு வடக்கு அடி (அயரு) அடி ஒன்றுக்குப் பொன் ஒன்றாக (எயரு) பொன்னுக்குக் கிரையங் கொண்டு கல்லில் பேர் வெட்டி நட்டு கி-

33. ணறு கட்டி மடங்கட்டி தாம்பரசாசனமாக பட்டயமெழுதி நாலு மண்டலம் (ருயசு) தேசமுங் குருமூர்த்தமாய்க் கொண்டாடச் சொ-

34. ல்லி. மஹாமடபிச்சை முஷ்டியும் திருவிளக்கும். திருநந்தவனப் பணிவிடையும். திருமாலையும். உபயமும். மகேஸ்வர பூஜையு-

35. ம் பண்ணி நடத்திவர சிலாநதி சக்கரவர்த்தி யோகீஸ்வரகுருவை மடத்தில் வைத்து அந்தந்தச் சீர்மை பண்ணடரும் நாயினார் பண்டா-

36. ரத்தார் அனைவரும் வம்ச தருமக் கீர்த்திக்காக மடத்திற்குக் கட்டளையிட்டது - உபநயன முகூர்த்தத்திற்குப் பணம் ஒன்றும். சுயமரம்நா-

37. ட்டி மாலை சூடுங் கலியாணத்திற்குப் பொன்பத்தும் கத்தி நாட்டிக் கலியாணஞ் செய்பவருக்குப் பணம் பத்தும் மற்ற முகூர்த்தங்களுக்கெல்-

38. லாம் மாப்பிள்ளை வீட்டார் பணம் ஒன்றும் பெண் வீட்டார் பணம் ஒன்றும் பெண் தத்த பணம் ஒன்றும் மாதா பிதா குருபாத பூஜை வரும்ப-

39. டிகளும் மடத்தில் சேர வேண்டியது தண்டிகை துரைகள் பத்து பணமும் குதிரை மேல் குடை பெற்ற அஸ்வ பதிகள் அஞ்சுபணமும் ஜாதியில் குற்றா-

40. குற்றம் செய்பவர் அபராத பணமும் மன்னவேடு கிராமத்தார் அரிவாளுக்கு ஆறுபடி தானியமும் களைவெட்டுக்குப் பதக்க தானியமும் ஒருக்கு முக்கு-

41. றுணி தானியமும் பேருருக்குப் பத்து பணமும் சிற்றூருக்கு அஞ்சு பணமுங் கொடுக்க வேண்டியது. ஆதுபாது அற்றவர் சொத்தை மடத்தில் சே-

42. ர்த்து மடத்தாரால் சவாட்சணை பெற வேண்டியது இவ்வரும்படிகள் மடத்திற்குச் சேருகிறபடியால் செந்தூரத் திலர்தம் கோபி திருமணி தி-

43. ரு நீறிட்ட பேர்களும் சந்திர சூரியருள்ள நாள் வரைக்கும் நடத்தி வருவீர்களாகவும் இந்த மடாலய தருமத்தை தங்காமல் கொடுத்த பேர்கள்

44. மாதா பிதாக்களை இரட்சித்து சிவாலயம் பிரம்மாலயம் பூதானம் கோதானம் கன்னிகாதானம் செய்த பலனை பெறுவார்கள் ஸ்ரீம-

45. துவில்லவனல்லூரிலே திருக்காமேஸ்வரர் குயிலாரம்மை குமாரசுவாமி சந்நிதானம் விளங்குவது போல் விளங்குவார்கள்

46. மடத்துக்கு அனுப்பக் கட்டளையிட்டதை அனுப்பாவிடில் மடத்து சுவாமியாரால் அனுப்பப்பட்ட பணிவிடை சிஷியாள்

47. எழுந்தருளின உடனே கூடி முன்னேபோய் காண்பித்துக் கொண்டு வந்தவர்களுக்கு விடுதிவிட்டு சாப்பாடு போஜனம் அமைத்-

48. து தருமத்திற்குண்டான வரும்படிகளைக் கொடுத்தனுப்பி வைக்க வேண்டியது தருமபரிபாலரான சௌபாக்கிய பிரமாணிக்கரான வேள்வியி-

49. ற் பிறந்தோர்களான ஸம்புகுலத்தவரான குமாரசுவாமியார் படைத்தலைவரான அசுரர்கள் மார்பரான ஆஸ்தான பந்து ஜன சிந்தாமணியான சாந்

50. த மாரியுடைய கந்நிகையை மணஞ் செய்தவரான வாடா மாலையும் வன்னத் தடுக்கும் மாலையும் தரித்தவரான வாசமிகுந்த குவள மாலையும் மி-

51. டக் கொடியும் முப்பத்திரண்டு விருதும் பெற்றவர்களான முன்னூல் மார்பும் புலிக்கொடியும் பெற்றவரான நையாத நாட்டுக்குச் சப்தபதிகளான

52. சோணாடு காத்தவரான மறையோர் மகனுக்கு உயிர்கொடுத்தவரான வல்லானுடைய மகுடந் துணித்தவரான வாதாபியை வென்ற வன்னிய குலாதிபரா-

53. ன செங்கையில் வில்லும் சீலிமுகமும் எடுத்தவரான ஏரடி வாழும் வீரப்பரி நகுல துஷ்ட நிர்த்தண்ட விர்ப்பன்ன உத்தண்ட கோதண்ட விக்கிர மார்த்தாண்ட-

54. ரான அனைவோரும் மனமொத்து இந்த காரியம் தட்டுதலை பண்ணுவதல்ல வென்று மடத்து தருமம் விளங்கத் தக்கதாக பார்க்கவும் யாதாமொ-

55. ருவர் அகட விகடம் பண்ணினால் கங்கைக் கரையில் காராம்பசுவைக் கொன்ற பாவத்தில் போகக் கடவர் தங்களுடைய மாதாப் பிதாக்களைக் கொன்ற தோ-

56. ஷத்திலேயும் தெய்வ பிராமணரை கோன்ற பாவத்திலேயும் போகக் கடவர் தருமம் விளங்கக் குலம் விளங்கும் குலம் விளங்கப் பெருமையும் செல்வமும் பத-

**செப்பேட்டின் இரண்டாம் பக்கம்**

57. வியும் அடைவார்கள் திருவடி திருச்சிற்றம்பலம் திருவக்கரை வல்லவாட்டு மழவராய பண்டாரத்தார். கருத்தநாயனார் பண்-

58. டாரததார் சின்னகுமார நாயனார் பண்டாரத்தார் சிதம்பரம் மழவராய பண்டாரத்தார் கச்சிஇராயர் பெரியண்ண நாயனார் சிற்ற-

59. ம்பல நாயநார் தாண்டவநாயனார் சடையப்ப நாயனார் அழகு சிங்க நாயனார் மெய்போக நாயனார் பண்டாரத்தார். கையெழுத்து

60. வாசுதேவ நாயனார் சொஸ்த லிகிதம்.

# 42. வில்பட்டிச் செப்பேடு

மா.பவானி, தஞ்சாவூர்
ந.அதியமான், தஞ்சாவூர்

**இடம்** : வில்பட்டி, கொடைக்கானால் வட்டம், திண்டுக்கல் மாவட்டம். செப்பேடு வைத்திருப்பவர் திரு.S.P.S.வெற்றிவேல், முன்னாள் தலைவர், வில்பட்டி.

**காலம்** : கி.பி. 17-18 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : செப்பேடு சுமார் 45 செ.மீ. நீளமும் 15 செ.மீ. அகலமும் கொண்டு உள்ளது. 46 வரிகள் எழுதப்பட்டுள்ளன. செப்பேட்டின் தலைப் பகுதியில் அலங்கரிக்கப்பட்ட தோரணத்தின் நடுவில் எழுத்துகளை இரண்டாகப் பிரிப்பது போல் வேல் ஒன்று உள்ளது பட்டி வேலப்பர் முன்பாக யெழு என்பது வேலின் இடபுறமும் தின பட்டயம் என்பது வேலின் வலபுறமும் எழுதப்பட்டுள்ளது. இரு புறங்களிலும் இரு மயில்கள் தலையைத் தன்பக்கமாகத் திருப்பி தோகையை நீட்டி படுத்திருப்பதுபோல் வரையப்பட்டுள்ளது. அதன் கீழே செப்பேடு வரிகள் எழுதப்பட்டுள்ளன.

இச்செப்பேட்டில் கலியுகம் 4 இலட்சத்து 35 என்று காலம் கொடுக்கப்பட்டுள்ளது. ஆசாரி சந்திரன் என்பவர் இறந்த நாளில் மேமலை பொட்டப்பட்டுப் பகுதியிலிருக்கும் பொட்டமனாயக்கர் என்பவருக்கும் மேல்பள்ளம் கவுஞ்சி என்ற பகுதியிலிருக்கும் கருதுவேல் மண்ணாடி என்பவருக்கும் எல்லைத்தகராறு ஏற்பட்டுள்ளது. இத்தகராற்றை பெரும நாயக்கன் தலைமையில் பஞ்சாயத்தாரும் கூடி எல்லையைப் பிரித்து தீர்ப்பு வழங்கி பட்டையம் எழுதியுள்ளனர். அவ்வாறு இவர்கள் வழங்கிய தீர்ப்பின்படி 18 தீபாவளி, தைநோன்பு, சிவராத்திரி இவற்றிற்கு ஏலக்காய் குடுத்து வருவதாகவும் மற்ற வருமானத்தையும் சிவராத்திரி காணிக்கையாகக் கொடுக்க ஒப்புக்கொண்டுள்ளனர். இதை எழுதியது கூடலூர் கம்பத்திலிருக்கும் ரங்கமுத்து ஆசாரி கூத்தம் பழத்தார் பொட்டமனாய்க்கர். காலக்குறிப்பில் ஐயப்பாடு உள்ளது.

| | |
|---|---|
| பட்டி வேல | தினபட்ட |
| ப்பர் முன் | யம் உ கூ |
| பாக யெளு | (றா) ருயரு (டு) அப்பா |
| | ச்சீனாளை (னை) யில் |

1. உ கலியுகம் 400,000 30 (சய) வருசத்துக்கு உலகம்பு
2. ரந்து யிதில் மேல் செல்லா னின்ற பிறமதி
3. தசா சம்மச்சறம் ஆனி மா 20 தேதி ஆதித்த
4. வாறமும் யேகாதேசியும் அசுபதினாளும்

5. பெற்ற சுபதினத்தில் பொட்டமனாக்கனுக்கு மேமலை (பொட்டப்பட்டிலிருக்கும்)
6. மேப்பள்ளம் கவுஞ்சியிருக்கும கருது வே
7. ல் மண்ணாடி ஆசாரி சந்திரனிறுக்கி
8. றனாளயிலே யெலலை தகறால் வந்த விபற
9. ம் யெனனவென்றால் விலபட்டிலிரு
10. க்கும் தியாகரசெரு மண்ணாடி சோலை ம
11 ண்ணாடி பிருதிவாதி - பஞ்சாயத்தாற்
12 கூட்டமிட்டு செம்பகனூற் மன்னாடி கவி
13 ட்டி குளத்திலிருக்கும் கருங்கன்னக
14. மே பள்ளததிலிறுக்கும் குள்ள வெற்(றி) பெரி(சு?)
15. வேல மன்னாடி துவளதத மன்னா
16. டி யித்தாதி பெறுமனாயக்கன் முன்பா
17. க யெல்லை பகற்ந்த விபரம்யென்ன
18. வென்றால் பெருமாங்காணலும் வ
19. ரிசை கலலுக்கு கவுஞ்சியானுக்கும்
20. மச்சூருக்கும் தெற்க்கு மாறாஞ்சுறு
21. ம் அதறகு வடக்கு பாம்பறக்காடு
22. { } ஆத்துக்கும் கிழக்கு கவுஞ்சியானு
23 க்கு ஆத்துக்கு மேற்க்கு மேப்பள்ள
24 த்தானுக்கு சேற்ந்த குடவயல்
25 ஒரு மா னிலம் யாதற்கு {நாலரை மா?} யெண்டு
26. மா் ணனிலம் மேல்ப்பள்ளதாற்க்குச் தொ(ச?)
27. றந்து அந்தபடிக்கி னாயக்கனும் பஞ்
28. சாயத்தாறும் தீர்ப்பு செய்து பொட்டவனா
29. {ய}க்க வளகனுக்கு பட்(டை)யம் செய்
30 து குடுத்த விபறம்யென்ன வெ
31. ன்றால் பதினெட்டு தீவாவிளி
32. தை ய(னோ)ம்ம பு சிவலாத்தி
33. ரி காணிக்கை யேலைகாய் குடு(த்)து
34. வருகுறோம் மென்று யெங்களை ம
35. னோறாசியினாலே யெழுதி குடுத்த
36. பட்டையம் சந்திர சூரியாள் உள்
37. ள மட்டு கானிக்கை மற்ற வரும
38. ாணம் குடுதது வருகுறோம் யி
39. து தப்பிதம் செய்தால் 1000 பசு
40. வை கொண்ற தோசத்தில் போ
41 குபடி பட்டிவேலப்பா துணைச் செய்
42 வாற் உ யெழுதினது குடலூறு க
43. ம்பத்திலிருக்கும் றங்கமுத்து ஆ
44. சாரி கூத்தம்பழத்தாற் பொட்டமனாய்க
45. ர் சல்லிவாற் குலம் கூத்தரித்திம்
46. மறாயப் பெருமாளது துணை உ

# 43. பெரியபட்டினத்தில் சங்ககாலக் காசுகள்

ப.சண்முகம், சென்னை.

பெரியபட்டினம் (இராமநாதபுரம் மாவட்டம்), இடைக்காலத்திலும் பிற்காலத்திலும் பாண்டியர் துறைமுகமாகச் சிறப்புற்று விளங்கியது. சப்பானின், தோக்கியோ பல்கலைக்கழகப் பேராசிரியர், நொபொரு கராஷிமா அவர்கள் சீனப் பீங்கான் வணிகத் தன்மைகளைக் கண்டறிவதற்காக, 1987 ஆம் ஆண்டில் இவ்வூரில் களப்பணி மேற்கொண்டார். அவருடன் சப்பானியப் பல்கலைக்கழகங்களில் பணியாற்றும் பேராசிரியர்கள் சிலரும் வந்திருந்தனர். அவர்களுடன், தமிழ்ப் பல்கலைக்கழகப் பேராசிரியர், எ.சுப்பராயலுவும், இக்கட்டுரையாசிரியரும் கலந்து கொண்டனர். அச்சமயம், இங்கு கண்டெடுத்த பழங்காசுகள் பலவற்றை ஊர்மக்கள், இக்குழுவினரிடம் அளித்தனர். களப்பணியின் போதும் சில காசுகள் கிடைத்தன. இவ்வகையில் 200 காசுகளுக்கு மேல் சேகரிக்கப்பட்டது. பல காரணங்களால் இக்காசுகளை இதுவரை முறையாக ஆய்வு செய்ய முடியவில்லை. அண்மையில் இக்காசுகள் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டு சில முக்கிய விவரங்கள் தரப்பட்டுள்ளன.

இக்காசுகளில் பேரரசுச் சோழர் காசுகளும், பிற்காலப் பாண்டியர் காசுகளும், முகமதியர் வெளியிட்ட காசுகளும் உள்ளன. சோழர் காசுகளில் நின்றவாறுள்ள உருவம் ஒரு பக்கத்திலும், அமர்ந்த நிலையில் உள்ள உருவம் மற்றொரு பக்கத்திலும் உள்ளது. ராஜ ராஜ என்று நாகரி எழுத்துகளில் பெயர் உள்ளது. பிற்காலப் பாண்டியர் காசுகளில் சுந்தர பாண்டியன், எல்லாந்தலையானான், என்ற பெயர் உள்ள காசுகளும், இரட்டை மீன் உருவம் பொறிக்கப்பட்டுள்ள, காசுகளும் உள்ளன. விசயநகர் காசுகளில் அநுமன் உருவம் பொறித்த பழங்காசுகளும் கிடைத்துள்ளன. நாயக்க மன்னர்கள் வெளியிட்ட காசுகள் பலவும் இவற்றில் உள்ளன. பிற்கால முகலாயர் காசுகளும் உள்ளன. டச்சுக் கம்பெனி ஆட்சிக்காலத்தில் வெளியிடப்பட்ட காசுகளும், ஆங்கிலக் கம்பெனியார் வெளியிட்ட காசுகளும், ஆங்கில அரசு வெளியிட்ட காசுகளும் இவற்றில் உள்ளன. இவை பற்றிய விவரங்கள் தொடர்ந்து வெளியிடப்படும்.

கிழே விவரிக்கப்பட்ட இரண்டு காசுகளும் சங்ககால அரசுகளால் வெளியிடப்பட்டன. அவற்றின் முக்கியத்துவம் கருதி முதலில் வெளியிடப் படுகிறது. இக்காசுகளை ஆராயவும், கட்டுரை வடிவில் வெளியிட அனுமதி அளித்த பேராசிரியர்கள் கராஷிமா, சுப்பராயலு அவர்களுக்கு நன்றி.

1. **பாண்டியர் காசு**

சங்ககாலப் பாண்டியர் காசின் அடிப்படை விவரங்களாவன :

உலோகம் : செம்பு, வடிவம் : சதுரம், நீளம் : 1.70 செ.மீ., அகலம் : 1.65., தடிமன் : 0.02 செ.மீ., எடை : 3.9 கிராம்.



இக்காசின், முன்புறத்தில் வலதுபுறம் நோக்கி நின்றவாறுள்ள யானை, அதன் முன் பகுதியும் பின்பகுதியும் உடைபட்டுள்ளன. யானையின் மேற்புறத்தில், காசின் விளிம்பையொட்டி உள்ள உருவங்களில் பூரணகும்பம் தெளிவாக உள்ளது. மற்ற உருவங்கள் சரியாகத் தென்படவில்லை. இதன் வலதுபுறத்து உருவத்தை ஆரங்கள் உள்ள சக்கரமாகக் கருதலாம். இடதுபுற உருவங்களில் தென்படும் பகுதியை, சங்கின் அடிப்பகுதியாகக் கருதலாம். அடுத்துள்ள உருவம் வேலியிட்ட மரமாகலாம். காசின் பின்புறத்தில் மீன் வடிவத்தின் இருகோடுகள் மட்டுமே தென்படுகிறது. முழு மீன் உருவம் காணப்படவில்லை.

இக்காசினை, ஆர்.கிருஷ்ணமூர்த்தியின் "சங்ககாலத் தமிழ்க் காசுகள்" என்ற நூலில் உள்ள பாண்டியர் காசுகளில் 55, 56, 57 ஆகிய காசுகளோடு ஒப்பிடலாம். இந்நூலில் காசுகளின் முழுவடிவம் தரப்பட்டுள்ளது. மேலே விவரிக்கப்பட்ட காசில் ஓரப்பகுதிகள் யாவும் வெட்டுப்பட்டுள்ளதால் அவ்விவரங்கள் புலனாகவில்லை.

2. சேரர் காசு

சங்ககாலச் சேரர் காசின் அடிப்படை விவரங்களாவன :

உலோகம் : செம்பு, வடிவம் : சதுரம், நீளம் : 1.80 செ.மீ., அகலம் : 1.85 செ.மீ., தடிமன் : 0.01 செ.மீ., எடை : 2.5 கிராம்.



முன்புறத்தில் உள்ள உருவங்கள் மிகவும் தேய்ந்து போயுள்ளன. ஆயினும் வலதுபுறம் நோக்கியவாறுளள யானை ஒன்று நிற்பதைக் காணலாம். இதன் மேலுள்ள உருவங்கள் சரியாகப் புலப்படவில்லை. காசின் பின்புறத்தில் அம்பு பூட்டிய வில் ஒன்று படுக்கை வசத்தில் உள்ளது. அதன் நாணுக்குக் கீழ் அங்குசம் ஒன்று பக்கவாட்டில் உள்ளது. இவ்வுருவங்கள் யாவும் காசின் விளிம்பை ஒட்டி வரையப்பட்ட ஒரு வட்டத்தினுள் உள்ளன.

அம்பு பூட்டிய வில் உருவம் உள்ள இக்காசு சேரர் இலச்சினையோடு உள்ளது. எனவே இக்காசை, சேரர் வெளியிட்டனர் என்று கருதலாம். முன்பக்கத்தில் உள்ள உருவங்கள் மிகவும் தேய்ந்து போயுள்ளதால் அவற்றை அடையாளம் காணமுடியவில்லை. ஆயினும் இதே போன்ற காசுகளை, ஆர்.கிருஷ்ணமூர்த்தி தம்முடைய "சங்ககாலத் தமிழ்க் காசுகள்" என்ற நூலில் விவரித்துள்ளார். அந்நூலில் உள்ள சேரர் காசுகளில் 129, 133 ஆகிய காசுகளோடு இதனை ஒப்பிடலாம். இந்நூலில் காசுகளின் முழுவடிவம் தரப்பட்டுள்ளது.

சங்ககாலத்தைச் சார்ந்த இரண்டு அரச குடும்பங்கள் வெளியிட்ட காசுகள் இவ்விடத்தில் கிடைத்துள்ளதன் காரணத்தை அறிதல் இயல்பாகும். பாண்டியர் காசுகள் பாண்டிய நாட்டின் பகுதிகளில் கிடைப்பது இயல்பான நிகழ்வாகக் கருதினாலும், சங்க காலப் பாண்டியர் காசு முதன் முதலாகப் பெரியபட்டினத்தில் கிடைத்துள்ளதை மிக முக்கியமான கண்டுபிடிப்பாகக் கருதவேண்டும். பாண்டியர் காசுடன், சேரர் காசும் கிடைத்துள்ளதை இன்னும் சிறப்பானதாகக் கருதலாம். சங்க காலத்தைச் சார்ந்த இரண்டு அரசு குடும்பங்கள் வெளியிட்ட காசுகள் இவ்விடத்தில் கிடைப்பதைக் கொண்டு அக்கால வணிக நடவடிக்கைகளில் ஈடுபட்ட வணிகர்கள், பாண்டி நாட்டிலிருந்து மட்டுமல்லாமல் சேரர் நாட்டிலிருந்தும் வந்திருக்க வேண்டும். ஆயினும் இக்கருதுகோளுக்குத் துணையாக, சங்ககால வாழ்விடங்கள் அல்லது அக்காலத் தடயங்கள் ஏதும் இதுவரை காணப்படவில்லை என்பதை நினைவில் கொள்ள வேண்டும். தொடர்ந்து நடைபெறும் கள ஆய்வுகளால் சங்ககால இருப்பிடங்கள் கண்டுபிடிக்கப்பட வேண்டுவது மிக முக்கியமாகும்.

# 44. சங்ககாலச் சோழரின் முத்திரை மோதிரம்

ஆறுமுகசீதாராமன், தஞ்சாவூர்.

உலோகம் : செம்பு, கிடைத்த இடம் : வெண்ணாறு (தஞ்சாவூர்), எடை : 4.3 கிராம், காலம் : கி.பி. 2 ஆம் நூற்றாண்டு.



மோதிரத்தின் முகப்புப் பக்கத்தில் வலதுபக்கம் நோக்கி நிற்கும் கோழி (சேவல்) ஒன்றும், கோழியின் வாய்ப்பகுதியில் யானை ஒன்றும், யானையின் கீழே அமர்ந்த நிலையில் புலி ஒன்றும் முத்திரை முறையில் உள்ளது. சோழர்களின் அரசன் யானை மேல் ஏறித் தலைநகர் அமைத்ததற் கான நல்லதோர் இடத்தைத் தேடிப் புறப்பட்டான். வழியில் அவனுடைய வலிமை மிகுந்த யானையைக் கோழியொன்று அஞ்சாநெஞ்சுடன் தாக்கியது. யானை புறங்காட்டி நின்றது. அதுகண்ட அரசன் அந்த இடத்திற்கு இருந்த தெய்வீக சக்திதான் கோழிக்கு யானையையும் வெல்லும் ஆற்றலைக் கொடுத்தது என்று எண்ணி, அவ்விடத்திலேயே சோழன் தன் தலைநகரை அமைத்துக் கொண்டான். அன்றிலிருந்து, வெற்றிகண்ட கோழியின் நினைவாக அவ்வூருக்குக் கோழியூர் அல்லது கோழி (உறையூர்) என்ற பெயர் வழங்கத் தொடங்கியது. நடந்த இந்நிகழ்ச்சியின் நினைவாக இந்த மோதிரத்தைப் பயன்படுத்தி இருக்கலாம்.

# 45. பொருந்தல் அகழாய்வு - செய்திக் குறிப்பு

கா.இராஜன், புதுச்சேரி

பாண்டிச்சேரி பல்கலைக்கழகத்தின் வரலாற்றுத்துறை சார்பாக பேராசிரியர் கா.இராஜன் தலைமையில் மத்திய செம்மொழித் தமிழ் உயராய்வு நிறுவனம் மற்றும் மத்திய தொல்பொருள் ஆய்வுத் துறையின் நல்கை உதவியுடன் சங்ககாலப் புலவர் வாழ்ந்த ஊராகக் கருதப்படும் பொருந்தல் என்ற ஊரில் 2009 மே - ஜூன் ஆகிய இரண்டு மாதங்களாக தொல்லியல் அகழாய்வினை மேற்கொண்டது. இச்சிற்றூர் மேற்குத் தொடர்ச்சி மலையின் பின்புலத்தில் பொருந்தலாற்றின் இடக்கரையில் பழநி நகரத்திலிருந்து 12 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இவ்வூர் சங்ககாலத்தில் பாண்டிய நாட்டின் தலைநகரமான மதுரையிலிருந்து சேரநாட்டின் தலைநகரமான வஞ்சிக்குச் செல்லும் பெருவழியில் அமைந்திருப்பது ஒரு சிறப்பாகும். இவ்வூர் 'வைகாவி நாட்டுப் பொருந்தல்' என அழைக்கப்படுவதால் வேளாவிக்கோ பெரும்பேகன் ஆட்சிக்கு உட்பட்ட இடமாக இருந்திருக்க வேண்டும். சேரரின் குலத்தெய்வமாக கருதப்படுகிற கொற்றவை உறையும் இடமான அயிரைமலையும், ரோமநாட்டு நாணயங்கள் கிடைத்த இடமான சின்னக்கலையமுத்தூரும், இடைக்காலக் வணிகக் குழுவான ஐந்நூற்றுவர் கல்வெட்டுகள் கிடைத்த ஊர்களான தாமரைக்குளமும், இராஜராஜபுரமும் இப்பொருந்தலுக்கு அருகாமையில் அமைந்திருப்பது, இவ்வூரின் சிறப்பை மேலும் உயர்த்துவதாக அமைந்துள்ளது. இவ்வூர் பாண்டிச்சேரி பல்கலைக்கழகத்தின் முனைவர் பட்ட ஆய்வாளரான வி.பி.யதிஸ்குமார் களஆய்வு செய்தபொழுது கண்டுபிடிக்கப்பட்டது பொருந்தல் ஊருக்கு அருகாமையில் அமைந்துள்ள 'பாசிமேடு' என்று அழைக்கப்படும் 5.5 ஹெக்டேர் பரப்பளவு உள்ள வாழ்விடத்தில் மேற்கொண்ட அகழாய்வில் கி.மு.முதலாம் நூற்றாண்டுக்கும் கி.பி. மூன்றாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட காலத்தினைச் சார்ந்த கண்ணாடி மணிகள் மெருகு ஏற்றம் செய்ய பயன்பட்ட உலைக்களம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. தமிழகத்திலேயே முதன்முதலாக சங்ககாலத்தினைச் சார்ந்த கண்ணாடி மணிகள் உருவாக்கிய தொழிற்கூடம் இங்கு கண்டுபிடிக்கப்பட்டது. இது ஒரு முக்கிய கண்டுபிடிப்பு எனலாம். அகழாய்வு குழிகளிலிருந்து, 2000த்திற்கும் மேற்பட்ட சிவப்பு, பச்சை, மஞ்சள், நீலம் மற்றும் வெள்ளை நிற மணிகள் கிடைத்திருப்பது இவ்வகழாய்வின் சிறப்பு எனலாம். கண்ணாடி மணிகள் செய்யும் தொழிற்கூடத்தைப் பார்வையிட்ட சென்னைப் பல்கலைக்கழக முன்னாள் தொல்லியல் பேராசிரியர் ப.சண்முகம் அவர்கள் இவ்வூர் கண்ணாடி மணிகள் உற்பத்தி செய்கின்ற தொழிற்கூட நகரமாக விளங்கியிருக்க வேண்டும் என்ற கருத்துரைத்தார். கண்ணாடி மணிகள் மெருகேற்ற பயன்படுத்தப்பட்ட உலைக்களத்தினைச் சுற்றிலும் கண்ணாடி மணிகள் வைப்பதற்கான மண் குவளைகள் ஏராளமாக கிடைத்துள்ளன.

ஓர் அகழாய்வு குழியில் சங்ககாலத்தைச் சார்ந்த செங்கல் கட்டிடம் ஒன்று கண்டுபிடிக்கப்பட்டது. இதில் பயன்படுத்திய செங்கல்லின் அளவு 7×21×42 மற்றும் 8×24×48 செ.மீ. ஆகும். இது 1:3:6 என்ற அளவில் இருப்பதைக் குறிப்பிட வேண்டும். இத்தகைய செங்கற்கள் சங்ககால நகரங்களான கொற்கை, அழகன்குளம், பூம்புகார், அரிக்கமேடு, உறையூர், கரூர் ஆகிய நகரங்களில் கிடைத்துள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. மத்திய தொல்பொருள் ஆய்வுத் துறையின் தொல்லியல் கண்காணிப்பாளர் முனைவர் து.தயாளன் அவர்கள் இத்தகைய செங்கல் கட்டிடம் பொதுவாக பழமையான நகரங்களிலும், துறைமுகங்களிலும், தலைநகரங்களிலும் கிடைப்பதால் பொருந்தலும் ஓர் மிகச் சிறப்புப் பெற்ற ஊராக விளங்கியிருக்க வேண்டும் என்று குறிப்பிட்டுள்ளார்.

கேரள மாநிலத்தில் சேரரின் துறைமுகமான முசிறியை அகழாய்வு செய்து வரும் கேரள வரலாற்று ஆய்வு கழகத்தின் இயக்குநர் முனைவர் பி.ஜே.செரியன் அவர்கள் முசிறித்துறைமுகத்தில் கிடைக்கின்ற கண்ணாடி மணிகளும் பொருந்தலில் கிடைக்கின்ற கண்ணாடி மணிகளும் ஒன்றாக இருக்கின்ற காரணத்தால் பொருந்தலில் வடிவமைக்கப்பட்ட கண்ணாடி மணிகள் முசிறி துறைமுகத்தின் வழியாக மேலைநாடுகளுக்கு ஏற்றுமதி செய்திருக்க வேண்டும் என்று கருதுகிறார். பிரஞ்சு ஆய்வு நிறுவனத்தின் இந்தியவியல் துறையின் தலைவரான பேராசிரியர் எ.சுப்புராயலு அவர்கள் இவ்வூரின் அருகாமையிலும், வணிகப் பெருவழியிலும் கிடைக்கின்ற ரோமநாட்டு காசுகளின் அடிப்படையிலும், இடைக்கால வணிகக்குழுக் கல்வெட்டுகளின் பின்புலத்திலும், இவ்வாய்வினைப் பார்க்க வேண்டும் எனக் கருதுகிறார். பழநி வட்டாரத்தில் கிடைத்துள்ள வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த கல்வெட்டுகளை மத்திய தொல்பொருள் ஆய்வுத் துறையின் துணைக்கண்காணிப்பாளர் முனைவர் சு.இராஜவேலு அவர்கள் ஆவணப்படுத்தும் பணியை மேற்கொண்டுள்ளார். இவ்வகழாய்வில் கிடைத்த சிறப்புமிக்க பிற தொல்பொருட்களில் குறிப்பிட வேண்டியவை சங்ககால சதுர வடிவ செப்புக்காசு, சுடுமண் பொம்மை, தந்தத்தால் ஆன தாயக் கட்டை, எடைக்கற்கள், காதணிகள், மோதிரங்கள் போன்றவை ஆகும். இச்செப்புக்காசு சங்ககால சேர மன்னருக்கு உரியதாக இருக்கலாம் என அறிஞர்கள் கருதுகின்றனர். இதன் ஒருபுறம் வில்அம்பு பொறிக்கப் பட்டுள்ளது. சுடுமண் பொம்மைகளில் குறிப்பிடத்தக்கவை ஆண் உருவமும், பெண்ணின் தலை உருவமும், திமிலுடன் கூடிய எருதும் ஆகும்.

இதைத் தவிர வரலாற்றுக் காலத்தினைச் சார்ந்த சுமார் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட பெருங்கற்படை சின்னமான கற்பதுக்கை ஒன்றினைச் சின்னகாந்திபுரத்திற்கு அருகாமையில் அகழப்பட்டது. இவ் ஈமச்சின்னத்தில் கார்னீலியன் என்று அழைக்கப்படுகின்ற சூதுபவள மணிகளும், ஸ்டியடைட் என்று அழைக்கப்படுகின்ற வெள்ளை நிற மணிகளும், குவார்ட்ஸ் என்று அழைக்கப்படுகிற பளிங்கு மணிகளும் ஆக 7500 மணிகள் கிடைத்துள்ளன. இரு கூறாக பிரிக்கப்பட்ட இக் கற்பதுக்கையில் கருப்பு சிவப்பு மட்பாண்டங்களும், சிவப்பு

மட்பாண்டங்களும், பளபளப்பாக்கப்பட்ட கருப்புநிற மட்பாண்டங்களும், நான்கு கால்களையுடைய மண்ஜாடிகளும், குவளைகளும், தட்டுகளும், குடங்களும், இதை வைப்பதற்கு உரிய பிரிமனைகளும் இறந்தவருக்கு ஈமப்பொருட்களாக வைக்கப்பட்டுள்ளன.

நான்கு கால்களுடன் கூடிய மண் ஜாடியில் இருந்து நெல் கண்டுபிடிக்கப்பட்டது இதன் சிறப்பு அம்சமாகும். மேலும் பிரிமனை ஒன்றினைச் சுற்றி 22 சூதுபவள மணிகளும், பிரிமனைக்குள் 5 மணிகளும் வைக்கப்பட்டிருந்தன. இம்மணிகள் வைக்கப்பட்டிருந்த முறைமையை பார்க்கும் பொழுது இப்பிரிமனை ஒரு சிறப்பு சடங்குக்கு உட்படுத்தப்பட்டது தெரியவருகிறது. இப்பிரிமனையின் வெளிப்புறத்தில் நான்கு குறியீடுகள் காணப்படுகின்றன. முதல் மூன்று குறியீடுகள் கி.மு. முதல் அல்லது கி.பி. முதலாம் நூற்றாண்டைச் சார்ந்த வரிவடிவத்தின் 'வய்ர' என்று எழுதப்பட்டுள்ளது. நான்காவது குறியீடு இப்பிரிமனையின் எதிர்புறத்திலும் பிற மட்பாண்டங்களிலும் பொறிக்கப்பட்டுள்ளன. இக்குறியீட்டினை ஆய்வு செய்த ஐராவதம் மகாதேவன் முதல் மூன்று குறியீடுகளை தமிழ்-பிராமி எனக் கொண்டு இதன் காலத்தை கி.பி முதலாம் நூற்றாண்டு என காலக் கணிப்பு செய்கிறார். இக்கருத்தைக் கல்வெட்டாய்வாளர்கள் வெ.வேதாசலமும், சு.இராஜவேலும் ஏற்றுக் கொள்கின்றனர். பேராசிரியர் எ.சுப்பராயலு, ப.சண்முகம், சு.இராசகோபால் போன்றோர் இவற்றை குறியீடுகளாகக் கருதவும் வாய்ப்புள்ளது எனவும் இவற்றை மேலும் ஆய்வுக்கு உட்படுத்தி முடிவுகள் மேற்கொள்வது சிறப்பாக அமையும் என்று கருத்து வெளியிட்டுள்ளனர்.

இதைத்தவிர இப்பிரிமனைக்கு அருகாமையில் குதிரை ஏற்றத்தின் அங்கவடிகள் வைக்கப்பட்டு அதைச் சுற்றிலும் ஏராளமான ஸ்டியடைட் வகையைச் சார்ந்த மணிகள் வைக்கப்பட்டிருந்தன. இந்த அங்கவடிகளுடன் கத்தி மற்றும் அம்பு முனைகள் வைக்கப்பட்டிருந்தன.

இக்கற்பதுக்கையைச் சுற்றி 12.50 விட்டமுள்ள கல்வட்டம் ஒன்று காணப்படுகிறது. இக்கற்பதுக்கையின் தோற்றம், இதில் கிடைத்துள்ள நூற்றுக்கணக்கான மட்பாண்டங்கள், 7500க்கும் மேற்பட்ட மணிகள், மேற்கொள்ளப்பட்ட சடங்குகளின் தன்மை ஆகியவற்றை பார்க்கும் பொழுது இப்பகுதியில் வாழ்ந்த குறுநில மன்னனுக்கு அல்லது தலைவனுக்கு எடுக்கப்பட்டதாகவே இக்கற்பதுக்கையைக் கருத வேண்டியுள்ளது சங்க இலக்கியங்களான புறநானூறு, அகநானூறு, பதிற்றுப்பத்து போன்றவை இங்கு வாழ்ந்து மறைந்த சங்ககால குறுநில மன்னர்களான பேகன், பதுமன் போன்றோரின் சிறப்பினை வெளிப்படுத்துவதாக உள்ளது.

இவ்வகழாய்வினைத் தமிழ்ப் பல்கலைக்கழக மாண்புமிகு துணைவேந்தர் ம.இராஜேந்திரன் அவர்கள் பார்வையிட்டார். மேலும் பேராசிரியர் ந.அதியமான், பேராசிரியர் மு.இராமசாமி, புதுடெல்லியில் அமைந்துள்ள ஜவஹர்லால் நேரு பல்கலைக்கழகத்தில் பணிபுரியும் தமிழ் இருக்கையின் தலைவரான பேராசிரியர் கி.நாச்சிமுத்து, பேராசிரியர் சிற்பி

பாலசுப்பிரமணியம், கல்வெட்டு ஆய்வாளரான முனைவர் வெ.வேதாசலம், தொல்லியலார் சொ.சாந்தலிங்கம், தி.சுப்பிரமணியன், இரா.பூங்குன்றன் போன்றோர் இவ்வகளாய்வினைப் பார்வையிட்டு ஊக்கப்படுத்தினர்.

இவ்வகழாய்வில் பாண்டிச்சேரி, மங்களூர், திருப்பதி வெங்கடேஸ்வரா மற்றும் தமிழ்ப்பல்கலைக் கழகத்தினைச் சார்ந்த முனைவர் பட்ட ஆய்வாளர்கள், ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வாளர்கள், முதுகலை பட்ட மாணவர்கள் ஆர்வமுடன் கலந்து கொண்டு பணியாற்றினர்.



மணிகள் உற்பத்தி செய்த இடம்



கற்பதுக்கை



பல்வகை மணிகள்



சூதுபவள மணிகள்



குறியீடு, தமிழ்பிராமி எழுத்துப் பொறித்த மட்கலன்



சுடுமண் உருவங்கள்



சுடுமண் உருவம் - பெண்ணின் தலை



சுடுமண் உருவம் - காளை

# 46. தென்தமிழ்நாட்டில் புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகள் (2008-09)

வீ.செல்வகுமார், தஞ்சாவூர்.

தென்தமிழகத்தின் பழங்கற்கால மற்றும் இடைக்கற்காலப் பண்பாடுகளின் நிலவமைப்புத் தொல்லியல் என்ற பல்கலைக்கழக நல்கைக் குழுவின் ஆய்வுத் திட்டத்தின் பகுதியாகத் தென்தமிழ் நாட்டில் தஞ்சாவூர், புதுக்கோட்டை, இராமநாதபுரம், விருதுநகர், மற்றும் தூத்துக்குடி மாவட்டங்களிலும் 2008-09ல் கள ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. இக்கள ஆய்வின் போது பல வரலாற்றுக்கு முந்தையகால மற்றும் வரலாற்றுக்கால இடங்கள் கண்டறியப்பட்டன.

### வரலாற்றுக்கு முந்தையகால இடங்கள்

தமிழகத்தில் மேற்கொண்ட களஆய்வுகளில் இடைக்கற்காலத்தைச் சேர்ந்த நுண்கற்கருவிகள் பல இடங்களில் பரவலாகக் கிடைப்பது புலனாகின்றது. இவை பாண்டிச்சேரிக்கு அருகில் உள்ள மரக்காணம் முதல் திருநெல்வேலிப்பகுதி வரை தொடர்ச்சியாகக் கடற்கரையிலிருந்து 2 கி.மீ. முதல் 120 கி.மீ. வரை காணப்படும் வண்டல் அல்லது செம்மண் படிவுகளிலும், மற்றும் செம்மண்படிவின் கீழே காணப்படும் சரளைக்கல் அல்லது செம்பாறாங்கல்லின் மேற்பகுதியிலும் காணப்படுகின்றன. இவற்றுடன் சில இடங்களில் பெரிய அளவுடைய கற்களால் ஆன செர்ட், குவார்ட்சைட் கருவிகளும் கிடைக்கின்றன.

### வரலாற்றுக்கால இடங்கள்

மேலும் சில வரலாற்றுக்கால இடங்களும் கண்டறியப்பட்டன. இவற்றில் குறிப்பிடத்தக்கவை இராமநாதபுரம் பார்த்திபனூரில் கிடைத்த இரும்புக்கால-வரலாற்றுக்கால வாழ்விடமும், தூத்துக்குடி மாவட்டம் ரெட்டியப்பட்டியில் ரௌலட்டட் தட்டு துண்டுகளுடன் காணப்பட்ட வரலாற்றுக்கால வாழ்விடமும் குறிப்பிடத்தக்கவை. ரெட்டியப்பட்டியில் பவழப்பாறையில் (coral rock) செய்யப்பட்ட ஒரு சிறிய விநாயகரின் உருவமும் கிடைத்துள்ளது. இது பிந்தைய வரலாற்றுச் காலத்தைச் சேர்ந்தாக இருக்கலாம்.

### வரலாற்றுக்கு முற்பட்ட கால இடங்கள்

| | இடம் | மாவட்டம் | தொல்பொருட்கள் |
|---|---|---|---|
| 1. | பெருமுக்கல் | விழுப்புரம் | நுண்கற்கருவிகள் |
| 2. | காரைக்காடு/ கண்ணாரப்பேட்டை | கடலூர் | நுண்கற்கருவிகள் |
| 3. | பொன்மலை | திருச்சி | நுண்கற்கருவிகள் |

| | | | |
|---|---|---|---|
| 4. | துவாக்குடி | திருச்சி | நுண்கற்கருவிகள் |
| 5. | ஊத்தங்கரை | அரியலூர் | நுண்கற்கருவிகள் |
| 6. | திருக்கட்டளை | புதுக்கோட்டை | பழங்கற்காலக், நுண்கற்கருவிகள் |
| 7. | வம்பன் | புதுக்கோட்டை | நுண்கற்கருவிகள் |
| 8. | பட்டத்திவீடு | புதுக்கோட்டை | நுண்கற்கருவிகள் |
| 9. | மல்லம்பட்டி-குள்ளம்பட்டி | விருதுநகர் | நுண்கற்கருவிகள் |
| 10. | கல்லூரணி | விருதுநகர் | நுண்கற்கருவிகள் |
| 11. | எரசனப்பட்டி | விருதுநகர் | நுண்கற்கருவிகள் |
| 12. | வேடர்நத்தம் | விருதுநகர் | நுண்கற்கருவிகள் |
| 13. | மண்டபசாலை | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 14. | கமுதிவிலக்கு | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 15. | நீராவி | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 16. | அருப்புக்கோட்டை (மலையரசன் கோவில்) | விருதுநகர் | நுண்கற்கருவிகள் |
| 17. | தமிழ்பாடி | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 18. | திருச்சுழி | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 19. | காரேந்தல் (பழைய வைகை தடம்) | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 20. | மேலேந்தல் | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 21. | நரிக்குடி | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 22. | மறையூர் | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 23. | சாத்திச்சேரி | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 24. | புத்தூர் | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 25. | நெல்மடியூர் | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 26. | செய்யமங்கலம் | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |
| 27. | காஞ்சிரங்குளம் | இராமநாதபுரம் | நுண்கற்கருவிகள் |

**வரலாற்றுக்கால இடங்கள்**

| | இடம் | மாவட்டம் | தொல்பொருட்கள் |
|---|---|---|---|
| 1. | ரெட்டியப்பட்டி | தூத்துக்குடி | வரலாற்று ஆரம்ப கால பானை ஓடுகள், ரௌலட்டட் பானை வகைகள் |
| 2. | பார்த்திபனூர் | இராமநாதபுரம் | வரலாற்று ஆரம்ப கால பானை ஓடுகள் |

# 47. நாகபட்டினம் அகழாய்வு

பா.ஜெயக்குமார், தஞ்சாவூர்.

சங்ககால காவிரிப்பூம்பட்டினத்திற்குப் பிறகு சோழ மண்டலக் கடற்கரையில் தமிழகக் கடற்சார் வரலாறு மற்றும் பண்பாட்டின் தொன்மைச் சிறப்புக்களுடன் விளங்கிய நாகபட்டினத்தில் (நீதிமன்ற வளாகம், வெளிப்பாளையம்) கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை மே மாதம் 2 முதல் 24 வரை இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் நல்கை உதவியுடன் அகழாய்வினை மேற்கொண்டது. நாகபட்டினத்தில் இதுவே முதல் தொல்லியல் அகழாய்வு ஆகும்.

மக்கள் வாழ்விடப் பகுதியில் 4×4 மீட்டர் பரப்பளவில் அகழாய்வுக் குழி அமைக்கப்பட்டது. கன்னிமண் காணப்படும் 3.35 மீட்டர் ஆழம் வரை தோண்டப்பட்டது. இதில் மொத்தம் ஏழு மண் அடுக்குகள் காணப்பட்டன. இதில் முதல் இரண்டு மண் அடுக்குகள் தற்காலப் படிவுகளாக ஏறக்குறைய 150 ஆண்டுகள் பழமையானதாகும். மூன்றாவது முதல் ஐந்தாவது மண் அடுக்கு வரை ஐரோப்பியர்களின் குறிப்பாக டச்சுக்காரர்களின் வாழ்விடம் இருந்தமைக்கான கட்டடப் பகுதிகள் மற்றும் அவர்கள் பயன்படுத்திய பொருட்களின் எச்சங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. குறிப்பாக 17(53) என ஆண்டு பொறிக்கப்பட்ட செம்பு நாணயம், மென்மையான, வழவழப்புக் கொண்ட வெண்மை நிற களிமண்ணால் ஆன புகைப்பிடிப்பான்கள், சீனக் களிமண் வகை (Porcelain) மட்கலச் சில்லுகள் குறிப்பாக அவற்றில் காணப்படும் தமிழக மரபுசார் படகுகள் போன்றவை கி.பி. 16 முதல் 19 ஆம் நூற்றாண்டு வரை இங்கு ஐரோப்பியர்களின் செல்வாக்கு இருந்தமைக்குச் சான்றாகும்.

ஆறாவது மண்ணடுக்கு 1 மீ. முதல் 2.60 மீட்டர் வரை ஒரே தன்மையுடையதாகவும் பிற மண்ணடுக்குகளைக் காட்டிலும் அளவில் பெரியதாகவும் காணப்படுவதோடு முழுவதும் சோழர் கால எச்சங்களைக் கொண்டிருந்தமை குறிப்பிடத்தக்கது. இம்மண்ணடுக்கோடு தொடர்புடைய எச்சங்களாக 'ஸ்ரீராஜராஜா' என தேவநாகரி எழுத்துப் பொறிப்புடன் செம்பு நாணயம் (அகழாய்வில் கிடைப்பது இதுவே முதன்முறை) மற்றும் பழுப்புநிற சீனக் களிமண் (Celadon) மட்கலவகையைச் சார்ந்த சில்கள் பல கிடைத்திருப்பது கி.பி.9-10 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.14-15 ஆம் நூற்றாண்டு வரை சீனா மற்றும் தென்கிழக்காசியப் பகுதிகளுடன் நாகபட்டினம் கொண்டிருந்த உறவுக்குச் சான்றுகளாகும்.

சைலேந்திர மரபினைச் சேர்ந்த ஸ்ரீவிசய மன்னன் ஸ்ரீமாறவிசயோத்-துங்கவர்மன் சோழர் காலத்தில் கட்டியதாக ஆனைமங்கலம் செப்பேடுகள் குறிப்பிடும் முழுதும் செங்கற்களாலான புத்தவிகாரைகளில் (ஸ்ரீராஜராஜப் பெரும்பள்ளி, ஸ்ரீ சூளாமணிவர்மப் பெரும்பள்ளி) ஒன்றின் அடிப்பகுதி 1.85 மீ முதல் 3 மீ. ஆழம் வரை காணப்படுவதும் இதனோடு அக்காலத்தில்

பயன்படுத்திய மட்கலங்களின் சில்லுகள், கூரை ஓடுகள் கிடைத்திருப்பதும் அம்மண்ணடுக்கு சோழர் காலத்தியது என்பதைத் தெளிவாக்குகிறது. இவற்றோடு காணப்படும் பிற தொல்பொருட்களில் குறிப்பாக புத்தமதம் சார்ந்த குறியீடுகள் பல பானைஓடுகளில் கிடைத்திருப்பது (இதுபோன்று இதுவரை எங்கும் கிடைக்கவில்லை) அச்சமயம் இங்கு சிறப்பாக நிலவியிருந்தமையைத் தெளிவாக்கும் அரிதான எச்சங்களாகும்.

மூன்று மீட்டர் ஆழத்திற்குக் கீழே அதாவது ஏழாவது மண்ணடுக்கில் பல்லவர் காலத்து மண்பாண்டச் சில்லுகளும் அவற்றில் ஒன்றில் "கா" என்ற தமிழ் எழுத்தும் காணப்பட்டமை சிறப்புக்குரியதாகும். எழுத்து கீறப்படாமல் முத்திரை குத்தப்பட்டது போன்று உள்ளது. எழுத்தமைதியில் பல்லவர் காலமாகக் (கி.பி. ஆறாம் நூற்றாண்டு) கொள்ளலாம். மேலும் இதை 'கர்' என வாசிப்பதும் பொருத்தமானதாக இருக்கும். அவ்வாறெனில் 'நாகர்' அல்லது 'நாகானனம்' (நாகர்+அனனம்) என்னும் பெயர்களோடு தொடர்புபடுத்தலாம். இம்மண்ணடுக்கில் 3.20 மீட்டர் முதல் 3.35 மீட்டர் வரை இரும்புக்காலம் அல்லது சங்ககாலத்தைச் சேர்ந்த கருப்பு சிவப்பு பானை ஓடுகள் மற்றும் முழுவதும் கருமை நிறம் உடைய பானை ஓடுகள் காணப்பட்டன. இவற்றோடு ரோமானிய பானை ஓடுகளும் கிடைப்பது முக்கியத்துவம் வாய்ந்ததாகும். கடற்பயணி தாலமி (கி.பி.1ஆம் நூற்றாண்டு) 'நிகம' எனச் சுட்டுவதை இங்கு நினைவுகூறல் தகும்.

மேற்சுட்டிய மண்ணடுக்குகளோடு தொடர்பில்லாததாக இருந்தாலும் சோழர்கால மண்ணடுக்கின் கீழ் நிலையில் புதிய கற்காலக் கோடரி சரிபாதியாக உடைந்த நிலையில் கிடைத்திருப்பது இப்பகுதியில் புதிய கற்காலப் பண்பாடும் நிலவியிருந்ததைக் காட்டுவதோடு அக்கற்கருவியைப் பிற்காலத்திய மக்களும் பயன்படுத்தியுள்ளனர் என்பதையும் புலப்படுத்துகிறது.

தமிழகத்தில் இதுவரை மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் ஐரோப்பியர் காலம் முதல் சங்ககாலம் வரையிலான பண்பாட்டுப் படிநிலைகளை முதல்முறையாக வெளிக்கொணர்ந்த சிறப்பு இந்த அகழாய்விற்கு உண்டு.

கட்டுரை ஆசிரியர் தலைமையில் நடைபெற்ற இவ்வகழாய்வில் ஆசிரியர்கள் வீ.செல்வகுமார், ஆ.துளசேந்திரன், மா பவானி, எம்.செல்வராஜ் மற்றும் மாணவர்கள் செ.கௌரிசங்கர், எம்.எஸ்.ராம்ஜி, எஸ்.நந்தகுமார், த.தங்கதுரை, கோ.மதிவாணன், ஏ.ராஜா, ஆர்.செந்தில், ஏ.ரமேஷ், கே.வைரவநாதன் ஆகியோர் பங்கு கொண்டனர்.




மண்ணடுக்கினைக் காட்டும் படம்



வடக்கு வெட்டு வாயில் (Northern Section) டச்சுக் காலத்து கட்டிடப்பகுதி



மரபுசார் கலங்கள் சீன மட்பாண்டச் சில்லுகள்



பானை ஓடுகளில் புத்த மதக் குறியீடுகள்



ரோமானிய மற்றும் சீன, அரேபிய பானைகளின் சில்லுகள்



கருப்பு சிவப்பு பானை ஓடுகள் மற்றும் கூரை ஓடுகள்

# 48. கடலூர் மாவட்டத்தில் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

ஜே.ஆர்.சிவராமகிருஷ்ணன், சிதம்பரம்
சு.கண்ணன், சிதம்பரம்
ப.கலைச்செல்வன், சிதம்பரம்

கடலூர் மாவட்டத்தின் விருத்தாசலம் மற்றும் சிதம்பரம் வட்டங்களில் 2008ஆம் ஆண்டு தொல்லியல் கள ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன. இவ்வாய்வுகளின் போது ஆதிவராகநத்தம், தர்மநல்லூர், நடியப்பட்டு, அதியமான்குப்பம் ஆகிய இடங்களில் பெருங்கற்படைக்காலம் எனப்படும் இரும்புக்காலத்தைச் சார்ந்த ஈமத்தாழிகள், தொல்பொருட்கள், பல்லவர்கால கொற்றவை சிற்பம், இடைக்கால வாழ்விடம் ஆகியவை கண்டறியப்பட்டன. இக்கட்டுரை மேற்கூறிய இடங்களில் கண்டுபிடிக்கப்பட்ட தொல்லியல் தடயங்களைப் பற்றி விவரிக்கிறது.

**ஆதிவராகநத்தம்**

கடலூர் மாவட்டம், சிதம்பரம் வட்டத்திலுள்ள புவனகிரியிலிருந்து ஏறத்தாழ இரண்டு கி.மீ. மேற்கு திசையில் வெள்ளாற்றின் வடகரையில் அமைந்துள்ளது. ஆதிவராகநத்தம். இவ்வூரின் தெற்கு பகுதியிலுள்ள சுடுகாட்டிற்கு அருகில் காணப்படுகின்ற மேட்டில் இரும்புக்காலத்தைச் சார்ந்த ஈமத்தாழிகள் ஏறத்தாழ ஒரு அடிக்குக் கீழே மண்ணில் புதையுண்டுள்ளன. தற்சமயம் இம்மேட்டில் தொடர்ச்சியாக மண் வெட்டப்படுவதால் இங்கு புதைந்திருந்த ஏராளமான ஈமத்தாழிகள் அழிக்கப்பட்டு வருகின்றன. சில சமயங்களில் மண் எடுப்பின் போது சிதைந்த நிலையில் ஈமத்தாழிகள் வெளிப்படுகின்றன. இவை ஏறத்தாழ 1.30 மீட்டர் உயரமும், 1.10 மீட்டர் சுற்றளவும் (மையப்பகுதியில்) கொண்டுள்ளன. ஈமத்தாழி ஒன்றினுள் முற்றிலும் அரிக்கப்பட்ட நிலையில் கருப்பு சிவப்பு நிற மற்றும் சிவப்பு நிற மட்கல கிண்ணங்கள் காணப்பட்டன. இதை தவிர ஈமத்தாழிகள் புதைக்கப்பட்டுள்ள மேட்டுப்பகுதியின் மேற்பரப்பில் ஏராளமான கருப்பு சிவப்பு, கருப்பு மற்றும் சிவப்பு நிற மட்கல ஓடுகளும் பரவிக் கிடக்கின்றன.

**தர்மநல்லூர்**

கடலூர் மாவட்டம், விருத்தாசலம் வட்டத்திலுள்ள வளையமாதேவிக்கு அருகிலுள்ள தர்மநல்லூரில் இரும்புக்காலம் மற்றும் பின் இடைக்காலத்தைச் சார்ந்த தொல்பொருட்கள் கண்டறியப்பட்டுள்ளன. இவற்றில் வளையமாதேவி மற்றும் தர்மநல்லூரிலுள்ள இரும்புக்காலத்தைச் சார்ந்த ஈமத்தாழிகளைக் கா.ராஜன் முன்னரே கண்டறிந்துள்ளார்.[1]

இவ்வூரின் தெற்குப் பக்கமுள்ள பூலாஞ்சேரியின் தென்கரையில் அமைந்துள்ள பெரியதோப்பு என்ற இடத்தின் பள்ளமான பகுதியில்

இரும்புக்கால ஈமத்தாழிகளும், மேடான பகுதியில் பின் இடை க்காலத்தைச் சார்ந்த உறை கிணறுகளும் காணப்படுகின்றன. இவ்வூர் மக்கள் தங்களின் வீட்டுச் சுவர்களைக் கட்டுவதற்கும் செப்பனிடுவதற்கும் பெரியதோப்பு பகுதிகளிலிருந்து தொடர்ந்து மண் எடுத்து வருகின்றனர். இதன் காரணமாக இப்பகுதியில் புதைந்துள்ள தொல்பொருட்கள் வெளிப்பட்டு வருகின்றன.

பெரியதோப்பின் தாழ்வான பகுதியில் சிதைந்த நிலையிலுள்ள ஈமத்தாழிகள் காணப்படுகின்றன. சில ஈமத்தாழிகளில் மக்கிய மனித எலும்பு துண்டுகளும் பல் ஒன்றும் காணப்பட்டன. இப்பகுதியின் மேற்பரப்பில் இரும்புக்காலத்தைச் சார்ந்த கருப்பு சிவப்பு, சிவப்பு மற்றும் கருப்பு நிற மட்கல ஓடுகள். கல்லினால் ஆன உடைந்த திருகை, பழுப்பு நிற கல்மணி, ஆண் சுடுமண் உருவம் ஆகிய தொல்பொருட்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இங்கு மட்கலன்களில் கருப்பு சிவப்பு மற்றும் கருப்புநிற வகைகளில் கிண்ணங்கள் கிடைக்கின்றன. கருப்பு நிற மட்கல வகையில் கூம்பு வடிவ கைப்பிடியுடன் கூடிய மூடிகள் கிடைத்துள்ளன. இங்கு கண்டறியப்பட்டுள்ள ஆண் சுடுமண் உருவத்தின் கீழ்பகுதியும், கைகளும் முற்றிலுமாக அழிந்துவிட்டன. இவ்வுருவத்தின் தலைப்பகுதியும் உடைந்த நிலையில் உள்ளது. நன்கு சுடப்பட்ட இந்த ஆண் உருவத்தின் தலை முடி வரிவரியாக காட்டப்பட்டுள்ளது. இவ்வுருவம் மார்பு வரை தொங்கும் நீண்ட மெல்லிய காதணிகளை அணிந்துள்ளது. இவ்வுருவத்தின் கழுத்தை மெல்லிய ஆரம் அலங்கரிக்கிறது. இவ்வுருவத்தின் முகம் நீள்வட்ட வடிவில் அமைக்கப்பட்டுள்ளது. ஆண் உருவத்தின் வளைந்த புருவங்கள், நீள் வட்ட வடிவ கண்கள், தட்டையான மூக்கு, தடித்த உதடுகள், எடுப்பான தாடை முதலியன இவ்வுருவத்திற்கு அழகு சேர்க்கின்றன. இந்த ஆண் சுடுமண் உருவத்தின் கலைத்தன்மைகள் முன் வரலாற்றுக் காலகட்டத்தைச் சார்ந்த காஞ்சிபுரம், திருகாம்புலியூர் ஆகிய இடங்களில் கண்டறியப்பட்டுள்ள சுடுமண் உருவங்களின் கலை இயல்புகளை ஒத்துள்ளன.

பெரியதோப்பின் மேடான பகுதியில் பின் இடைக்காலத்தைச் சார்ந்த இரண்டு சுடுமண் உறைகிணறுகள் காணப்பட்டன. இவை இரண்டும் ஐந்து மற்றும் மூன்று உறைகளைக் கொண்டிருந்தன. இப்பகுதியின் மேற்பரப்பில் பின் இடைக்காலத்தைச் சார்ந்த வரி அலங்காரங்களையுடைய சிவப்பு நிற மட்கல ஓடுகள் கிடைக்கின்றன. மேலும் இப்பகுதியில் வட்ட வடிவ கழிவுநீர் குழாய் ஒன்றின் உடைந்த பகுதியும் காணப்பட்டது. தர்மநல்லூருக்கு அருகிலுள்ள எறும்பூர்[2] மற்றும் வளையமாதேவியில்[3] சோழர்கால கல்வெட்டுகளும், தர்மநல்லூரில் (பெரியதோப்பு) கி.பி.1739ஆம் ஆண்டைச் சார்ந்த பிற்காலக் கல்வெட்டு ஒன்றும் உள்ளன. இக்கல்வெட்டுச் சான்றுகளை அடிப்படையாகக் கொண்டு தர்மநல்லூரில் கி.பி.10 ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 18ஆம் நூற்றாண்டு வரையுள்ள காலகட்டத்தில் இடைக்காலப் பண்பாடு பரவியிருந்தது என்பதைக் கணிக்க முடிகிறது.

**நடியப்பட்டு**

கடலூர் மாவட்டம், விருத்தாசலம் வட்டம், விருத்தாசலத்திலிருந்து ஏறத்தாழ இருபது கி.மீ. வடகிழக்கு திசையில் நடியப்பட்டு அமைந்துள்ளது.

இவ்வூரின் மேற்குப் பக்கத்தில் காணப்படுகின்ற சுப்புராயர் மலையின் (கூழாங்கல் மலை) மேற்கு மற்றும் தெற்கு சரிவில் ஏராளமான இரும்புக்கால ஈமத்தாழிகள் ஏறத்தாழ ஒரு அடி ஆழத்தில் மண்ணில் புதையுண்டுள்ளன. இவற்றை முதலில் கா.ராஜன் கண்டறிந்தார்.[1] இப்பகுதி மக்கள் சுப்புராயர் மலையில் தொடர்ந்து மண்ணை வெட்டி, அங்கு கிடைக்கின்ற வழவழப்பான கூழாங்கற்களை எடுத்து நகரங்களுக்கு அனுப்புவதால் இங்கு புதைந்துள்ள ஈமத்தாழிகளும், அவற்றினுள் உள்ள தொல்பொருட்களும் அவ்வப்போது வெளிப்பட்டு வருகின்றன. அண்மையில் நடியப்பட்டில் தொல்லியல் கள ஆய்வு மேற்கொண்ட போது ஏறத்தாழ 90 செ.மீ. உயரமும், 178 செ.மீ. சுற்றளவும் உடைய ஈமத்தாழிகள் கண்டறியப்பட்டன. சிதைந்த நிலையிலுள்ள ஈமத்தாழிகளுக்குள் கருப்பு சிவப்பு, சிவப்பு மற்றும் கருப்பு நிற மட்கல வகைகளின் கிண்ணங்கள், தாங்கி, மூடி முதலியன கிடைத்துள்ளன. சுப்புராயர் மலையில் ஏற்கனவே மண்ணைவெட்டி எடுக்கும்போது தாழிகளுக்குள் இருந்து மட்கலன்கள், சுடுமண் விளக்குகள், இரும்பு பொருட்கள் கிடைத்ததாக இவ்வூர் மக்கள் தெரிவித்தனர். இங்கு காணப்பட்ட ஈமத்தாழி ஒன்றின் வாய்ப்பகுதி பெரிய கூம்பு வடிவ மூடியால் மூடப்பட்டிருந்தது.

**அதியமான்குப்பம்**

கடலூர் மாவட்டம், விருத்தாசலம் வட்டம், விருத்தாசலத்திலிருந்து ஏறத்தாழ பன்னிரெண்டு கி.மீ. தொலைவிலுள்ள அதியமான்குப்பத்தில் பல்லவர்கால சிற்பப் பாணியினைக் கொண்ட கொற்றவையின் சிற்பம் ஒன்று கண்டறியப்பட்டது. இவ்வூரிலுள்ள ஊத்துக்குட்டையின் மேற்கு கரையிலுள்ள படித்துறைக்கு அருகே இச்சிற்பம் முன்னர் அமைக்கப் பட்டிருந்தது. பின்னர் இக்குட்டை தூர்வாரப்பட்ட போது மேற்கு கரை முற்றிலுமாக கரைந்துவிட்டது. இதன் காரணமாக தற்சமயம் கொற்றவையின் சிற்பம் குளத்தினுள் காணப்படுகிறது. செவ்வக வடிவ கற்பலகையில் செதுக்கப்பட்டுள்ள இச்சிற்பத்தின் கீழ் பகுதி முழுவதும் மண்ணில் புதையுண்டுள்ளது. இப்புடைப்புச் சிற்பத்தில் கொற்றவை நின்ற நிலையில் எண்கரங்களுடன் காட்சி தருகிறார். இவர் நீண்ட குறுகலான ஜடாமகுடம், கனத்த காதணிகள், ஹாரம், கேயூரம், காப்பு, மேகலை ஆகிய அணிகலன் களையும், மார்புக் கச்சை மற்றும் கீழாடையையும் அணிந்துள்ளார். கொற்றவையின் முகம் நீள் வட்டவடிவில் அமைக்கப்பட்டுள்ளது. இச்சிற்பத்தில் கொற்றவையின் தோள் பகுதி அகலமாகவும், இடை சிறுத்தும் வடிக்கப்பட்டுள்ளது. கொற்றவையின் இடையில் சிறு கத்தியொன்று செருகப்பட்டுள்ளது. வலது கரங்கள் மேலிருந்து கீழாக சக்கரம், அம்பு, மணி முதலியவற்றையும், இடது கரங்கள் சங்கு, வில், கத்தி ஆகியவற்றையும் தாங்கியுள்ளன. கொற்றவையின் வலது மற்றும் இடது கீழ் கரங்கள் இரண்டும் கடி ஹஸ்த நிலையில் இடுப்பின் மீது வைத்தவாறு உள்ளன. இச்சிற்பத்தின் கலைத்தன்மைகளை அடிப்படையாகக் கொண்டு இதனின் காலத்தை கி.பி.8-9ஆம் நூற்றாண்டு எனக் கருதலாம். அதியமான்குப்பம் மற்றும் அதற்கு அருகிலுள்ள ஊர்களில் பல்லவர்கால கல்வெட்டுகள்

அல்லது சிற்பங்கள் எதுவும் இதுவரை கிடைக்கவில்லை. இருப்பினும் இவ்வூரிலிருந்து ஏறத்தாழ இருபது கி.மீ. தொலைவிலுள்ள திருவதிகையில் பல்லவர்கால கோயிலும், கல்வெட்டுகளும் உள்ளன. பல்லவர் காலத்தில் தொண்டை மண்டல பகுதியில் செல்வாக்கு பெற்றிருந்த கொற்றவையின் வழிபாடு நடுநாட்டு பகுதியிலும் பரவி இருந்ததை இச்சிற்பம் உணர்த்துகிறது.



இரும்புக்கால ஈமத்தாழி
ஆதிவராகநத்தம்



இரும்புக்கால ஈமத்தாழி
நடியப்பட்டு



சுடுமண் ஆண் உருவத்தின் தலைப் பகுதி, இரும்புக்காலம் தர்மநல்லூர்



சுடுமண் ஆண் உருவம்,
இரும்புக்காலம் தர்மநல்லூர்



கருப்பு-சிவப்பு மற்றும் கருப்பு
மட்கல வகைகள்
இரும்புக்காலம் நடியப்பட்டு



சிதைந்த நிலையிலுள்ள
ஈமத்தாழி இரும்புக்காலம்,
தர்மநல்லூர்



சுடுமண் உறை கிணறு
இடைக்காலம், தர்மநல்லூர்



கொற்றவை, அதியமான்குப்பம்
பல்லவர்காலம்

குறிப்புகள்

1. K.Rajan, Archaeological Gazetteer of Tamil Nadu, Manoo Pathippakam, Thanjavur, 1997, p.287 and 320.

2. T.V.Mahalingam, A Topographical List of Inscriptions in the Tamil Nadu and Kerala States, Vol. II, S.Chand & Co., New Delhi, 1988, pp.63-68.

3. Ibid., p. 120.

4. K.Rajan, Op. Cit., p. 321.

5. T.V.Mahalingam, Op. Cit., pp.152-53.

# 49. பிள்ளையார்பட்டி (தஞ்சாவூர்) அகழாய்வுக் கண்டுபிடிப்புகள்

வீ.செல்வகுமார், தஞ்சாவூர்

பல்கலைக்கழக நல்கைக் குழுவின் நிதி உதவியுடன், மேற்கொள்ளப் பட்டு வரும் "தென் தமிழ்நாட்டின், வரலாற்றுக்கு முற்பட்ட கால நிலவமைப்புத் தொல்லியல்" என்ற பெரும் ஆய்வுத்திட்டத்தின் ஒரு பகுதியாக தமிழ்ப் பல்கலைக்கழக வளாகத்தில் ஏப்ரல் 2009ல் மேற்கொண்ட தொல்லியல் அகழாய்வில் பழங்கற்கால, மற்றும் இடைக்கற்கால மனிதர்கள் வாழ்ந்ததற்கான தடயங்கள் கிடைத்துள்ளன.

இங்கு 5 மீ. × 5 மீ அளவுள்ள இரண்டு குழிகள் தோண்டப்பட்டன. அகழாய்வுக்குழி 2ல் பழங்கற்காலக் கருவிகளான சுரண்டிகள் மற்றும் செதில் கருவிகள் போன்றவை நான்காவது மண்ணடுக்கில் கிடைத்துள்ளன. இம்மண்ணடுக்கிற்கு மேல் உள்ள மூன்றாம் மண்ணடுக்கில் கருவிகள் ஏதும் கிடைக்கவில்லை. இதற்கும் மேல் உள்ள இரண்டாவது மண்ணடுக்கில் நுண்கற்கருவிகள் அதிக அளவில் கிடைத்தன. தஞ்சாவூர்ப் பகுதியில் பழங்கற்காலக் கருவிகள் மண்ணடுக்குகளில் கண்டுபிடிக்கப்படுவது இதுவே முதல் முறையாகும். இந்தப் பழங்கற்காலக் கருவிகள் 10,000 ஆண்டுகளுக்கு மேல் பழமையானவை.

அகழாய்வுக்குழி 1 மற்றும் 2ல் இரண்டாவது மண்ணடுக்குகளில் கிடைத்த நுண்கற்கால சுரண்டிகள், முக்கோண வடிவ மற்றும் கூர்முனைக் கருவிகள் பளிங்குக் கற்களால் செய்யப்பட்டவை. இடைக்கற்கால மக்கள் பழங்கற்காலத்தைத் தொடர்ந்தும் வாழ்ந்துவந்தனர். இம்மக்கள் இன்றிலிருந்து 10000லிருந்து - 3000 வரையிலான கால எல்லையில் இப்பகுதியில் வேட்டையாடி உணவு சேகரித்து வாழ்ந்திருந்தனர். இவர்கள் விவசாயம், ஆடுமாடு வளர்ப்பு, உலோகம், பானை செய்தல் போன்றவற்றை அறிந்திருக்கவில்லை. இக்கால மண்ணடுக்கில் நீர் ஓடும் சிறிய வாய்க்கால் மற்றும் குழியின் ஒரு பகுதியும் கண்டறியப்பட்டது.

தஞ்சாவூர்ப் பகுதியில் மனித வரலாறு பழங்கற்காலத்திலேயே தொடங்குகிறது என்பதை இந்த அகழாய்வு தெளிவாக உணர்த்துகின்றது. இவ்வகையான ஆதாரங்கள் இலங்கையில் கிடைத்துள்ளபோதிலும், தென்தமிழ் நாட்டில் இதுவரை அகழாய்வுகளில் கிடைக்கவில்லை. தமிழ்நாட்டில் சென்னைக்கருகில் கொர்தலையாற்றுப் பள்ளத்தாக்கில் இத்தகைய தடயங்கள் கிடைத்துள்ளன. தர்மபுரிப் பகுதியில் தமிழ்ப் பல்கலைக்கழகம் முனைவர்.கா.இராஜன் தலைமையில் மேற்கொண்ட அகழாய்வுகள் இத்தகைய வரலாற்றுக்கு முற்பட்ட காலத் தடயங்களை வெளிப்படுத்தியுள்ளன. தமிழக அரசு தொல்லியல் துறை நுண்கற்காலக் கருவிகளை மாங்குடி மற்றும் தேரிருவேலி போன்ற இடங்களில் அகழாய்வு செய்து கண்டறிந்துள்ளது. தென் தமிழகத்தில் அண்மையில் மேற்கொள்ளப் பட்ட மேற்பரப்பாய்வுகளில் 100க்கும் மேற்பட்ட இடைக்கற்கால இடங்கள் மற்றும் ஐந்து பழங்கற்கால இடங்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

# 50. அமெரிக்காவில் தமிழ் எழுத்துப் பொறிப்புகள் கொண்ட தீர்த்தங்கரர் செப்புத் திருமேனிகள்

எ.சுப்பராயலு, புதுச்சேரி
வெ.வேதாசலம், மதுரை

இரு சமணத் தீர்த்தங்கரர்களின் செப்புத் திருமேனிகள் அமெரிக்க நாட்டின் தலைநகரான வாஷிங்டனில் உள்ள ஸ்மித்ஸோனியன் (Smithsonian Institute) நிறுவனத்தைச் சேர்ந்த சேக்லர் அருங்காட்சியகத்தில் உள்ளன. இரண்டு சிலைகளும் பீடத்தில் தமிழ் எழுத்துப் பொறிப்புக்களைப் பெற்றுள்ளன.

**தீர்த்தங்கரர் செப்புத் திருமேனி - ஒன்று**

வேலைப்பாடு மிக்க சிம்மாசனத்தில் அர்த்தபரிங்காசனத்தில் அமர்ந்த கோலம். சிம்மாசனத்தினை முன்புறமும் பின்புறமும் பக்கத்திற்கு மூன்றாக ஆறு சிம்மங்களும் பக்கவாட்டில் பக்கத்திற்கு இரண்டாக நான்கு சிம்மங்களும் சுமந்து நிற்கின்றன. உபபீடம் ஜகதி, குமுதம், பட்டி போன்ற உறுப்புகளை இச்சிம்மாசனம் பெற்றுள்ளது. பீடத்தின் பின்புறம் திருவாசியைச் செருவதற்குரிய அமைப்பு காணப்படுகிறது. அணிகலன்கள் இன்றி அணியாத அழகியராக இத்தீர்த்தங்கரர் காட்சியளிக்கின்றார். எடுப்பான தோற்றத்துடன் அமைதி தவழும் முகபாவத்துடன் நீள்செவிகளுடன் காணப்படுகின்றார். ஒன்றன்மேல் ஒன்றாக மடித்து வைத்த பாதங்களின் மேலே கரங்கள் இரண்டும் தியானநிலையில் வைக்கப்பட்டுள்ளன.

இத்தீர்த்தங்கரர் திருமேனி பற்றி ஏற்கெனவே எழுதியுள்ள சிவராமமூர்த்தி[1] இது சிதரால், கழுகுமலை ஆகிய இடங்களில் உள்ள கற்சிலைகள் பாணியில் செய்யப்பட்டுள்ளது என்று கருதுகிறார். உமாகாந்த் பிரேமா நந்த ஷா[2] இது வரை தமிழ்நாட்டில் கிடைத்த சமண செப்புச் சிலைகளுள் பழமையானது என்று கூறியுள்ளார். மேலும் அவர் இச்சிலையெழுத்துகள் ஒன்பதாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை என இரா.நாகசாமி அவர்கள் கருதுவதாகவும் குறிப்பிட்டுள்ளார். ஆயினும் இவ்வெழுத்துப் பொறிப்பின் பாடம் யாரும் வெளியிட்டதாகத் தெரியவில்லை. மெய்யெழுத்துகள் புள்ளி பெற்றுள்ளன. இது 9 ஆம் நூற்றாண்டுப் பல்லவர் கல்வெட்டு எழுத்துக்களோடு ஒப்பிடக்கூடியனவாக உள்ளன. இதில் உள்ள பாடம் இச்சிலையின் பெயரையும் சிலை செய்வித்தவர் பெயரையும் கொடுக்கிறது. சிலை ப்ரதிம அதாவது படிமம் என்று சுட்டப்படுகிறது. பீடத்தின் ஒரு மூலை உடைந்துள்ளதால் எழுத்துப் பொறிப்பு முழுமையாக இல்லை, இருப்பினும் செய்தி தெளிவாக உள்ளது.

"ஸ்ரீ . விளைநாட்டுப் புள்ளிநின்ற புத்தூருடையான்((ஸ்ரீ)).... .... த அஜிதி$_3$ ஸவர்ஜ்ஜ ப்ரதி$_2$ம"

வடநாட்டைப் போன்று, இவ்வுருவம் எந்த தீர்த்தங்கரர் என்று அடையாளம் காண்பதற்குரிய குறியீடுகள் இதன் பீடத்தில் இல்லை. எனவே இவ்வுருவம் யாருடையது என்று அடையாளம் காண்பதில் சிக்கல் உள்ளது. பீடத்தில் உள்ள எழுத்துப் பொறிப்பில் இவ்வுருவத்தின் பெயர் '.......த அஜிதி ஸர்வஜ்ஜ' என்று குறிப்பிடப்படுகிறது. ஸர்வஜ்ஜ என்ற சொல் எல்லாம் அறிந்தவர் என்று பொருள் தரும். இச்சொல் எல்லா தீர்த்தங்கரரையும் குறிக்கும். 'அஜிதி, அஜித' என்ற பெயர் இரண்டாம் தீர்த்தங்கரர்க்கு உரியது. எனவே எல்லாம் வல்ல அஜித தீர்த்தங்கரரது உருவமாக இது இருப்பதற்கு வாய்ப்புள்ளது.

இத்தீர்த்தங்கரர் உருவத்தினைச் செய்வித்தவன் விளைநாட்டுப் புள்ளிநின்றபுத்தூரைச் சார்ந்தவன் ஆவான். விளைநாடு என்பது சோழ நாட்டிலுள்ள சிறிய உள்நாடாகும். இது நன்னிலம் வட்டத்தின் ஒரு பகுதியாகும். அச்சிற்பம் தமிழ்நாட்டிலுள்ள எந்தச் சமணப்பள்ளிக்குரியது என்பதைக் கண்டறிய முடியவில்லை. இத்தீர்த்தங்கரரின் உருவ அமைதியைக் கொண்டு இது ஒன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலோ அல்லது பத்தாம் நூற்றாண்டின் தொடக்கத்திலோ செய்யப்பட்டிருக்க வேண்டும் எனலாம். பல்லவர் காலத்திலிருந்து சோழர் காலத்திற்கு அடியெடுத்து வைக்கும் செப்புத் திருமேனியின் கலை நயத்தினை இதில் காணமுடிகிறது.

**தீர்த்தங்கரர் செப்புத் திருமேனி - இரண்டு**

இத்தீர்த்தங்கரர் சிற்பம் முந்தைய செப்புத் திருமேனியைவிட கலைநயமிக்க பதினோராம் நூற்றாண்டு சோழர்காலப் படைப்பாகும். இதனை இதன் பீடத்தில் பதினோராம் நூற்றாண்டு எழுத்தமைதியில் பொறிக்கப்பட்ட எழுத்துப் பொறிப்பும் உறுதிப்படுத்துகிறது. நான்கு வளையங்கள் பொருத்தப்பட்ட இணையரிகள் (பக்கத்திற்கு ஒன்றாக நிற்கும் சிம்மங்கள்) உள்ள செவ்வகப்பீடத்தில் தாமரை மலர் மீது நின்ற நிலையில் இத்தீர்த்தங்கரர் விளங்குகின்றார். நீள்செவிகளுடன் மெல்லிய உடல் கட்டுடன் அமைதி தவழும் கோலத்துடன் நிற்கின்றார். இவரைச் சூழ்ந்து காணப்படும் வேலைப்பாடு மிக்க பழமையான திருவாசியைத் தமிழ்நாட்டில் எந்த சமணத்தலத்திலும் காண்பது அரிது. மலர் வளையங்களும் மூச்சுடராய் எரியும் அனல் சுடர்களும் திருவாசியைச் சூழ்ந்துள்ளன. சோழர்காலச் சமணச் செப்புத்திருமேனி கலைப்படைப்பின் சிகரமாய் இது விளங்குகிறது. இத்திருவாசியின் பின்புறம் தீர்த்தங்கரரை அணி செய்யும் முறையில் நான்கு மலர்ச் சரங்கள் தொங்குவதும் சமண திருமேனிகளில் காண்பது அரிது.

எழுத்துப் பொறிப்பு பீடத்தின் அடிப்பகுதியில் தொடங்கி மேற்பகுதியில் முடிகிறது. பெரும்பகுதி முன் பக்கத்திலும் ஒரு சிறு பகுதி (வரி 4, 6) குறுக்குப் பக்கத்திலும் உள்ளது. எழுத்தமைதியைக் கொண்டு இதனை பதினோராம் நூற்றாண்டு எனலாம்.

1. ஸ்வஸ்திஸ்ரீ விக்கிரம சிங்கை நா

2. தரை எழுந்தருளிவித்தான் கானப்பே

3. ருடையான் வெண்காடன் தில்

4. லை விடங்கன்

5. ஆன ராஜேந்திரசோழ விழுப்பரைய

6. ன்

இத்தீர்த்தங்கரர் விக்கிரமசிங்கை நாதர் என்று அழைக்கப்படுகிறார். விக்கிரமசிங்கன் என்ற பெயர் சோழ அரசன் (முதல் அல்லது இரண்டாம் ராஜேந்திரன்) விருதுப் பெயரைக் குறிக்கலாம். எழுந்தருளுவித்த வெண்காடன் தில்லை விடங்கன் அந்த அரசன் கீழ் பணிபுரிந்த அதிகாரியாக இருக்க வேண்டும். அவன் பட்டப்பெயரான ராஜேந்திரசோழ விழுப்பரையன் அதை உறுதி செய்யும். அவனுக்குரிய ஊரான கானப்பேர் சிவகங்கைக்கருகில் உள்ள இன்றைய காளையார்கோயில் ஆகும்.

தமிழ்நாட்டின் வடபகுதியிலுள்ள திருநறுங்கொண்டை, சித்தாமூர், செங்கனிகுப்பம் போன்ற இடங்களில் பழமையான சமணச் செப்புத் திருமேனிகள் கிடைத்துள்ளன. தென்தமிழ்நாட்டில் சித்தமல்லி (சிவகங்கை மாவட்டம்) என்ற ஊரில் கிடைத்த கி.பி. 9-10ஆம் நூற்றாண்டைச் சார்ந்த தீர்த்தங்கரரின் உருவம் சென்னை அருங்காட்சியகத்தில் உள்ளது. தற்போது எழுத்துப் பொறிப்புடன் கிடைத்த அமெரிக்க நாட்டு அருங்காட்சியகத்தில் உள்ள தீர்த்தங்கரர் திருமேனிகள் மூலம் எழுத்துப் பொறிப்பில்லாத பிற சமணத் திருமேனிகளின் காலத்தைக் கணிக்க வாய்ப்புள்ளது.







1. C.Sivaramamurti, Panorama of Jain Art.

2. U.PShah, "Jaina Bronzes-A Brief Survey," in Aspects of Jaina Art and Architecture, ed. By U.P. Shah and M.A. Dhaky, Ahmedabad, L. D. Institute of Indology, 1975, pp. 281 and 292 and Figure. 10.

# 51. விழுப்புரம் பகுதியில் பல்லவர்காலச் சிற்பங்கள்

சி.வீரராகவன், விழுப்புரம்
வீ.மங்கையர்க்கரசி, விழுப்புரம்

**1. யானை மீது முருகன்**



விழுப்புரம் மாவட்டம், சங்கராபுரம் வட்டம், கடம்பூர், ஏரிக்கரைக்குக் கீழேயுள்ள நீர்நிலையில் கி.பி. ஏழாம் நூற்றாணடு யானை மீது முருகன் அமர்ந்து போருக்கு செல்லும் காட்சி சிற்பத்தைக் காணலாம். யானையைப் பின் தொடர்ந்து வீரன் ஒருவன் நீண்ட ஸ்தம்பத்தில் சேவல் இலட்சினையை எடுத்து செல்கிறான். இச்சிற்ப தொகுதி கற்பலகையில் புடைப்பாகச் செதுக்கப்பட்டுள்ளது. முருகன் நான்கு கரங்களுடன் யானை மீது அமர்ந்துள்ளான். மேற்கரங்களில் வச்சிராயுதமும், அக்கமாலையும், முன் வலகரத்தில் அங்குசமும், இடது முன் கரம் இடது தொடையில் ஊரு ஹஸ்தத்திலும் காட்டப்பட்டுள்ளது. பின்னே செல்லும் வீரன் வலது காலை முன் வைத்து இடது காலை ஊன்றி வலது கரத்தில் நீண்ட ஸ்தம்பத்தின் மீது சேவல் இலட்சினையை ஏந்தி பின் தொடர்வது போருக்குச் செல்லும் காட்சியை இச்சிற்பத் தொகுதி வெளிப்படுத்துகிறது. போர்களம் புகுவோர் கொடி, இலட்சினையையும் ஏந்தி செல்வர். இக்காட்சி, சேவற்கொடிக்கு உரியவனான முருகபெருமான் சூரனைச் சாய்க்கச் செல்லுவதையே காட்டுகின்றது. சங்ககாலத்தில் முருகனுக்குரிய வாகனமாக ஆட்டு கிடாவும், பின் யானையும் அதற்கும் பின்பாக மயில் காட்டப்பட்டிருக்கிறது. திருமுருகாற்றுப்படை இலக்கியத்தில் சூரனைச் சம்காரம் செய்யும் காட்சிகளை வர்ணிக்கப்பட்டுள்ளதைப் போன்று இச்சிற்ப தொகுதி காட்சியானது காணப்படுகிறது. கடம்பூரில் கிடைத்த இம்முருகன் சிற்பத்தொகுதி தமிழக சிற்பக்கலை வரலாற்றுக்கு புதியவரவாகும்.

2. கொற்றவை

விழுப்புரம் மாவட்டம், திண்டிவனம் வட்டம், ஒலக்கூரில், 9 ஆம் நூற்றாண்டு 5 அடி உயரமும் 2¾ அகலமும் கொண்ட கற்பலகையில் எட்டுக்கரங்களுடன் கூடிய கொற்றவை, மகிஷன் தலை மீது நேராக நின்ற நிலையில் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது. தலையில் கரண்ட மகுடமும், கண்ணி மாலையும், அழகு செய்கின்றன. கண்டத்தில் ஒற்றை சர அணிகலனும், காதுகளில் குழை ஆபரணங்களும், மார்பகங்களைக் கச்சையும் இடைமுதல் தொடை வரை அரையாடையும் அணி செய்கிறது. வயிற்றுக்கட்டில் கட்டாரி ஒன்று செருகப்பட்டுள்ளது. மேல் இருகரங்களில் பிரையோக சக்கரம், சங்கு, பிறகரங்களில் நீண்ட கத்தி, அம்பு, சாட்டை, நீண்ட வில், கேடயம் ஆகிய படைக்கலன்கள் உள்ளன. இடது முன்கரம் கடி முத்திரையில் காட்டப்பட்டுள்ளது. கொற்றைவை சிற்பத் தொகுதியில் மான் ஏதும் காட்டப்படவில்லை. அடியவர் வலது கரத்தில் காட்டாரி ஏந்தி இடது கரத்தை அரிந்து கொள்ளும் நிலையில் காட்சியளிக்கிறார். இடது பக்கமுள்ள அடியவர் இருகரங்கள் கூப்பி கொற்றவையை வழிபடும் நிலையில் மண்டியிட்டு அமர்ந்துள்ளான்.



3. சண்டிகேசுவரர் (இலகுலீசர்)

திண்டிவனம் வட்டம், மேல்பாக்கம் ஊர், மேல்பாக்கத்தின் சாலையோரம், 8 ஆம் நூற்றாண்டு, சண்டீயின் சிற்பம் உள்ளது.

4 அடி உயரம் 2¾ அடி அகலம் கொண்ட கற்பலகையில் இது செதுக்கப்பட்டுள்ளது. இடது காலை மடக்கி வலது காலைக் குத்திட்டு

அமர்ந்துள்ளது. வலக்கரத்தில் நீண்ட தடியும் இடக்கரம் இடது தொடையின் மீது தங்கியவாறு காட்டப்பட்டுள்ளது. தலைமுடி தூக்கி முடிந்த நிலையிலும், நீண்டு தொங்கிய காதுகளில் குழைகளும், கழுத்தில் அகன்ற தட்டையான அணிகலனும், கைகளில் மேற்பகுதிகளில் வாகு வளையங்களும், முன் கைகளில் காப்புகளும், வயிற்றை வயிற்றுகட்டும், இடையில் அரையாடையும் தலையின் பின்புறம் இறைவனுக்குக் காட்டுவது போன்ற ஒளிவட்ட அமைப்பும், காட்டப்பட்டுள்ளன. இச்சிற்பத்தின் உருவ அமைப்பை கொண்டு பல்லவர் காலக் கலைப் பாணியைக் கொண்டுள்ளது எனக் கூறலாம்.



**4. சண்டிகேசுவரர்**

விழுப்புரம் மாவட்டம், இருவேல்பட்டு ஊர், இருவேல்பட்டு ஊராட்சி ஒன்றிய ஆரம்பப் பள்ளிக் பின்புறம். கி.பி. 9-10 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இச்சிற்பம் உள்ளது.

ஆசனத்தில் அமர்ந்து வலக்கரத்தில் மழு ஏந்தியுள்ளார். இடக்கரம், இடது கால் தொடையில் உள்ளது. அக்காலப் பெண்கள் தலைமுடியை சீவி கொண்டை முடிந்து அது நெகிழாமல் இருக்க கொண்டை ஊசி பொறுத்தி கொள்வது வழக்கம் போன்று சண்டேசுவரர் தலைமுடியும் செதுக்கப்பட்டுள்ளது. கொண்டை ஊசி "U" வடிவில் இல்லாமல் தலைப்பகுதி அகன்றும் நுனிப்பகுதி கூர்மையான வடிவிலும் வடிக்கப்பட்டு உள்ளது. இப்புடைப்பு சிற்பத்தில் உள்ள அமைப்பு போன்று, தமிழகத்தில் உள்ள சண்டேசுவரர் சிற்பங்களில் காண்பது அரிது. எனவே இச்சிற்பம் தமிழக சிற்பக் கலைக்குச் சிறப்பை அளிக்கின்ற ஒரு புதிய வரவாகும்.



5. யோகேசுவர்

விழுப்புரம் மாவட்டம், விழுப்புரம் வட்டம் பேரங்கியூர் பெருமாள் கோயில் அருகில் கி.பி. 8 ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இவ்வுருவம் உள்ளது.



உட்குடி ஆசனத்தில் யோகப்பட்டையினால் இணைக்கப்பட்ட கால்களைக் குத்திட்ட நிலையிலும் நான்கு கரங்களுடன் எழிலார்ந்த உருவத்தில் காட்சி தருகிறார். முன் வலக்கரத்தில் மழு உள்ளது. முன் இடக்கரம் அபய முத்திரை காட்டுகிறது. யோகேஸ்வரரின் தலைமுடி

ஜடாபாரத்துடனும், காதுகளிலும் கண்டத்திலும், தடித்த காதணிகளும், கண்டச்சரமும், மேற்கைகளில் வாகுவளையங்களும், முன்கைகளில் காப்பும் அணிசெய்கின்றன. இப்புடைப்புச் சிற்பம் பேரங்கியூர் சப்த கன்னியர்களின் வரிசையில் இடம்பெற்ற சிற்பமாக இருத்தல் வேண்டும்.

6. சண்டேசுவரர்

விழுப்புரம் மாவட்டம், பாதூரில், சிவன்கோயிலில் கி.பி. 8-9ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இச்சிற்பம் உள்ளது.

இச்சண்டேசுவரர் சிற்பம், பாதூர் சிவன் கோயிலில் வழிப்பாடற்ற நிலையில் உள்ளது. சண்டேசுவரர் சுகாசனநிலையில் வலக்காலை மடித்தும் இடக்காலை தொங்கவிட்ட நிலையில் அமர்ந்துவாறு உள்ளார். வலக்கரத்தில் மழுவேந்தியும் இடக்கரம் இடது தொடையில் வைத்தவாறும் உள்ளார். வயிற்றை வயிற்றுக்கட்டும், இடையை அரையாடையும் அழகு செய்கின்றன. காதுகளில் ஓலைக்குழைகளும் தலைமுடி விரித்த ஜடாபாரத்துடனும், புஜங்களில் (மேற்கைகளில்) வாகுவளையம், முன்கைகளில் காப்பும் காட்டப்பட்டுள்ளன.



# 52. கனடா ராயல் ஒன்டாரியொ அருங்காட்சியகத்தில் தமிழகக் கலைப் பொருட்கள்

வீ.செல்வகுமார், தஞ்சாவூர்
சுதர்சன் துரையப்பா, தஞ்சாவூர்.

ராயல் ஒன்டாரியொ அருங்காட்சியகம் (Royal Ontario Museum-ROM) கனடாவில் டொரன்டொ நகரில் அமைந்துள்ளது. இந்த அருங்காட்சியகத்தில் உள்ள தெற்காசிய காட்சிப் பிரிவில் பல இந்தியக் கலைப் பொருட்கள் உள்ளன. இவற்றில் தமிழகத்தைச் சேர்ந்த இரண்டு கலைப் பொருட்களைப் பற்றிய விளக்கம் தரப்படுகிறது.

**1. நாகப்பட்டினம் வெண்கலப் புத்தர் படிமம்**

நாகப்பட்டினத்தில் 19 ஆம் நூற்றாண்டு முதல் பல புத்த சமய வெண்கலப் படிமங்கள் கண்டுபிடிக்கப்பட்டு உலகின் பல பகுதிகளிலும் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. சுமார் ஒரு அடி உயரமுள்ள ராயல் ஒன்டாரியொ அருங்காட்சியக புத்தர் படிமம் இரட்டை தாமரை பீட த்தில் நின்ற நிலையில் வலது கை காத்தல் (அபய) முத்திரையுடனும், இடது கை அருளும் முத்திரையுடனும் உள்ளது. தலை முடி சுருள் வடிவத்தில் உள்ளது குடுமி தீப்பிழம்பு வடிவத்தில் உள்ளது. உடல் மீதமைந்த ஆடை பல மடிப்புகளுடனும், இரு கைகள் மீது பரவியும் காணப்படுகின்றது. இதன் கலைப்பாணி சோழர் காலப் படிமங்களை ஒத்துள்ளது.

**2. காஞ்சிபுரம் யோகினி சிற்பம்**

இங்குள்ள இந்திய கலைப் பொருட்களில் மிகவும் சிறப்பானது என்று கருதக்கூடியது தாந்திரிக வழிபாட்டுடன் தொடர்புடைய யோகினி சிலையாகும். சுமார் 4 அடி உயரமுள்ள இந்தச் சிலை காஞ்சிபுரம் அருகே உள்ள ஒரு யோகினி கோவிலில் இருந்து கொண்டு செல்லப்பட்டதாகக் கருதப்படுகின்றது. யோகாசனத்தில் அமர்ந்த நிலையில் உள்ள இந்தச் சிற்பம் மிக அழகாக கருப்பு நிறக் கல்லில் செய்யப்பட்டுள்ளது. இது மூன்று வளைவுகளுடன் (திரிபங்கத்தில்) உள்ளது. இந்தப் பெண் தெய்வம் மார்புப்பகுதியில் ஆடையின்றி பூணூலுடன் காணப்படுகின்றது. இடது தொடையின் மீதுள்ள இடது முன் கையில் கபாலம் உள்ளது. வலது மார்பை மறைத்தவாறும் சற்று சிதைந்தும் உள்ள வலது முன் கை, கடக ஹஸ்தத்தில் இருப்பது போன்று தெரிகின்றது. இடது பின் கையில் ஏடு போன்ற ஒரு கருவியும், வலது பின் கையில் கோடாரி போன்ற ஒரு கருவியும் உள்ளது. காதுகளில் (பத்ர குண்டலம்) ஓலை அணிகலனும், வாயில் இரு சிங்கப் பற்களும், கழுத்தில் அடுக்கடுக்காக மூன்று அணிகலன்களும் காணப்படுகின்றன. தலையில் நாகக் கட்டுடன் உள்ள கிரீடத்தில் மண்டை ஓடு ஒன்று உள்ளது பரந்து விரிந்த தலை முடி தலையிலிருந்து சற்று

தூரத்தில் படர்ந்து 21 சுருள்களாக காட்டப்பட்டுள்ளது. நெற்றியில் உள்ள பொட்டு (திலகம்) மற்றும் அதன் இருபுறமும் உள்ள கண் புருவங்கள் நாணேற்றப்பட்ட வில் போல செதுக்கப்பட்டுள்ளன. இது கோவிலின் மாடத்தில் இருந்தது போன்று தெரிகின்றது.

ஆராய்ச்சியாளர் பத்மா கைமல[1] இது போன்ற 11 சிலைகள் 1926ல் பாரிஸில் உள்ள சி.டி.லூ என்ற கலைப் பொருள் வியாபாரிக்கு அனுப்பப் பட்டதாகக் கூறுகின்றார். பின்னர் இது பல மேலை நாட்டு அருங்காட்சி யகங்களுக்கும், கலைப் பொருட்கள் சேகரிப்போரிடமும் சென்று அடைந்ததாகத் தெரிகிறது. ராயல் ஒன்டாரியொ அருங்காட்சியகம் இந்த யோகினி சிலையை 1956ல் வாங்கியதாகத் தெரிகின்றது. சூரிச்சில் உள்ள ரிட்பெர்க் அருங்காட்சியகத்திலும் காஞ்சியில் கிடைத்த ஒரு யோகினியின் சிலை உள்ளது. காவேரிப்பாக்கத்தில் கிடைத்த மற்றொரு யோகினியின் கற்சிலை அமெரிக்காவில் சமித்சோனியன் அருங்காட்சியகத்தில் ஆர்தர் ஷெக்லர் காட்சியறையில் உள்ளது குறிப்பிடத்தக்கது.





1. Padma Kaimal, 2000. Yoginis and Other Goddesses at the Kailasanath Temple in Kanchipuram, American Academy of Religion 2000 Annual Meeting Nashville, Tennessee, November 18-21, 2000.

# 53. புதுதில்லி தேசிய அருங்காட்சியகத்தில் மூதேவிச் சிற்பங்கள்

வே.திருநங்கை, மதுரை.

தமிழ்நாட்டில் பழங்காலத்திலிருந்து வழிபடப்பட்டு வந்த தாய்த்தெய்வம் மூதேவி ஆவாள். மூதேவியின் சிற்பங்கள் தமிழ்நாட்டில் பல்வேறு இடங்களில் காணப்படுகின்றன. தமிழ்நாட்டில் இருந்த மூதேவிச் சிற்பங்களில் ஆறு சிற்பங்கள் புதுதில்லி தேசிய அருங்காட்சியகத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டு காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. தமிழ்நாட்டு ஆய்வாளர்கள் அறிய வேண்டிய இச்சிற்பங்கள் பல்லவர், சோழர் காலத்தைச் சார்ந்தவையாகும். இவற்றில் ஒன்று ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளது. அருங்காட்சியகத்தின் வெளிப்புறம் மூன்று மூதேவிச் சிற்பங்கள் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. அருங்காட்சியகத்தின் உட்புறம் முதல் தளத்தில் ஒன்றும் இரண்டாவது தளத்தில் இரண்டும் ஆக மூன்று மூதேவிச் சிற்பங்கள் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளன.

**பல்லவர்கால மூதேவிச் சிற்பங்கள்**

அருங்காட்சியகத்தைச் சுற்றி வெளிப்புறத்தில் உள்ள மூன்று மூதேவிச் சிற்பங்களும் முதல்தளம், இரண்டாம் தளத்திலுள்ள இரு மூதேவிச் சிற்பங்களும் பல்லவர் காலத்தைச் சார்ந்தவையாகும்.

**மூதேவிச் சிற்பம் - ஒன்று**



இம்மூதேவி இருகால்களையும் அகலவிரித்து தொங்கவிட்டுப் பீடத்தில் தனித்தநிலையில் அமர்ந்துள்ளாள். வலக்கரம் பீடத்தின் மீதுள்ளது. இடக்கரம் இடது தொடையின் மீதுள்ளது. முகம் சிதைந்தநிலையில் உள்ளது. தாய்த் தெய்வத்திற்குரிய பண்பான பருத்த வயிறு

காணப்படுகிறது. இடையில் இருந்து கணுக்கால் வரை மடிப்புடன் கூடிய ஆடைக்கட்டு காணப்படுகிறது. இச்சிற்பம் கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது.

**மூதேவிச் சிற்பம் - இரண்டு**



இம்மூதேவி இரண்டு கால்களையும் அகலவிரித்துத் தொங்கவிட்டு அமர்ந்துள்ளாள். வலதுகரம் தாமரை மலரை ஏந்தியுள்ளது. இடதுகரம் இடது தொடை மீதுள்ளது. தலையில் கரண்டமகுடம், காதுகளில் மகர குண்டலம், கழுத்தில் பட்டையான ஆரம், தோளில் கேயூரம், மார்பில் வீரச்சங்கிலி கையில் வளையம் ஆகியவை அணி செய்கின்றன. இடையில் இருந்து கணுக்கால் வரை மடிப்புடன் கூடிய ஆடைக்கட்டு உள்ளது. மூதேவியின் வலதுபுறம் உள்ள கோமுகன் சுகாசனத்தில் அமர்ந்துள்ளான். இவனது வலதுகரம் கதை ஏந்தியுள்ளது. தலையில் கரண்டமகுடம் உள்ளது. மூதேவியின் இடதுபுறம் உள்ள அக்னிமாதா சுகாசனத்தில் அமர்ந்துள்ளாள். கழுத்தில் பட்டையான ஆரமும் தலையில் கரண்ட மகுடமும் உள்ளன. இச்சிற்பம் ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்தது.

**மூதேவிச் சிற்பம் - மூன்று**

இம்மூதேவி இரண்டு கால்களையும் தொங்கவிட்டு பீடத்தின் மீது அமர்ந்துள்ளாள். இடையில் இருந்து கணுக்கால் வரை மடிப்புடன் கூடிய ஆடைக்கட்டு காணப்படுகிறது. வலதுகரம் தாமரை மலரை ஏந்தியுள்ளது. இடதுகரம் இடது தொடையின் மீதுள்ளது. தலையில் கரண்டமகுடமும், காதுகளில் குண்டலமும் கழுத்தில் பட்டையான ஆரமும் கையில் வளையமும் தோளில் கேயூரமும் மார்பில் வீரச்சங்கிலியும் காலில் தண்டையும் அணிசெய்கின்றன. மூதேவியின் வலதுபுறம் அவளது கொடியான காக்கையும் இடதுபுறம் அவளது ஆயுதமான திருவலகும் உள்ளன. மூதேவி தமிழ்நாட்டில் செல்வத்திற்காக வழிபடப்பட்டமைக்கு அடையாளமாக மூதேவியின் வலது, இடதுபுறம் இரண்டு பெண்கள் செல்வப் பேழையைத் தலையில் சுமந்து நின்றநிலையில் உள்ளனர்.

மூதேவியின் வலதுபுறம் கோமுகன் சுகாசனத்தில் உள்ளான். அவனது வலதுகரம் கதையை ஏந்தியுள்ளது. இடதுகரம் இடது தொடை மீதுள்ளது. இடதுபுறம் உள்ள அக்னிமாதா சுகாசனத்தில் அமர்ந்துள்ளாள். வலதுகரம் தாமரை மலரை ஏந்தியுள்ளது. இடதுகரம் பீடத்தின் மீதுள்ளது. தலையினைக் கரண்ட மகுடமும் காதுகளைக் குண்டலமும் கழுத்தினை ஆரமும் அணி செய்கின்றன. இச்சிற்பம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்தது.



மூதேவிச் சிற்பம் - நான்கு



முதல் தளத்திலுள்ள மூதேவி ஒரு பெரிய பீடத்தின் மீது அமர்ந்துள்ளாள். தலையில் அலங்காரத்துடன் கூடிய கிரீடம் நெற்றியில் கண்ணிமாலை, காதுகளில் குண்டலம், கழுத்தில் பட்டையான ஆரம் தோளில் கேயூரம், கையில் வளையம், கால்களில் சிலம்பு காணப்படுகின்றன

வலதுகரம் தாமரை மலரை ஏந்தியுள்ளது. இடதுகரம் செல்வப்பேழை மீதுள்ளது. அப்பேழையை பெண் ஒருத்தி தன் தலை மீது சுமந்து நிற்கின்றாள். மூதேவியின் வலதுபுறம் காக்கை ஒரு பீடத்தின் மீது உள்ளது. இடதுபுறம் மூதேவியின் ஆயுதமான திருவலகு உள்ளது. வலதுபுறம் உள்ள கோமுகன் சுகாசனத்தில் அமர்ந்து தனது வலதுகரத்தில் கதையை ஏந்தியுள்ளான். அவனது தலையில் கரண்டமகுடமும் மார்பில் புரிநூலும் கால்களில் பாதசரமும் உள்ளன. இடதுபுறம் உள்ள அக்னிமாதா சுகாசனத்தில் அமர்ந்துள்ளான். அவளது வலதுகரம் அபய முத்திரையைக் காட்டுகிறது. இடதுகரம் பீடத்தின் மீதுள்ளது. தலையில் கரண்ட மகுடமும் காதுகளில் குண்டலமும் கால்களில் தண்டையும் அணிசெய்கின்றன.' இச்சிற்பம் கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது.

**மூதேவிச் சிற்பம் - ஐந்து**



இரண்டாம் தளத்திலுள்ள மூதேவி சிற்பங்களில் முதல் மூதேவிச் சிற்பம் தனித்தநிலையில் பீடத்தின் மீதுள்ளது. இடதுகரம் இடது பீடத்தின் மீதுள்ளது. இடையில் இருந்து கணுக்கால் வரை மடிப்புடன் கூடிய ஆடைக்கட்டுள்ளது. தலையில் கரண்ட மகுடம், நெற்றியில் கண்ணிமாலை, காதுகளில் குண்டலம், கையில் வளையல் தோளில் கேயூரம், கழுத்தில் பட்டையான ஆரம், மார்பில் வீரச்சங்கிலி அணி செய்கின்றன. இந்த சிற்பத்தில் கோமுகன், அக்னிமாதா ஆகியோர் காணப்படவில்லை. இச்சிற்பம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்தது.

## சோழர்கால மூதேவிச் சிற்பம்

**மூதேவிச் சிற்பம் - ஆறு**

இரண்டாம் தளத்திலுள்ள மற்றொரு தனித்தநிலையிலுள்ள மூதேவிச் சிற்பம் பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்ததாகும். இடையில் இருந்து கணுக்கால் வரை அலங்கார வேலைப்பாடு நிறைந்த மடிப்புடன் கூடிய ஆடைக்கட்டு உள்ளது. தலையில் அழகான வேலைப்பாடு நிறைந்த கரண்ட

மகுடம், நெற்றியில் கண்ணிமாலை காதுகளில் பத்ரகுண்டலம் மார்பில் வேலைப்பாடு நிறைந்த வீரச்சங்கிலி, கழுத்தில் இரண்டு அடுக்குடன் கூடிய ஆரம், தோளில் கேயூரம், கையில் வளையல், கால்களில் தண்டை காணப்படுகின்றன. மூதேவியின் வலதுகரம் அபய நிலையில் உள்ளது. இடதுகரம் இடது பீடத்தின் மீதுள்ளது. மூதேவியின் இடதுபுறம் அவளது கொடியான காக்கை ஒரு நீண்ட பீடத்தின் மீதுள்ளது. வலதுபுறம் மூதேவியின் திருவலகு உள்ளது.



புதுதில்லி தேசிய அருங்காட்சியகத்தில் காட்சிப்படுத்தப்பட்டுள்ள பல அரிய தமிழ்நாட்டுப் பெண்தெய்வச் சிற்பங்களில் மூதேவி சிற்பமும் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது. இச்சிற்பங்கள் தமிழ்நாட்டில் வழக்கமாகக் காணப்படும் மூதேவியின் சிற்பங்களின் உருவ அமைதியுடன் ஒத்துக் காணப்பட்டாலும் இவை உயர்தர கலைப்படைப்புகளாகும். செல்வப் பேழையின் மீது தனது கரத்தினை வைத்தநிலையில் காட்சி அளிக்கும் மூதேவிச் சிற்பங்கள் தமிழ்நாட்டில் அரியமுறையில் குறைவாகவே கிடைத்துள்ளன. இவ்வகை அரிய மூதேவிச் சிற்பப் படைப்புகளில் இரண்டு புதுதில்லி தேசிய அருங்காட்சியகத்திலும் உள்ளது குறிப்பிடத்தக்கது.

---

1. In the image of Man, Art Council Great Britain, London, 1982, p. 116.

# 54. அமராவதி ஆற்றங்கரை நடுகற்கள்

வி.பி.யதீஸ்குமார், புதுச்சேரி.

### தொட்டிவாடி நடுகற்கள்

கரூர் மாவட்டம், கரூர் வட்டத்திலுள்ள தொட்டிவட்டி என்ற ஊரின் மேற்குப்புறமாக உள்ள நத்தமேடு என்ற இடத்திற்கு அருகில் இரண்டு நடுகற்கள் கிழக்கு நோக்கிய நிலையில் உள்ளன. முதல் நடுகல்லில் வீரனின் உருவம் நின்ற நிலையில் தலைப்பாகை அணிந்து வலது கையில் வாளுடனும் இடது கையில் வில் அம்புடனும் உள்ளது. இடையாடை அணிந்து உறையுடன் கூடிய வாளுடன் வீரனின் உருவம் காட்சியளிக்கிறது.

இரண்டாவது நடுகல்லில் வீரன் நின்ற நிலையில் வாளினை ஏந்திக் கொண்டு வில் அம்புடன் உள்ளான். இவ்விரு நடுகற்களும் கி.பி.10-11ம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும்.



### மாமரத்துப்பட்டி

கரூர் மாவட்டம் அரவக்குறிச்சி வட்டதிலுள்ள மாமரத்துப்பட்டியில் ஊரின் வடமேற்கில் உள்ள நந்தமேட்டில் நடுகல் ஒன்று உள்ளது. நடுகல்லில் வீரனின் உருவம் நின்ற நிலையில் மேல் நோக்கி கட்டிய தலைப்பாகையுடன் காதில் துளையிட்ட காதணியுடன் வலக்கையில் வாளை ஓங்கிவாறும் இடக்கையில் குறுவாளுடனும் இடையாடை அணிந்து காணப்படுகின்றது. இந்த நடுகல்லின் காலத்தைக் கி.பி.10-11 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகக் கருதலாம்.



**புங்கதுறை**

ஈரோடு மாவட்டம் தாதபுரம் வட்டத்தில் புங்கதுறையில் உள்ள சிவன் கோயிலின் உள்பிரகாரத்தில் நடுகல் ஒன்று உள்ளது. நீண்ட காதுடன் கழுத்தில் இரு ஆரம் அணிந்த நிலையில் வலது கையில் வாளை மேல் நோக்கி பிடித்த வாறும் இடது கையில் வில் அம்புடனும் வீரன் காணப்படுகிறான். இதன் காலத்தை கி.பி. 11-ம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதலாம்.



**ராக்கியின் வலசு**

கரூர் மாவட்டம் அரவக்குறிச்சி வட்டத்தில் உள்ள ராக்கியன் வலசு என்ற ஊரின் மையப்பகுதியில் புலிக்குத்தி நடுகல் உள்ளது. இந்நடுகல்லில் வீரன் நின்ற நிலையில் வலது கையில் புலியை வாளினால் குத்துவது போன்றுள்ளான். இது போன்ற அமைப்புடைய நடுகல் காரையூர் என்ற இடத்தில் உள்ளது.



கோவிலூர்

கரூர் மாவட்டம் அரவக்குறிச்சி வட்டத்திலுள்ள கோவிலூர் என்ற ஊரின் மேற்குப் புறத்தில் நடுகல் ஒன்றுள்ளது. வீரனின் தலைபாகை மேல் நோக்கி கட்டியவாறு உள்ளது. வலக்கையில் வாளுடன் நின்ற நிலையில் இந்நடுகல்லில் வீரன் காணப்படுகின்றான்..



மானூர்

திண்டுக்கல் மாவட்டம் பழனி வட்டத்தில் மானூர் என்ற ஊரின் சாலையோரத்தில் நின்ற நிலையில் நடுகல் ஒன்றுள்ளது. இதில் வீரன் கையில் வாளை ஏந்தியவாறு புலியைத் குத்துகின்ற நிலையில் உள்ளான்.



அமராவதி ஆற்றுப்படுக்கையில் உள்ள ஊர்களில் கிடைத்த நடுகற்களில் கரூர், ஒந்தாம்பட்டி போன்றவைகள் கல்வெட்டுகளுடன் கிடைக்கின்றன. இவற்றிலுள்ள வீரனின் உருவங்கள் பொதுவாக மேல்நோக்கி கொண்டையிட்ட தலைமுடியுடன் நீண்ட காதுடனும் அதில் காதணி அணிந்தும் அணியாமலும் உள்ளன. ஒரு சில நடுகல்லைத் தவிர மற்ற நடுகற்களில் வீரன் ஒன்று அல்லது இரண்டு கழுத்தணியுடன் காணப்படுகின்றான். அதே போன்று இரண்டு கைகளிம் காப்பு போன்ற வளை அணிந்துள்ளான். இடையாடைக் கட்டு கால்களுக்கு நடுவே முட்டிக்கால் வரை தொங்க விட்ட நிலையில் உள்ளது. காலில் விரக்கழல் அணிந்தும் வீரன் காணப்படுகின்றான்.

# 55. நம்பியாற்றுப் பள்ளத்தாக்குத் தொல்லியல்

மோ.பிரசன்னா, புதுச்சேரி.

திருநெல்வேலி மாவட்டத்தில் ஓடுகின்ற நதிகளான 21 நதிகளில் தாமிரபரணியாற்றுடன் சேராமல் ஓடுகின்ற நதி 'நம்பியாறு' ஆகும். நம்பியாறு மேற்குத் தொடர்ச்சி மலையில் திருக்குறுங்குடிக்கு மேற்கே எட்டு கிலோ மீட்டர் தொலைவில் உருவாகி தென்கிழக்கு நோக்கிப் பாய்கிறது. இறுதியில் தென்கிழக்கே மன்னார் வளைகுடாவில் திருவம்பாபுரம் என்ற இடத்தில் கடலுடன் கலக்கிறது. நம்பியாறுக்கு பருத்தியாறு, தாமரையாறு என்ற இரு துணை நதிகள் உள்ளன. நம்பியாறு பாயும் தூரம் 45 கிலோ மீட்டர் ஆகும்.

திருநெல்வேலி தூத்துக்குடி மாவட்டங்களில் பாய்கின்ற தாமிரபரணி ஆற்றில் பல தொல்லியல இடங்கள் ஏற்கனவே கண்டறியப்பட்டுள்ளன. அதே போன்ற இடங்கள் நம்பியாற்று பள்ளத்தாக்கிலும் தற்போது கண்டறியப்பட்டுள்ளன. இவற்றில் வாகைக்குளம், ராஜாக்கள் மங்கலம், வைத்திலிங்கபுரம், ஆனைகுளம், சித்தூர், கண்ணநல்லூர், தங்கயம் முதலிய இடங்கள் குறிப்பிடத்தக்கவையாகும்.

**வாகைக்குளம் (சாஸ்தாபுரம்)**

வள்ளியூரில் இருந்து தென்மேற்கே ஏழு கிலோமீட்டர் தொலைவில் நாங்குநேரி செல்லும் பாதையில் வாகைக்குளம் அமைந்துள்ளது. இப்பகுதியில் அமைந்துள்ள பெரும்வேம்புடையார் சாஸ்தா கோவிலின் அருகே காணப்படும் கமடகிரி மலையின் அடிவாரத்தில் முதுமக்கள்தாழிகள் பல சிதைந்த நிலையிலும், சில சிதையாத நிலையிலும் காணப்படுகின்றன. மேலும் இப்பகுதியில் மூன்று மண் அடுக்குகள் காணப்படுகின்றன. அதில் முதல் மண்ணடுக்கில் இடைக் கற்காலக் கருவிகள் கிடைக்கின்றன. அங்கு இடைக்கற்காலக் கருவிகள் செய்யப்பட்டமைக்கு ஆதாரமாக கற்செதில்கள் அதிகம் காணப்படுகின்றன. இப்பகுதி நம்பியாற்றின் வலக்கரைப் பகுதியில் அமைந்துள்ளது.

**ராஜாக்கள் மங்கலம்**

ராஜாக்கள்மங்கலம் வள்ளியூரில் இருந்து தென்மேற்கே ஒன்பது கிலோ மீட்டர் தொலைவில் நாங்குநேரி செல்லும் பாதையில் அமைந்து உள்ளது. இப்பகுதியில் நம்பியாற்றின் வலக்கரையில் முதுமக்கள் தாழிகள் காணப்படுகின்றன. அவைகளுடன் கருப்பு சிவப்பு பானையோடுகள், சிவப்பு பானையோடுகள், கருப்பு பானையோடுகளின் உடைந்த பகுதிகள் காணப்படுகின்றன.

**ஆனைகுளம்**

ஆனைகுளமானது வள்ளியூரின் தென்கிழக்கே எட்டு கிலோ மீட்டர் தொலைவில் பணக்குடி செல்லும் வழியில் அமைந்துள்ளது. இங்கு

முதுமக்கள் தாழிகள் காணப்படுகின்றன இப்பகுதியானது நம்பியாற்றின் வலக்கரையில் அமைந்துள்ளது. இங்கு கருப்பு சிவப்பு பானையோடுகள், சிவப்பு பானையோடுகள், கருப்பு பானையோடுகள் கிடைக்கின்றன.

**கண்ணநல்லூர்**

கண்ணநல்லூரனாது வள்ளியூரின் தென்கிழக்கே ஆறு கிலோ தொலைவில் பணக்குடி செல்லும் வழியில் அமைந்துள்ளது. இங்கு நுண்கற்காலக் கருவியான பிளேடுகள் போன்றவைகள் காணப்படுகின்றன. மேலும் அவை தயாரிப்பதற்கான மூலக்கற்களும் கிடைக்கின்றன.

**தங்கயம்**

தங்கயமானது பணக்குடியின் மேற்கே பத்து கிலோ மீட்டர் தொலைவில் வள்ளியூர் செல்லும் பாதையில் அமைந்துள்ளது. இங்கு முது மக்கள் தாழிகள் காணப்படுகின்றன. தற்பொழுது பெரும்பான்மை சிதைந்த நிலையில் காணப்படுகின்றன. அங்கு கருப்பு சிவப்பு பானை யோடுகள், சிவப்பு பானையோடுகள் போன்றவைகள் காணப்படுகின்றன.

**வைத்திலிங்கபுரம்**

வைத்திலிங்கபுரம் வள்ளியூரின் கிழக்கே ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. இப்பகுதியானது நம்பியாற்றின் வலக்கரையில் உள்ளது. இங்கு சிதையாத நிலையில் முதுமக்கள் தாழிகள் காணப்படுகின்றன. மேலும் இங்கு கருப்பு சிவப்பு பானைகள், சிவப்பு பானைகள் எலும்புத் துண்டுகள் போன்றவைகள் காணப்படுகின்றன.

**சித்தூர்**

சித்தூர் வள்ளியூரின் கிழக்கே பத்து கிலோ மீட்டர் தொலைவில் பணக்குடி செல்லும் வழியில் அமைந்துள்ளது. இப்பகுதியானது நம்பியாற்றின் இடக்கரையில் அமைந்துள்ளது. இங்கு பத்து ஏக்கர் பரப்பளவில் வாழ்விடப்பகுதி காணப்படுகிறது மேலும் இங்கு கருப்பு பானைகள், சிவப்பு பானைகள், கருப்பு சிவப்பு பானைகள் காணப்படுகின்றன. இங்கு காணப்படும் பானையோடுகளில் குறியீடுகள் காணப்படுகின்றன.

# 56. நாமக்கல் மாவட்டத்தில் புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகள்

சி.செல்வகுமார், புதுச்சேரி

நாமக்கல் மாவட்டப் பகுதிகளில் சமீபத்தில் மேற்கொண்ட களாய்வில் இரும்புக்கால ஈமச்சின்னங்கள் 100க்கும் மேற்பட்ட பகுதிகளில் கண்டறியப்பட்டுள்ளன. இங்கு காணப்படும் ஈமச்சின்ன வகைகளை ஐந்து வகையாகப் பிரிக்கலாம். அவை கல்வட்டம், கற்குவை, கற்பதுக்கை, நெடுங்கல் மற்றும் முதுமக்கள் தாழி ஆகியவை ஆகும்.

**கல்வட்டம் மற்றும் கற்குவை**

நாமக்கல் மாவட்டப் பகுதிகளில் பரவலாக கல்வட்டம் காணப்படுகிறது. அவற்றில் புள்ளாகவுண்டன்பாளையம், இராசப்பாளையம், பிலக்கல்பாளையம், நாகர்பாளையம் போன்ற இடங்களை முக்கியமாக கூறலாம். அதேபோல இராமசாமி கவுண்டன் பாளையம், கோனூர் போன்ற பகுதிகளில் கற்குவைகள் காணப்படுகின்றன. இவற்றில் ஒரு சில மட்டுமே நல்ல நிலையில் உள்ளன. மற்றவை அனைத்தும் முற்றிலுமாக சிதைக்கப்பட்ட நிலையிலேயே காணப்படுகிறது. இவற்றில் ‘கெட்டிமேடு’ என்னும் பகுதியில் மட்டும் சுமார் 20 ஏக்கர் பரப்பளவில் கல்வட்டம் மற்றும் கற்குவை காணப்படுகிறது. இந்த ஈமச்சின்னத்திற்கு உரிதான வாழ்விடமும் இந்த ஈமச்சின்ன பகுதியின் கிழக்கே சுமார் 3½ கி.மீ. தொலைவில் அமலங்காநத்தம் என்னும் பகுதியில் அமைந்துள்ளது.

**கற்பதுக்கை**

கற்பதுக்கைகள் அதிகளவில் திருச்செங்கோடு வட்டப் பகுதி-களிலேயே காணப்படுகின்றது. அவற்றில் அனிமூர், ஐந்துபனை, மற்றும் சத்தியநாயக்கன்பாளையம் ஆகிய பகுதிகளைக் கூறலாம். சத்திய நாயக்கன்பாளையத்தில் சிதைக்கப்பட்ட கற்பதுக்கை கிழக்குப் பக்க இடுதுளையுடன் காணப்படுகிறது. திருமணிமுத்தாற்றின் வலக்கரை வரை மட்டுமே கற்பதுக்கைகள் காணப்படுகின்றன. அதன்பின் ஏனைய பகுதிகளில் கற்பதுக்கைகள் காணப்படவில்லை.

**நெடுங்கல்**

இராசிபுரம் தாலுக்காவில் இராசிபுரத்திலிருந்து வடக்காக சுமார் 5 கி.மீ. தொலைவில் சீராப்பள்ளி அமைந்துள்ளது. இப்பகுதியில் ‘யானைகட்டி கல்’ என்று அழைக்கப்படும் கல் இரும்புக்கால ஈமச்சின்னமான நெடுங்கல் ஆகும். இக்கல்லுக்கு வெகு அருகாமையில் வீடு கட்டும் போது இரும்புக்கால பானை ஓடுகளான கருப்பு சிவப்பு நிற பானைகளும், இரும்பு துண்டுகளும் கிடைத்துள்ளன. இதே போல் திருசெங்கோட்டிலிருந்து பரமத்தி செல்லும் சாலையில் சுமார் 17 கி.மீ. தொலைவில் ‘முசல் நாயக்கன் பாளையம்’ என்ற

ஊரில் நெடுங்கல் ஒன்று முற்றிலும் அழிக்கப்பட்ட நிலையில் காணப்படுகிறது.

**முதுமக்கள் தாழி**

நாமக்கல் மாவட்டத்தில் பரவலாகவே முதுமக்கள் தாழி கிடைக்கிறது. அவற்றில் மோகனூர் பகுதியில் எடுக்கப்பட்ட ஒரு முதுமக்கள் தாழி சேலம் அருங்காட்சியகத்தில் உள்ளது. அதே போல் கபிலர்மலைக்கு அருகில் இருக்கூர் பகுதியில் 'பரமத்திவேளார் கந்தசாமி கண்டர்' கலைக் கல்லூரி சார்பில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வில் எடுக்கப்பட்ட முதுமக்கள் தாழி அக்கல்லூரி அருங்காட்சியகத்தில் உள்ளது.

இவை மட்டுமின்றி 15க்கும் மேற்பட்ட இரும்புக்கால மற்றும் வரலாற்றுக்கால வாழ்விடப் பகுதிகள் கண்டுபிடிக்கப்பட்டன. அவற்றுள் அலங்காநத்தம், நத்தமேடு, கோழிக்கால்நத்தம், போன்ற பகுதிகள் முக்கியமானவையாகும்.

நாமக்கல் பகுதியில் மேலும் விரிவானதொரு களாய்வு மேற்கொள்வதன் மூலம் எஞ்சியுள்ள தொல்லியல் எச்சங்களை வெளிக்கொணரலாம் என்பதில் ஐயமில்லை.

# 57. சிவகங்கை மாவட்டத் தொல்லியல்

வீ.முத்துக்குமார், புதுச்சேரி.

சிவகங்கை மாவட்டத்தில் மேற்கொண்ட களஆய்வின் மூலமாக பண்டைக்கால மக்களின் வாழ்விடங்கள், ஈமக்காடுகள் மற்றும் அவர்கள் விட்டுச்சென்ற எச்சங்கள் 12 ஊர்களில் கண்டறியப்பட்டுள்ளன. அவை, சோழபுரம், நாமனூர், பிரபவலூர், சித்தலூர், அழகாபுரி, பனங்காடி, கொல்லங்குடி, சேம்பார், கருங்காலக்குடி, கீழக்குளம், தேற்றியூர் மற்றும் கரும்பாவூர்.

## சோழபுரம்

சிவகங்கையிலிருந்து திருப்பத்தூர் செல்லும் வழியில் 8 கி.மீ. தொலைவில் சோழபுரம் அமைந்துள்ளது. இவ்வூருக்கு அருகே திருப்பத்தூர் செல்லும் சாலையில் சோழபுரத்தின் ஒரு பகுதியான அண்ணாநகர் செல்வதற்கு முன்பாகவே சாலையின் வலது ஓரமாக பெருங்கற்கால கல்வட்டங்கள் காணப்படுகின்றன. இக்கல்வட்டங்கள் பெரும்பாலானவை முழுமையாக காணப்படுகின்றன. இருப்பினும் ஒருசில கல்வட்டங்கள் அழிக்கப்பட்டுள்ளன. அழிக்கப்பட்ட கல்வட்டங்களின் கீழ் உள்ள தாழிகள் மற்றும் கற்பதுக்கைகள் வெளியே தெரியும் வண்ணம் காணப்படுகின்றன. மேலும் கருப்பு சிவப்பு, கருப்பு, சிவப்பு மட்பாண்டங்களின் உடைந்த துண்டுகளும் காணக்கிடைக்கின்றன. கல்வட்டங்கள் ஒன்றில் மட்டும் குத்துக்கல் ஒன்று காணப்படுகிறது. இது 3 அடி உயரமும், 2.5 அடி அகலமும் கொண்டதாக உள்ளது. இம்மாவட்டத்தில் மற்ற இடங்களில் காணப்படும் ஒருசில குத்துக்கற்கள் இதுபோன்றே அளவில் சிறியதாகவே காணப்படுகின்றன.

## பிரபவலூர்

சிவகங்கையிலிருந்து நாமனூர் செல்லும் வழியில் 12 கி.மீ. தொலைவில் பிரபவலூர் அமைந்துள்ளது. இவ்வூரின் வடக்கே நூற்றுக்கும் மேற்பட்ட இரும்புக்கால கல்வட்டங்களும் கற்குவியல்களும் காணப் படுகின்றன ஒருசில இடங்களில் தாழிகள் வெளியே தெரியும் வண்ணம் காணப்படுகின்றன. இவ்வாறு வெளியே காணப்படும் தாழிகளின் உடைந்த துண்டுகள் கருப்பு சிவப்பு நிறமுடையதாக உள்ளன. தாழிகள் சிறிய மற்றும் பெரிய அளவுகளில் கிடைக்கின்றன. அக்கால மக்கள் பயன்படுத்திய தாங்கிகள், தட்டுகள், மூடிகள், கிண்ணங்கள் மற்றும் பல அளவுகளைக் கொண்ட பானைகள் ஆகியன இங்கு முழுமையாகவும், உடைக்கப்பட்டும் காணப்படுகின்றன.

## முத்துப்பட்டி

சிவகங்கையிலிருந்து மதுரை செல்லும் சாலையில் 17 கி.மீ. தொலைவில் இடதுபுறமாக செல்லும் சாலையில் 1 கி.மீ. தொலைவில்

முத்துப்பட்டி அமைந்துள்ளது. இவ்வூருக்குச் செல்லும் வழியில் இரு புறமாக புதிதாக ஓர் ஊரணி வெட்டப்பட்டுள்ளது. இவ்வூரணி அமைந்துள்ள இடம் இரும்புக்கால ஊரிருக்கையாக இருந்துள்ளது என்பதற்குச் சான்றாக இவ்வூரணியை உருவாக்க மண்ணைத் தோண்டும் பொழுது ஏராளமான மட்பாண்டங்கள் முழுமையாகவும், துண்டுகளாகவும் கிடைத்துள்ளன. ஊரணியின் கரைகளிலும், உட்பகுதியிலும் மற்றும் ஊரணியைச் சுற்றியுள்ள பகுதிகளிலும் தரைமட்டத்திற்கு மேற்பகுதியிலேயே தாழிகளின் துண்டுப் பகுதிகள், தட்டுகள், கிண்ணங்கள், மூடிகள், மற்றும் தாங்கிகள் ஆகியன கிடைக்கின்றன. இவைகளில் பெரும்பாலானவை கருப்பு சிவப்பு நிற மட்பாண்டங்களாக உள்ளன. ஒருசில மட்பாண்ட துண்டுகளில் குறியீடுகளும், ஒரு மட்பாண்ட துண்டில் மட்டும் தமிழ் பிராமி எழுத்தான 'ம' காணப்படுகின்றது. ஊரணியின் உட்பகுதியில் மட்பாண்ட துண்டுகளுடன் எலும்புத் துண்டுகளும் காணப்படுகின்றன. ஊரணியைச் சுற்றியுள்ள பகுதிகளில் மக்கள் வாழ்ந்த இடங்களில் வீட்டின் தளங்கள் மண் மற்றும் சுண்ணாம்பு போன்ற கலவையுடன் கூடிய இருகிய நிலையில் வெளியே தெரியும் வண்ணம் உள்ளது. இவ்விடத்திற்கு வடக்கே உப்பாறு என்னும் பெயர் கொண்ட ஆறு ஓடுகின்றது. இவ்வாற்றின் தென்கரையில் ஒரு கல்வட்டம் காணப்படுகின்றது.

**அழகாபுரி**

சிவகங்கையிலிருந்து மதுரை சாலையில் படமாத்தூர் வழியாக திருப்பாசேத்தி செல்லும் வழியில் படமாத்தூரை அடுத்து 2 கி.மீ. தொலைவில் அழகாபுரி அமைந்துள்ளது. இவ்வூரை இரண்டாகப் பிரிக்கும் வகையில் உப்பாறு ஓடுகிறது. உப்பாற்றின் இடக்கரையில் தற்கால இடுகாடு உள்ள பகுதியில் இரும்புக்கால ஈமக்காடு காணப்படுகிறது. இப்பகுதியில் ஈமப்பேழை, முதுமக்கள் தாழி மற்றும் கருப்பு சிவப்பு பானைகள் போன்றவைகள் காணப்படுகின்றன. தமிழகத்தின் வடமாவட்டங்களைத் தவிர வேறு எந்த பகுதியிலும் இதுவரை ஈமப்பேழைகள் கண்டறியப் படவில்லை. இங்கு காணப்படும் ஈமப்பேழை 1 மீ. நீளமும், 50 செ.மீ. அகலமும் கொண்டுள்ளது. இப்பகுதியில் காணப்படும் பானைகளிலும் தாங்கிகளிலும் கருப்பு நிற வண்ணம் பூசப்பட்ட இலை வடிவிலான ஓவியங்கள் காணப்படுகின்றன.

**கொல்லங்குடி**

சிவகங்கையிலிருந்து காளையார்கோவில் செல்லும் சாலையில் கொல்லங்குடிக்கு முன்பாக கீரனியூர் அமைந்துள்ளது. இவ்வூருக்கு சற்று முன்பாக கிழுவுச்சி ஆறு ஓடுகின்றது. இவ்வாற்றின் இடக்கரையிலும், ஆற்றின் உட்பகுதியிலும் செம்பாறாங்கல்லிலான கல்வட்டங்கள் சிலவும், கல்வட்டங்களின்றி, ஆங்காங்கே தாழிகளும் காணப்படுகின்றன. பெரும்பாலான இடங்களில் தாழிகள் மட்டுமின்றி தாங்கிகள், தட்டுகள், மூடிகள், கிண்ணங்கள், பானைகள் காணப்படுகின்றன. இதில் கருப்பு சிவப்பு, சிவப்பு, கருப்பு நிற மட்பாண்டங்கள் காணப்படுகின்றன. தாங்கிகள், தட்டுகள், மூடிகள், கிண்ணங்கள், பானைகள் காணப்படுகின்றன. கருப்பு

எழுத்தின் மூல எழுத்தான தமிழ் பிராமி எழுத்தும், வட்டெழுத்தும் கலந்த நிலையில் உள்ளன என்றும் தெரிவித்திருக்கின்றனர். தமிழ்ப் புகழேந்தி இக்கல்வெட்டு பல்லவ மன்னன் சிம்ம விட்ணுவின் 29வது ஆட்சி ஆண்டில் வெட்டப்பட்டிருக்கிறது என்றும் தெரிவித்துள்ளனர்.

செய்தி வெளிவந்த பிறகு கல்வெட்டறிஞர் பத்மசிறீ ஐராவதம் மகாதேவன் இக்கல்வெட்டு பற்றியச் செய்தியை எமக்குத் தெரிவித்தோடு, அக்கல்வெட்டின் பார்வைப்படியின் செராக்ஸ் நகலையும் அனுப்பி வைத்தார். அத்தோடு 'வட்டெழுத்துக் கல்வெட்டை நீங்கள் படித்துப் பொருள் கூறினால்தான் எமக்கு முழு மனநிறைவு ஏற்படும்' என்று கூறியதோடு, நான் படித்துக் கூறும் வாசகத்தைத் தமிழ்ப் புகழேந்திக்கு அனுப்பி வைக்குமாறும் எமக்கு அன்புக் கட்டளையிட்டார். இவர் அனுப்பி வைத்த ஓரிரு நாட்களில் தமிழ்ப் புகழேந்தியும் எமக்கு அக்கல்வெட்டின் பார்வைப்படி நகலையும், அக்கல்வெட்டு பற்றி ஒரு நாளிதழ் வெளியிட்ட செய்தியின் நகலையும் அனுப்பி வைத்ததோடு, தொலைபேசியில் தொடர்பு கொண்டு இக்கல்வெட்டை முழுவதுமாகப் படித்துப் பொருள் எழுதித் தமக்கு அனுப்பி வைக்கவும் வேண்டுகோள் விடுத்தார்.

கல்வெட்டின் பார்வைப் படியைக் கொண்டே கல்வெட்டின் பெரும்பகுதி எம்மால் படிக்க முடிந்தாலும், ஒரு சிறு பகுதி எமக்குக் குழப்பத்தை ஏற்படுத்தியது. ஆதலால் கல்வெட்டின் மைப்படியைக் கொண்டு படித்தால் முழுவதையும் சரியாகப் படித்துவிட முடியும் என்று கருதி, வேலூரில் உள்ள எம் நண்பர்கள் ம.காந்தியையும், முனைவர் ப.வெங்கடேசரையும், அக்கல்வெட்டை மைப்படி எடுத்து அனுப்புங்கள் என்று கேட்டு கொண்டேன். அவர்களும் உடன் அகரம்சேரி சென்று கல்வெட்டின் தெளிவான மைப்படியை எமக்கு அனுப்பி வைத்தனர். அம்மைப் படியைப் பார்த்துப் படித்ததின் வாசகம் கீழ்க்காணுமாறு :

1) கோவிசைய சீபரும்மற் கிரு
2) த் தொன்பதாவது ஆட்டி தி
3) ங்கள் புணரு பூசது ஞா(ன்)று தகடு
4) ருப் பிடிமண்ணேரிக்கீழ் உடை
5) யாரு தண்டத்தோடு இலாட
6) ரைசரோடும் மழவரைசரோடும்
7) எறித்து பட்டாரு கங்கதி அ
8) ரைசரு சேவகரு மாதப் பெருதிரை
9) சரு கன்னாடு

கோவிசைய சீபருமரின் இருபத்தொன்பதாம் ஆட்சி ஆண்டு, ஆடி மாதம், புணர்பூசத்து, நாளன்று, தகடூரின் பிடிமண்ணேரியின் இறக்கத்தில், உடையார் தம் படைத் துணையோடு வந்து, இலாட அரசரையும், மழவரசரையும் எதிர்த்துப் போரிட்டபொழுது கங்க அதிஅரைசரின் போர் வீரன் மாதப் பெரு அதிஅரைசர் வீர மரணம் எய்தியிருக்கிறார். அவரது

நினைவாக நடப்பட்டது இந்நடுகல் என்பது இதன் பொருளாகும். இந்நடுகல்லில் குறிப்பிடபெறும் சீபருமர் என்பவர், சிங்க விண்ணபருமர் அதாவது சிம்ம விட்ணுவாக இருக்கலாம் என்று கூறியிருந்தனர். இது சரியெனத் தோன்றவில்லை. சிம்மவிட்ணுவெனில், சிவிண்ணபருமர் என்று கல்வெட்டில் குறிப்பிடப் பெற்றிருக்கும். அவ்வாறு குறிப்பிடப்படாத காரணத்தால், இப்பல்லவ மன்னர் 'சீயபருமர்' (சிம்ம பருபர்) என்று பொருள். சிம்மபருமர் என்பது சிம்மவர்மனை, அதாவது சிம்ம விஷ்ணுவின் தந்தையைக் குறிப்பதாகும். சிம்மவர்மனுடைய நடுகற்கள் இக்கல்வெட்டுக்கு முன்பாக இரண்டு கிடைத்துள்ளன. ஒன்று திருவண்ணாமலை மாவட்டம், செங்கம் வட்டம், பெருங்குளத்தூரிலிருந்தும், மற்றொன்று தருமபுரி மாவட்டம், ஊத்தங்கரை வட்டம், புலியானூரிலிருந்தும் தெரியவந்துள்ளன. பெருங்குளத்தூர்க்கல்வெட்டு சிங்கபருமரின் ஐந்தாம் ஆட்சியாண்டிலும், புலியானூர்க் கல்வெட்டு செய பருமரின் (சீ)ய பருமர் சிங்க பருமரின்) 20ஆம் ஆட்சியாண்டிலும் வெட்டப்பட்டிருக்கின்றன. மேலும் சிம்ஹவர்மனின் ஆறாம் ஆட்சியாண்டில் தமிழ் எழுத்தில் எழுதப்பெற்ற செப்பேடு ஒன்று நாகப்பட்டினம் மாவட்டம், பள்ளன்கோவிலிலிருந்து கிடைத்திருக்கிறது.

ஆதலால் இருபத்தொன்பதாவது ஆட்சியாண்டில் பொறிக்கப் பட்டுள்ள இவ்வகரம்சேரிக் கல்வெட்டும் சிம்மவர்மனைச் சார்ந்ததே என்று கொள்வதில் தவறேதுமில்லை. இதன் காலம், கி.பி. 6-ஆம் நூற்றாண்டாகும்.

இவ்வகரம்சேரி நடுகல்லில் காணப்பெறும் எழுத்துகள் வட்டெழுத்தும் தமிழ் எழுத்தும் கலந்ததாகக் காணப்பெறுகின்றன. தொன்மைத் தமிழ் எழுத்திலிருந்து வட்டெழுத்தாகவும், தமிழ் எழுத்தாகவும் மாறும் எழுத்து வளர்ச்சியைக் காட்டுவதாக உள்ளன. இச்சிம்மவர்மன் காலத்தில் வட்டெழுத்தும், தமிழ் எழுத்தும் ஒருசேரப் பொதுமக்களால் தங்களது விருப்பத்துக்கேற்பப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது என்பது புலனாகிறது.

இந்நடுகல் கல்வெட்டின் மிக முக்கிய கூறு, மன்னனின் ஆட்சி ஆண்டோடு, மாதம் (ஆடி), நட்சத்திரம் (புணர்பூசம்), ஆகியவை குறிப்பிடப் பட்டிருப்பதாகும். பல்லவர் கால நடுகற்களில் மன்னனின் ஆட்சியாண்டு மட்டும் குறிக்கப் பெற்றவைதான் இதுவரை தெரியவந்துள்ளன. இந்நடுகல்லில்தான் முதன் முதலில் மாதம் மற்றும் நட்சத்திரம் குறிக்கப் பெற்றிருக்கிறது.

இந்நடுகல் மூலம் வரலாற்றார்வலர்களுக்கு இரு முக்கியச் செய்திகள் தெரிய வந்துள்ளன.

ஒன்று சிம்மவர்மப் பல்லவன் 29 ஆண்டுகள் ஆட்சி புரிந்திருப்பது; மற்றொன்று வட்டெழுத்தும், தமிழ் எழுத்தும் இம்மன்னன் காலத்தில் அரசு ஆட்சி எழுத்துகளாக அங்கீகாரம் பெற்றிருந்திருப்பது ஆகியவையாகும்.

இந்நடுகல்லில், கல்வெட்டுக்குக் கீழே 'மன்னன் ஒருவன்' யானை மீதமர்ந்து போரை வழிநடத்துவது போன்றும், அவனுக்குப் பின்னால்

அமர்ந்திருக்கும் ஒருவன் அம்மன்னனுக்குக் குடைபிடித்து வெப்பத்திலிருந்து மன்னனைக் காப்பது போன்றும் புடைப்புச் சிற்பம் செதுக்கப்பட்டு காணப்படுகிறது. இம்மன்னன் கங்கமன்னனாக இருக்கலாம். கல்வெட்டில் 'உடையார்' என்று குறிக்கப்படுவது இக்கங்கமன்னனைச் சுட்டுவதாக இருக்கலாம் நடுகல்லில் மன்னனின் உருவம் காணப்பெறுவதும் இதுவே முதலாவதாகும்.

ஆதலால், இந்நடுகல் தமிழ்நாடு வரலாற்றில் ஒரு முக்கியத் தடயம் என்று கூறலாம். இக்கல்வெட்டு பற்றி எமக்குச் சேதி தந்த மற்றும் படியெடுத்து உதவிய நண்பர்கள் அனைவருக்கும் எம் நெஞ்சார்ந்த நன்றி உரித்தாகுக.

**நடன.காசிநாதன்,**
நன்றி : தமிழ்ஓசை, நாள் 10.05.09, சென்னை.

## 61 : 2 சங்ககாலப் பாண்டியர் காசு

கிடைத்த இடம் மதுரை. கி.மு.இரண்டாம் அல்லது முதலாம் நூற்றாண்டு. முன்பக்கம் - வாய் பிளந்த பெரிய மீனின் (சுறா) உருவம் வலது பக்கம் நோக்கியவாறு உள்ளது. மீனின் கண்ணும் கூரிய பற்களும் தெளிவாகக் காட்டப்பட்டுள்ளன. மீனின் உடல்பகுதியும், வாலும் வளைந்த நிலையில் சித்தரிக்கப்பட்டுள்ளன. காசின் கீழ் மற்றும் மேல் விளிம்புகளை ஒட்டி சிறிய மீன் உருவங்கள் வரிசையாகக் காட்டப்பட்டுள்ளன. பின்பக்கம் - மேல் நோக்கியவாறு உள்ள மீனின் கோட்டுருவம் சித்தரிக்கப்பட்டுள்ளது. காசின் எடை : 1.050 கிராம், உலோகம் : செம்பு, அளவு : 1 செ.மீ. சதுரம்.

**சு.கண்ணன்**, சிதம்பரம்
**ஜெ.ஆர்.சிவராமகிருஷ்ணன்**, சிதம்பரம்
**ப.கலைச்செல்வன்**, சிதம்பரம்

## 61 : 3 : 1 சோழமண்டலத்தில் கிடைத்த சுடுமண் தலைகள்

தஞ்சை மாவட்டத்தில் நாணயங்கள் சேகரிப்புக்காகக் களப்பணிக்குச் செல்லும் போது பல சுடுமண் தலைகள் கிடைத்தன. இந்த பொம்மைகள் அனைத்தும் பல்லவர், சோழர் காசுகள் கிடைக்கும் இடங்களில் கிடைத்துள்ளன. அதனால் இந்த சுடுமண் தலைகளை மற்றும் பல்லவர், சோழர் காலத்தைச் சார்ந்தவையாகக் கருதலாம். இந்த சுடுமண் தலைகள் அரசனின் உருவங்களா அல்லது இனக்குழுவின் தலைவன் உருவங்களா என்று ஆய்வு செய்ய வேண்டியுள்ளது. இந்தப் பொம்மைகளை வழிபாட்டிற்காகவோ அல்லது விளையாட்டுப் பொருளாகவோ பயன்படுத்தி இருக்கலாம். கலை எழிலோடு இந்த பொம்மைகளைச் செய்த குயவர்களின் கலைத்திறனை அறிய முடிகிறது.



பட்டீஸ்வரம்
திருமலைராஜன் ஆறு



பட்டீஸ்வரம்
திருமலைராஜன் ஆறு



பட்டீஸ்வரம்
திருமலைராஜன் ஆறு



கும்பகோணம்
அரசலாறு



கும்பகோணம்
அரசலாறு



கும்பகோணம்
அரசலாறு



தஞ்சாவூர்
வெண்ணாறு



தஞ்சாவூர்
வெண்ணாறு



தஞ்சாவூர்
வெண்ணாறு



தஞ்சாவூர்
வெண்ணாறு



தஞ்சாவூர்
வெண்ணாறு



பட்டீஸ்வரம்
திருமலைராஜன் ஆறு



கும்பகோணம்
அரசலாறு



பட்டீஸ்வரம்
திருமலைராஜன் ஆறு



பட்டீஸ்வரம்
திருமலைராஜன் ஆறு



கும்பகோணம்
அரசலாறு

**ஆறுமுக சீதாராமன்**, தஞ்சாவூர்.

**61 : 3 : 2 சிவன் கோயில் சிற்பங்கள்**

வேலூர் மாவட்டம், காட்பாடி வட்டத்தில் கீழ்விலாச்சூர் என்னும் ஊரின் பேருந்து சாலையின் கீழ்ப்பக்கத்தில் கிழக்கு நோக்கிய ஒரு தூங்கானைமாடக் கோயில் உள்ளது. இந்தக் கோயில் பட்டிகை வரை கருங்கல்லால் கட்டப்பட்டு மேல்பகுதி செங்கற்களால் கட்டப்பட்டதாகும். கருவறை மொட்டையாக இருக்கிறது. கருவறையின் வடக்கில் ஒரு துர்க்கை கற்சிலையும் கோயிலுக்கு வடகிழக்கில் ஒரு சூரியன் கற்சிலையும் அதற்கு தெற்கில் கருவறைக்கு நேர்க்கிழக்கில் ஒரு நந்தியும் காணப்படுகின்றது. இவை யாவும் கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை ஆகும்.

**61 : 3 : 3 துர்க்கை**

கற்பலகையில் புடைப்பாகச் செதுக்கப்பட்டிருக்கிறது. இவ்வுருவம் எருமை தலையின் மீது நின்று கொண்டு இடது கீழ்க் கையால் எருமையின்

வாலைப் பிடித்து தூக்குகிறது. மேல் கைகளில் சக்கரமும் சங்கும் இருக்க வலது கீழ்க்கை பெரிய மூவிலை சூலத்தைத் தூக்கிப் பிடித்திருக்கிறது. தலையில் கிரீட மகுடம் உள்ளது. காதுகளில் பெரிய காதணிகள் தொங்குகின்றன. சிலையின் உயரம் 38"

61 : 3 : 4 சூரியன்

சூரியனைக் கற்பலகையில் புடைப்பாகச் செதுக்கியுள்ளனர். இரண்டு கைகளும் தாமரையைத் தோள் அருகில் பிடித்திருக்கின்றன. தடித்த கழுத்தணியும் இடையாடையும் காணப்படுகின்றன. பூணூலும் வயிற்றுக்கட்டும் தெளிவாக உள்ளன. சிலையின் உயரம் 38".



61 : 3 : 5 நந்தி

கோயிலுக்கு முன்பாக ஒரு நந்தி இருக்கிறது. கழுத்தில் ஒரு மணி மாலை அணி செய்கிறது. கொம்புகள் நன்கு வளரவில்லை. சிலையின் உயரம் 23"



ம.காந்தி, வேலூர்.

61 : 4 வீரக்கல்



வேலூர் மாவட்டம், வேலூர் வட்டத்தைச் சேர்ந்த விரிஞ்சிபுரம் ஊரில் கிழக்கு மேற்காகச் செல்லுகின்ற பேருந்து சாலையின் தென்புறத்தில

பூமியில் கணுக்கால் மறைய பூமியில் புதைந்துள்ளது ஒரு வீரக்கல். நன்கு சமமாக பொலியப்பட்ட கற்பலகையில் வீரனுடைய உருவம் புடைப்பாகச் செதுக்கப்பட்டிருக்கிறது. தலை முடி வட்ட கொண்டையாக அழகு செய்யப்பட்டுள்ளது. நீண்ட முகம், காதில் நான்கு கற்கள் பதித்த கம்மல் தொங்குகிறது. மீசை நீளமாக உள்ளது. மார்பில் அகலமான பதக்கம் தொங்குகிறது. கைகளில் கேயூரங்களும் காப்புகளும் காணப்படுகின்றன. இடுப்பில் துணி அழுத்தமாகப் பட்டையால் கட்டப்பட்டிருக்கிறது. வலது கை ஒரு வாளின் மீது வைத்திருக்க இடது கை ஒரு வாளை கழுத்திற்குப் பின் பக்கத்தில் குறுக்காகப் பிடித்திருக்கிறது. இடது கையில் வீரனின் தலையைப் பார்த்தவாறு ஒரு கிளி செதுக்கப்பட்டு வீரனின் அன்பை வெளிப்படுத்தியுள்ளனர். இடுப்பின் வலது பக்கத்தில் ஒரு குறுவாள் செருகப்பட்டுள்ளது. சிலையின் காலம் கி.பி.15ஆம் நூற்றாண்டு.

விரிஞ்சிபுரம் வழித்துணை நாயனார் கோயிலின் இராசகோபுரத்திற்கு வடக்கில் உள்ள தெருவில் சட்டமன்ற முன்னாள் உறுப்பினரின் வீட்டிற்கு எதிரில் ஒரு வீரக்கல் இடுப்பளவிற்குப் பூமியில் புதைந்துள்ளது. சிலை கற்பலகையில் புடைப்பாகச் செதுக்கப்பட்டு சுற்றிலும் புடைப்பாக வரி காட்டப்பட்டிருக்கிறது. வீரனின் முகம் சிதைந்திருக்கிறது. சதுரமுகம். தலை அலங்காரம் தெளிவாக இல்லை. ஒரு வாளைக் கழுத்திற்குப் பின்புறத்தில் இரண்டுக் கைகளும் பிடித்துள்ளன. சிற்ப பாணியில் இந்த சிலையை கி.பி.13 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது எனலாம். பூமிக்கு மேல் சிலையின் உயரம் 21" ஆகும்.



ம.காந்தி, வேலூர்.

## 61 : 5 திருச்சியில் புத்தர் சிலை

திருச்சியில் காஜாமலைப் பகுதியில் பெரியார் நூற்றாண்டு கல்வி வளாகத்தில் அமர்ந்த நிலையில் தியான கோலத்திலுள்ள ஒரு புத்தர் சிலை கண்டறியப்பட்டது. கல்வி வளாகத்தில் வாய்க்கால் அமைக்கும் பணியின் போது இச்சிலை கண்டுபிடிக்கப்பட்டதாகத் தெரிவித்தனர். 72 செ.மீ. உயரமுள்ள இந்தச் சிலையானது சோழ நாட்டில் காணப்படுகின்ற 65 ஆவது புத்தர் சிலையாகும். அமர்ந்த நிலையில் தியான கோலத்தில் உள்ள இச்சிலை அழகான கண்கள், புன்னகை சிந்தும் இதழ்கள், நீண்டு தொங்கிய காதுகள், தலையில் சுருள் முடி,மார்பில் மேலாடை, இடுப்பில் ஆடை ஆகியவற்றைக் கொண்டு அமைந்துள்ளது. இச்சிலை அகன்ற மார்பினையும், பரந்த தோள்களையும் கொண்டுள்ளது. சிலையின் கையில் தர்மசக்கரக் குறியும், நெற்றியில் திலகக்குறியும் உள்ளன.



பா.ஜம்புலிங்கம், தஞ்சாவூர்.

## 61 : 6 நாகப்பட்டினம் தீர்த்தங்கரர்

நாகப்பட்டினம் நகரின் வெளிப்பாளையம் பகுதியில் சமண சமய தீர்த்தங்கரரின் அமர்ந்த நிலையிலுள்ள கற்சிலை ஒன்று நாகப்பட்டினம்

வரலாற்று ஆர்வலர் குழுவினரால் அண்மையில் கண்டறியப்பட்டுள்ளது. இச்சிலை நடராஜப்பிள்ளை தோட்டத்திலிருந்து வெளிப்பாளையத்தில் நெல் விற்க வந்தவர்களால் இவ்விடத்தில் வைத்து வணங்கப்பட்டு வருகிறது. இச்சிலை நாகப்பட்டினம் நகரில் கண்டறியப்பட்ட முதல் தீர்த்தங்கரர் கற்சிலை என்பதும் குறிப்பிடத்தக்கது.



கருங்கல்லில் முன்புறம் மட்டும் புடைச்சிற்பமாக வடிக்கப்பட்டு உள்ளது. உச்சியில் அசோகமரக்கிளை அலங்காரத்தில் மூன்று மலர்ந்த பூக்களும், அதன் கீழ் முக்குடையும் இருக்க தீர்த்தங்கரரின் பின் அரைவட்ட நிருவாட்சி அலங்கார பிரபை பிம்பம் அழகாக வடிக்கப்பட்டுள்ளது.

நீண்ட முதுகு சாய்வில் மகர வேலைப்பாடுகளுடன் அரியாசனத்தில் சுருள் சுருளான முடி அலங்காரத்துடன் தீர்த்தங்கரர் அமர்ந்துள்ளார். நெற்றியில் வட்டப் பொட்டு போன்ற குறி செதுக்கப்பட்டுள்ளது. இதன் உயரம் 68 செ.மி., அகலம் 42.5 செ.மீ. சென்னை அருங்காட்சியகத்தில் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ள நாகப்பட்டினம் புத்தர் செப்பு சிலையும் இந்த நாகப்பட்டினம் தீர்த்தங்கரர் கற்சிலையும் ஏறத்தாழ ஒரே கலையம்சத்துடன் வடிக்கப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கதாகும்.

**க.இராமச்சந்திரன்**, தஞ்சாவூர்.

**61 : 7 : 1 செஞ்சிப் பகுதியில் சமணப்படுக்கை**

விழுப்புரம் மாவட்டம், செஞ்சி தாலுக்கா, நரசிங்கராயன்பேட்டை கிராமத்திற்குச் செல்லும் பாதையின் தென்மேற்காகச் செல்லும் பிரிவுச்

சாலையில் இருந்து சுமார் இரண்டு கி.மீ. தொலைவில் கோனைப்புதூர் மதுராவில் உள்ள சோமசமுத்திரம் என்ற கிராமத்தில் ஏரி உள்ளது. இந்த ஏரியின் வடக்குப்பகுதியானது செஞ்சிக்கோட்டை சந்திரகிரி மலைக் கோட்டையின் தொடர்ச்சியாக உள்ள மலைப்பகுதியாகும். இந்த இயற்கையான மலையடிவாரத்தில் இருந்து சுமார் 150 அடி உயரத்தில் மலையில் மனிதர்கள் தங்குவதற்கு ஏற்றவாறு இம்மலையில் ஒருசிறு பகுதி அமைந்துள்ளது. ஆனால் இவ்விடத்திற்குச் செல்வதற்கான படிக்கட்டுகள் இல்லை. இவ்விடத்தில்தான் புதிய சமணப்படுக்கைகள் கண்டறியப்பட்டு உள்ளது.





இவ்விடத்தில் ஆய்வு செய்ததில் ஐந்து சமணப்படுக்கைகள் பாறையின் சமதளப் பரப்பில் வடிவமைக்கப்பட்டு இருப்பது தெரியவந்தது.

இந்த ஐந்து படுக்கைகளில் நான்கு சமணப்படுக்கைகள் வரிசையாக ஒவ்வொரு படுக்கையும் 6½ அடி நீளம் × 2½ அடி அகலம் உள்ளன.

**61 : 7 : 2 கல் ஆசனப் பலகை**

இங்குள்ள பாறைப்பகுதியில் உயர்வான மற்றும் தாழ்வான இடங்களில் சமணமுனிவர்கள் அமர்ந்து தியானம் செய்வதற்காகத் தனியாக வெவ்வேறு இடங்களில் அரைவட்ட வடிவில் ஆசனப் பலகையை வடித்துள்ளமை குறிப்பிடத்தக்கது. மேற்குறிப்பிட்ட சமணப்படுக்கைகளும் ஆசனப்பலகைகளும் கி.பி. 3ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டவையாகக் கருதலாம்.

**61 : 7 : 3 பாறை ஓவியங்கள்**

இங்கு அமைந்துள்ள சமணப்படுக்கைகளுக்கு மேலே (விதானத்தில்) உள்ள பாறையின் சமதளப்பரப்பில் ஓவியக் கோடுகள், மற்றும் பல்வேறு உருவங்கள் வரையப்பட்டுள்ளன. தற்போது இவ்வோவியங்கள் காலத்தின் மாறுபாடுகளினால் தெளிவற்ற நிலையில் உள்ளன. இத்தகைய ஓவியங்கள் ஏறத்தாழ 2000 ஆண்டுகளுக்கு முன் வரைந்த ஓவியங்களாக இருக்கலாம்.

**ஆர்.மணி,** செஞ்சி.

**61 : 8 : 1 பூஞ்சேரியில் தொன்மைச் சான்றுகள்**

காஞ்சிபுரத்திற்கு அருகிலுள்ள பூஞ்சேரியில் களஆய்வு செய்த போது இரும்புக்கால பானையோடுகள் கண்டறியப்பட்டன. கல்வட்டம், முதுமக்கள் தாழிகள், சார்கோபேகஸ் (ஈமத்தாழி) ஆகியவை இப்பகுதியில் இருப்பது அறியப்பட்டது. மேலும் இப்பகுதியில் வரலாற்று தொடக்க காலத்தினைச் சார்ந்த பானையோடுகளும் இடைக்காலப் பானையோடு களும் கிடைத்துள்ளன. இப்பகுதியில் அகழாய்வு மேற்கொள்வதன் மூலம் மாமல்லபுரம் பற்றிய அரிய தகவல்கள் கிடைக்க வாய்ப்புள்ளது.

**து.தயாளன்,** சென்னை

**61 : 8 : 2 திருச்சி மலைக்கோட்டைப் பாறைச்சிற்பம்**

மலைக்கோட்டை குன்றின் வடமேற்கு பகுதியில் புடைப்புச் சிற்பமாகச் செதுக்கப்பட்ட ஒரு உருவம் காணப்படுகிறது. பாறையில் உள்ள மாடத்தில் வச்சிரபரியங்காசனத்தில் அமர்ந்த நிலையில் இது காணப்படுகிறது. இரு கரங்களின் உள்ளங்கை பகுதியை ஒன்றின் மேல் ஒன்றாகப் பாதத்தின் மீது வைத்து தியானநிலையில் இவ்வுருவம் விளங்குகிறது. மழித்த தலையுடன் குண்டலங்களுடன் தொங்கும் நீள் செவியுடன் காட்சியளிக்கிறது.

புத்தரைப்போன்று மார்பிலிருந்து இடதுதோள்மீது செல்லும் ஆடைக்கட்டு இவ்வுருவத்தில் காணப்படுகிறது. இவ்வுருவத்தின் தலையில் புத்தரைப் போன்று ஞானமுடிப்பு இல்லை. இவ்வுருவத்தைச் சூழ்ந்து

பக்கவாட்டில் இரண்டும் கீழே இரண்டும் ஆக நான்கு பக்தர்களின் உருவங்கள் காணப்படுகின்றன. இவ்வுருவம் யாரென்று அடையாளங் காண்பதில் ஐயப்பாடுகள் உள்ளன. அதுவரை, இந்த உருவத்தைப் புத்தராகவோ அல்லது காளாமுக சைவசமயக் குரவராகவோ கருத வாய்ப்புள்ளது. இவ்வுருவத்தின் காலத்தை கி.பி. 7-8ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகக் கருதலாம்.

**து.தயாளன்**, சென்னை.

## 61 : 9 கீழ்அம்பியில் தொல்லியல் தடயங்கள்

காஞ்சிபுரம் மாவட்டம், காஞ்சிபுரம் வட்டம், காஞ்சிபுரத்திலிருந்து வேலூர் செல்லும் சாலையில் சுமார் 8 கி.மீ. தூரத்தில் கீழ் அம்பி என்னும் ஊர் அமைந்துள்ளது. இவ்வூரில் காணப்படும் விஜயநகரப் பேரரசர் கிருஷ்ணதேவ மகாராயர் கல்வெட்டொன்றில் (கி.பி.1514) இவ்வூர் தூலி அம்பி எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இங்குள்ள அம்பிகவனமுடையார் கோயிலுக்கு திருவிழா எடுக்கவும் கோயில் திருப்பணிகளுக்கும் இவ்வூரையே தானமாக அளித்தது பற்றி சான்று பகர்கின்றது. (ARE/08/1923). இவ்வூருக்கு வடபுறத்தில் "மடக்கேரி" என்று அவ்வூர் மக்களால் அழைக்கப்பெறும் பெரிய ஏரி ஒன்று அமைந்திருக்கிறது. அவ்வேரியின் தென்கரையோரம் தற்சமயம் சென்னை-பெங்களூரு தேசிய நெடுஞ்சாலை (புறவழிச்சாலை) அமைக்கப்பட்டிருக்கிறது. அச்சாலையில்தான் காஞ்சிபுரம்-வேலூர் சாலை இணைகின்றது. இவ்விருசாலைகளும் இணையும் இடத்தில் சுமார் 10 ஏக்கர் பரப்பளவில் நெல்பயிர் விவசாயம் செய்யப்பட்டுள்ள நிலப்பரப்பில் பூமியின் மேற்பரப்பிலும் பூமிக்கடியில் சுமார் 3 அடி ஆழத்திலும் நன்கு சுடப்பட்டு, பல வண்ணங்கள் பூச்சப்பட்ட பல விதமான மட்பாண்ட ஓடுகளும், கட்டுமானங்களுக்குப் பயன்படுத்தப்பட்ட பல அளவுகளைக் கொண்ட செங்கற்களும் கிடைக்கின்றன. தட்டு, கிண்ணம், வட்டில் போன்ற பாத்திரங்களின் ஓடுகளும் இங்கு அதிக அளவில் கிடைக்கின்றன. அவற்றில் பல ஓடுகள் புதுச்சேரியின் அரிக்கமேட்டில் கிடைத்துள்ள மட்கல ஓடுகளை நினைவுபடுத்துவதாக உள்ளன. ரிலையன்ஸ் போன்ற தொலைத்தொடர்பு நிறுவனங்கள் தொலைத் தொடர்பு சாதனங்கள் பொருத்திய உலோக கோபுரங்கள் அமைக்க குழிதோண்டியபோது இவ்வரிய தொல்லியல் சான்றுகள் பூமியின் மேற்பரப்பில் மின்னத் தொடங்கின. இதுவரை இப்பகுதியை யாரும் ஆய்வு செய்து அறிக்கை ஏதும் வெளியிடவில்லை.

**பெ.லெனின்**, புதுச்சேரி.

## 61 : 10 : 1 அளவுகோல்கள்

விழுப்புரம் மாவட்டம், விழுப்புரம் வட்டம் ஆணாங்கூரிலுள்ள இவ்வூர் பெருமாள் கோயிலின் வடக்குச் சுற்று சுவரின் வெளிப்புறச் சுவரில் கி.பி. 12ஆம் நூற்றாண்டு எழுத்தமைதியில் அளவுகோலின் பெயர்

பொறிக்கப்பட்டுள்ளது. 'மேற்கு முதல் கண்டகிரகத்து' என்று நீண்ட கோடிட்ட அளவுகோலின் நடுவில் வாசகம் பொறிக்கப்பட்டுள்ளது. 31¼ அடி நீளத்தில் இவ்வளவுகோல் உள்ளது.

### 61 : 10 : 2 பூப்பலகை

காவேரிப்பாக்கம் பெருமாள் கோயிலிலுள்ள கற்பலகையில் (பூக்கட்டும் கற்பலகை) அதனைச் செய்வித்தவரின் பெயர் சோழர்கால எழுத்தமைதியில் "ஸ்வஸ்திஸ்ரீ சிற்றிடமுடையான் திருநீலகண்டன் அருமொழிதேவன்" என்று பொறிக்கப்பட்டுள்ளது.

சி.வீரராகவன், மங்கைராகவன், விழுப்புரம்

### 61 : 11 பல்லவர்காலச் சண்டிகேசுவரர் சிற்பம்

வலக்கரத்தில் மழுவுடன் சுகாசனத்தில் கம்பீரமாக அமர்ந்த நிலையில் விளங்கும் சண்டிகேசுவரர் சிற்பம் வில்லியனூரில் உள்ளது. இவ்வுருவம் அழகிய தலைப்பாகையும் தடித்த புரிநூலும் அணிந்து பல்லவர் சிற்பக்கலைக்குச் சிறந்த சான்றாய் விளங்குகிறது.



ந.வேங்கடேசன், வில்லியனூர்.

61 : 12 : 1 நாமக்கல் மாவட்டத்தில் தொல்மரப் படிவுகள்

பல ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன் தோன்றி அழிந்து போன உயிரினங்கள் மற்றும் தாவரயினங்கள் பூமியில் புதையுண்டு வேதியியல் மாற்றங்களின் காரணமாக கற்களாக மாறியுள்ளன. இவைகள் பார்ப்பதற்கு அந்தந்த பொருட்களின் தோற்றத்தை ஒத்து காணப்படுகின்றன. விலங்கின தொல்படிவுகள் அதிக அளவில் கிடைப்பதுபோல் தாவர வகையைச் சேர்ந்த தொல்படிகள் அதிகம் கிடைப்பதில்லை. இருப்பினும், சில இடங்களில் ஆய்வுகள் மேற்கொண்டபோது படிவமாக மாறிய தாவரங்களின் பகுதிகள் குறிப்பாக மரங்களின் படிவுகள் கண்டுபிடிக்கப் பட்டுள்ளன. தமிழகத்தில் அரியலூர், பெரம்பலூர், காஞ்சிபுரம், விழுப்புரம், கடலூர், வேலூர் போன்ற மாவட்டங்களில் தொல் மரப்படிவுகள் பல இடங்களில் ஏற்கெனவே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

வேலூர் மாவட்டத்தில் அரக்கோணம் வட்டத்திலுள்ள கீழ் வெண்பாக்கம், நெடும்புலி, குடியாத்தம் வட்டத்திலுள்ள மோடிக்குப்பம், காஞ்சிபுரம் மாவட்டம் திருப்பெரும்புதூர் வட்டத்திலுள்ள இருங்காட்டுக் கோட்டை, கண்ணன்தாங்கல் மற்றும் சிவன்கூடல் போன்ற ஊர்களிலிருந்து பல தொல் மரப்படிவுகள் இவ்வாய்வாளரால் கண்டறியப்பட்டுள்ளன.



நாமக்கல் மாவட்டத்தின் தலைநகரான நாமக்கல்லுக்கு தெற்கே சுமார் மூன்று கிலோ மீட்டர் தொலைவில் நாமக்கல் மாவட்ட வன அலுவலர்

அலுவலகத்திற்கு அருகே சன்னியாசி கரடு என்ற மலை அமைந்துள்ளது. இம்மலையின் கிழக்கு அடிவாரத்தில் ஏராளமான கூழாங்கற்கள் காணப்படுகின்றன. இக்கூழாங்கற்கள் மோகனூர் அருகே உள்ள காவிரி ஆற்றிலிருந்து எடுத்து வரப்பட்ட மணலுடன் கலந்து வந்தவை என இங்குள்ள மக்களால் கூறப்படுகிறது. நாமக்கல் மாவட்ட வன அலுவலர் அலுவலத்திற்கும் டிரினிட்டி கல்லூரிக்கும் இடைப்பட்ட சன்னியாசி கரடு பகுதியில் கள ஆய்வு மேற்கொள்ளப்பட்ட போது கூழாங்கற்களிடையே இருந்து மூன்று தொல்மரப்படிவுகள் (wood fossils) கண்டெடுக்கப்பட்டன. அவற்றில் இரண்டு தொல் மரப்படிவுகள் பெரிய அளவில் உள்ளன. ஒன்று 12 செ.மீ. நீளமும், மற்றொன்று 11 செ.மீ. நீளமும் கொண்டுள்ளன. சிறிய அளவிலான தொல்மரப்படிவம் 4 செ.மீ நீளமும் 3½ செ.மீ. அகலமும் கொண்டுள்ளது. தமிழகத்தின் கிழக்குப்பகுதி மட்டுமின்றி மேற்குப் பகுதியிலும் தொல்மரப்படிவுகள் உள்ளன என்பதை மேற்காணும் புதிய கண்டுபிடிப்பின் மூலம் அறிய முடிகிறது.

**கி.குமார், சென்னை**

**61 : 13 : 1 காவனூர் புத்த சமயச் சான்றுகள்**

வேலூர் மாவட்டம், காட்பாடி வட்டத்தில் வேலூருக்கு மேற்கே சுமார் 20 கிலோ மீட்டர் தொலைவில் காவனூர் என்றும், மேல்காவனூர் என்றும் அழைக்கப்படும் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த ஊர் அமைந்துள்ளது. இவ்வூர், இரும்பு காலம் மற்றும் வரலாற்று ஆரம்பகாலம் முதல் தொடர்ந்து மக்கள் வசித்து வரும் பகுதியாகும். இவ்வூரில் சில புத்த சமயச் சான்றுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

அக்காலத்தில் புத்தசமயம் தழைத்தோங்கியிருந்த காஞ்சிபுரம் மாநகருக்கு மேற்கே அமைந்துள்ள வேலூர் மாவட்டத்திலும் புத்தசமயம் பரவியிருந்தமையை அம்மாவட்டத்தின் சில இடங்களிலிருந்து கிடைத்த புத்தசமயச் சான்றுகளின் மூலம் அறியலாம். அரக்கோணம் வட்டத்தில் திருமால்பூர் ரயில் நிலையத்திற்கு அருகே அமைந்துள்ள பள்ளூரில் கி.பி. 9 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த மூன்று புத்தர் சிலைகள் காணப்படுகின்றன. மேலும், புத்தமேடு என்றழைக்கப்படும் பழங்கால வசிப்பிடப் பகுதியும் இவ்வூரில் உள்ளது குறிப்பிடத்தக்கதாகும். வாலாஜாப்பேட்டை நகரத்திற்கு தெற்கே ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ள திருமலைச் சேரியில் புத்தசமயத்தைச் சேர்ந்த தேரர்கள் வாழ்ந்ததாகவும் வரலாற்று குறிப்புகள் உள்ளன.

காவனூரின் தென்மேற்குப் பகுதியிலுள்ள ஒரு சிறிய பிள்ளையார் கோயிலுக்கு முன்பாக ஒரு புத்தர்சிலை காணப்படுகிறது. புத்தரின் பின்புறமுள்ள பிரபாவளியின் வலது பக்கம் மிகவும் சேதமடைந்துள்ளது. 115 செ.மீ. உயரமுள்ள இப்புத்தரின் கரங்கள் யோக முத்திரை யில் காணப்படுகின்றன. அவரின் இடதுபுற தோள்பட்டை வழியாக 'சங்காதி' எனப்படும் ஆடை அவரின் பாதி மேல் உடலை குறுக்காக மறைத்துள்ளது.

புத்தரின் தலைமுடியானது சுருள்சுருளாக காட்டப்பட்டுள்ளது. தலையின் நடுப்பகுதியில் தெய்வீக ஞானத்தைக் குறிக்கும் 'சுவாலை' எனப்படும் நெருப்பு கொழுந்து போன்ற அமைப்பும் காணப்படுகின்றன. காதுகள் நீண்டதாக வடிக்கப்பட்டுள்ளன. சிற்பக்கலை மற்றும் வடிவமைப்பை ஒப்புநோக்குகையில் இச்சிலையானது முற்காலச் சோழர்களின் காலத்தை, அதாவது கி.பி. 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாக இருக்கலாம் எனக் கருதலாம்.



### 61 : 13 : 2 புத்தர் புடைப்புச் சிற்பம்

காவனூரின் வடகிழக்கு பகுதியில் அமைந்துள்ள கைலாசநாதர் கோயிலின் வடக்கில் உள்ள காவினாட்சம்மன் கோயிலின் சுற்றுச் சுவரைக் கட்டுவதற்காக அக்கோயிலின் முன்பகுதியில் பள்ளம் தோண்டியபோது ஒரு முக்கூடுசாலைப் பகுதி ஒன்று வெளிப்பட்டது. அம்முக்கூடுசாலையில் புத்தரின் சிற்பம் புடைப்புச் சிற்பமாகக் காணப்படுகிறது. 21 செண்டிமீட்டர் உயரமும் 20 செண்டிமீட்டர் அகலமும் கொண்டுள்ள இப்புடைப்புச் சிற்பத்திலுள்ள புத்தர் "யோக முத்திரையில்" காணப்படுகிறார். இச்சிற்பத்தின் முகம் சிதைந்து தெளிவற்று காணப்படுகிறது. காதுகள் இரண்டும் நீண்டதாக வடிக்கப்பட்டுள்ளன. புத்தரின் இடதுபுற தோள்பட்டையிலிருந்து 'சங்காதி' எனப்படும் ஆடை அவருடைய பாதி உடலை மறைத்தவாறு காணப்படுகிறது. புத்தரின் தலை உச்சியில்

ஞானத்தைக் குறிக்கும் தீச்சிவாலை போன்ற அமைப்பும் காணப்படுகிறது. இச்சிற்பமும் கி.பி. 9-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்ததாகும்.

மேலும், பிள்ளையார் கோயிலின் எதிரே புத்தர் சிலைக்கு அருகே சுமார் 5 அடி நீளமும் 2 அடி அகலமும் கொண்ட ஒரு பெரிய கற்பலகை கீழே தரையில் பரப்பிவைக்கப்பட்டுள்ளது. இப்பலகைக் கல்லில் அபய முத்திரையை குறிக்கக் கூடிய வலதுகையின் சிற்பம் மிக அழகாக செதுக்கப்பட்டுள்ளது. இக்கைச்சிற்பம் புத்த சமயக் குறியீடாக இருக்கலாம் எனக் கருதலாம். ஐந்து விரல்களைக் கொண்டு உள்ளங்கையும் அதற்கு கீழே சிறியமேடை போன்ற அமைப்பும் அழகாக செதுக்கப்பட்டுள்ளன. அபய முத்திரையில் உள்ள இக்கைச்சிற்பமானது புத்தர் கோயிலில் புத்தர் சிலைக்கு அருகில் வைத்து வழிபடப்பட்ட புத்தசமயக் குறியீடாக இருக்கலாம்.



### 61 : 13 : 3 புத்தர் கோயில்

புத்தர் சிலையும், அபய முத்திரையில் உள்ள கைச்சிற்பமும் காணப்படும் இடத்திற்கருகே உள்ள பிள்ளையார் கோயில் முன்னர் புத்தர் கோயிலாக இருந்திருக்கலாம். புத்தர் கோயில்கள் பல பிற்காலத்தில் விநாயகர் (பிள்ளையார்) கோயில்களாக்கப்பட்டுள்ளன. அதேபோல், காவனூரில் தற்போது புத்தர் சிலை இருக்கும் இடத்திற்கருகே அமைந்துள்ள பிள்ளையார் கோயிலும் முன்னர் புத்தர் கோயிலாக இருந்திருக்கலாம். பிள்ளையார் கோயிலிலுள்ள தூண்கள் மிகவும் பழமைவாய்ந்ததாகக் காணப்படுகின்றன. பிள்ளையார் கோயிலுக்கு அருகே உள்ள மேடையில் பலகல்வெட்டுகள் துண்டுதுண்டாக உடைக்கப்பட்டு தரையில் புதைக்கப் பட்டுள்ளன. இவையனைத்தும் புத்தர் கோயிலிலிருந்த கல்வெட்டுகளாக இருக்கலாம். மேலும், காவினாட்சம்மன் கோயில் மதிற்சுவரில் பொருத்தப்பட்டுள்ள புத்தரின் புடைப்புச் சிற்பமுள்ள கூடு சாலையானது புத்தர் கோயிலின் ஒரு பாகமாக இருக்கலாம்.



கி.குமார், சென்னை.

## 61 : 14 : 1 சித்தன்னவாயில் ஓவியத்தில் கீறல் எழுத்துகள்

சித்தன்னவாயில் குடைவரையின் உள்ளே விதானத்திலும் கூரைப் பகுதிகளிலும் தூண்களிலும் உள்ள பாண்டியர் கால ஓவியங்கள் புகழ் பெற்றவை. இவ்வோவியங்களுக்கும் முற்பட்ட ஓவியங்களின் சுவடுகள் இவ்வோவியத்தின் அடிப்பகுதியில் இருந்துள்ளன. இதன் எச்சங்கள் ஆங்காங்கே காணப்படுகின்றன. தஞ்சாவூர் சோழர் ஓவியங்கள் மீது நாயக்கர் கால ஓவியங்கள் தீட்டப்பட்டது போல் சித்தன்னவாயிலில் பாண்டியர் காலத்திலும் ஏற்கனவே இருந்த ஓவியங்கள் மீது சுண்ணச் சாந்து பூசி ஓவியங்களைத் தீட்டியுள்ளமையை அறிய முடிகிறது. மேலும் 17 ஆம் நூற்றாண்டில் காவி வண்ணத்தில் ஆங்காங்கே இவ்வோவியங்கள் மீது மீண்டும் ஓவியம் தீட்டியுள்ளனர். இக்குடைவரையின் இடப்பக்க, முதல் தூணில் பிரமாதி வருஷம் எனத் தொடங்கும் காவி வண்ண எழுத்துகள் சில உள்ளன.

இதற்கு அடுத்த தூணில் அரசன், துறவி ஓவியங்களுக்கு இடையில் பத்தாம் நூற்றாண்டு எழுத்தமைதியில் மூன்று வரிகளில் தமிழில் கூர்மையான ஆணி கொண்டு கீறல் எழுத்துக்களைக் கீறியுள்ளனர். இவ்வோவியங்களைப் பார்வையிட வந்தவர்களோ அல்லது பத்தாம் நூற்றாண்டில் இவ்வோவியங் களைச் செப்பம் செய்ய வந்த ஓவியனோ தனது பெயரை ஆர்வ மிகுதியால் இவ்வோவியங்கள் மீது கீறி இருக்கலாம். இதில் கச்சமங்கலம் உடையான் என்ற பட்டப் பெயர் கீறப்பட்டுள்ளது.

1. கச்சம -
2. ங்கலம்
3. உடையான்



சு.இராஜவேலு, சென்னை

## 61 : 14 : 2 ஸ்ரீவஸ்தம், ஜேஸ்டா புடைப்புச் சிற்பத் தொகுதி

ஸ்ரீ வஸ்தம், விநாயகர், சிவலிங்கம், மகேஸ்வரி, மூதேவி (ஜேஸ்டா) மாந்தன், மாந்தி, விநாயகர், நரசிம்மர் புடைப்புச்சிற்பத் தொகுதி செவ்வகக் கற்பலகைகள் ஏழு திருத்தணி அருகில் உள்ள வேலஞ்சேரி பல்லவர் கால ஏழு கன்னியர் கோவில் முன்பு உள்ள மரத்தடியின் கீழ் கண்டுபிடிக்கப் பட்டன. இதுபோன்ற சிற்பத் தொகுதிப் பலகைக் கற்கள் உத்தரமேரூர், மணிமங்கலம், தென்னேரி, மதுராந்தகம், ஆகிய ஊர்களிலும் கிடைத்து உள்ளன. சோளிங்கபுரம் அருகில் வீராநத்தம் ஊரிலும் ஊர் தேவதையாக இச்சிற்பத் தொகுதிக் கல் கருவறையில் வைத்து இன்றளவும் வழிபடப் படுகிறது. இச்சிற்பத் தொகுதி நேர்த்திப் படையலாக செய்தும் கோவிலில் வைக்கப்பட்டிருக்கலாம். வேலஞ்சேரியில் ஒரே இடத்தில் ஏழு சிற்பத் தொகுதிக் கற்கள் கிடைத்துள்ளமை இதனை உறுதி செய்கிறது.



61 : 15 அறுபத்து மூவர் குருபூசை மடப் பரிகலன்

மதுரை மீனாட்சியம்மன் கோயில் வடக்கு கோபுரம், கல்யாண மண்டபம், கம்பத்தடி மண்டபம் ஆகிய திருப்பணிகளைச் செய்வதர்கள் சிவகங்கை மாவட்டம் அமராவதி புதுரைச் சேர்ந்த 'வயிநாகரம்' குடும்பத்தைச் சேர்ந்த நகரத்தார்கள் ஆவர். மதுரை மற்றும் திருப்பரங்குன்றம் கோயில்களில் நூற்றுக்கும் மேற்பட்ட அறக்கட்டளைகளை நிறுவியவர்கள். மீனாட்சியம்மன் கோயில் அம்மன் சன்னதி வீதியில் நகரா மண்டபத்திற்குச் சற்று முன்பாக அறுபத்து மூவர் மடம் ஒன்றை அமைத்து நாயன்மார்களுக்கும், முதன் முதலில் திருப்பணி செய்த பெரியவர்களுக்கும் குருபூஜைகள் நடத்தி வருகின்றனர்.

இம்மடத்தில் உள்ள ஒரு பெரிய அளவிலான செப்புத் தண்ணீர் கலசத்தில் கீழ்வரும் எழுத்துப் பொறிப்பு காணப்படுகிறது.

உ அருபத்தி மூவர் குருபூசை. சேர் 65 + 1/2 + 1/8

சேர் என்பது ஆங்கிலேயர் காலத்தில் வழக்கிலிருந்த ஒரு எடையளவு. ஐந்து சேர் ஒரு வீசைக்குச் சமமாகும். ஒரு வீசை சுமார் 1450 கிராம் ஆகும். எனவே இதன் எடை ஏறத்தாழ 20 கிலோ என்று கருதலாம்.





கு.இராசகோபால், சென்னை

## 61 : 16 அனுராதபுரம் வாயிற்காவலர் கல்வெட்டு

இலங்கை அனுராதபுரத்தில் உள்ள ருவன்வாலிசாயா (Ruwanvalisaya) வளாகத்தில் வாயிற் காவலர் சிற்பங்களின் கீழ் இரண்டு கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டு பேராசிரியர் சி.பத்மநாதன் தனது இலங்கைத் தமிழ்ச் சாசனங்கள் நூலில் படம், வாசகம் மற்றும் விளக்கக் குறிப்புடன் வெளியிட்டுள்ளார். தற்போது அவ்விரு கல்வெட்டுகள் அவரால் மீள் வாசிப்புச் செய்யப்பட்டுள்ளன. அவற்றின் பாடம் பின்வருமாறு :

அ) 1. அரக்கன் சீலன்

2. குடில்

ஆ) 1. அரக்கன் சீலன்

2. ஏற்றியது

இவ்விரு கல்வெட்டுகளும் அனுராதபுரம் அபயகிரி வளாகத்தில் அறியப்பட்ட தொன்மையான கல்வெட்டிற்குச் சற்று பிற்பட்டவை. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. திருவெள்ளறை, செந்தலைக் கல்வெட்டுகளைப் போல மெய்யெழுத்துக்கள் புள்ளி பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். அரக்கன் என்பது இலங்கைத் தொல்குடியினர் பெயராகும். அவ்வழிவந்த சீலன் என்பவன் ஒரு குடிலை (கோயில்) ஏற்படுத்திச் சிற்பங்களை அமைத்துள்ளான் என்று தெரிகிறது.



சு.இராசகோபால், சென்னை

## 61 : 17 புதுக்கோட்டைப் பகுதியில் ஐயனார் சிற்பங்கள்

புதுக்கோட்டை மாவட்டம், குளத்தூர் வட்டம் சித்துப்பட்டி, சத்தியமங்கலம், இலுப்பூர் வட்டம் சித்தன்னவாசலுக்கு அருகிலுள்ள சிறியயேந்தல் ஆகிய இடங்களில் தனது துணைவுடன் கூடிய கி.பி.9-10 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பழமையான ஐயனார் சிற்பங்கள் உள்ளன. இவை உட்குடிகாசனத்தில் மலரையும் (சித்துப்பட்டி) செண்டையும் (சிறிய ஏந்தல்) ஏந்தி அபயமுத்திரை (சத்தியமங்கலம்) காட்டி அமர்ந்துள்ளன.





கரு.இராசேந்திரன், மேலப்பனையூர்

## 61 : 18 வீடுர் அணையில் பல்லவர்காலச் சிற்பங்கள்

விழுப்புரம் பகுதியிலுள்ள வீடுர் அணைப்பகுதியில் பழமையான பல்லவர் காலத்துக் கொற்றவை, திருமால், இலிங்கம் ஆகியவற்றின் சிற்பங்கள் உள்ளன.





எம்.டான்பாஸ்கோ, விழுப்புரம்

## 61 : 19 மாங்குளம் தமிழ்பிராமி வண்ண எழுத்துகள்

மதுரைக்கு அருகிலுள்ள மாங்குளம் சங்ககால கல்வெட்டுகள் உள்ள குகைத்தளங்களின் விதானங்களில் காவி வெண்மை போன்ற வண்ணங்களில் எழுதப்பெற்ற பிராமி எழுத்துகள் உள்ளன. இவை பிற்காலத்தில்

இப்பிராமி கல்வெட்டு குகைத்தளத்திற்கு வந்தோரால் எழுதப்பெற்றிருக்க வேண்டும். இவை குறித்து ஆய்வாளர்கள் மேலாய்வு செய்ய வேண்டும்.





துர.தயாளன், சென்னை

**61 : 20 நரிக்கல்பட்டி - திருமால் சிற்பம்**

பழனிவட்டம் நரிக்கல்பட்டிக்குக் கிழக்கே ஓடும் சண்முகநதியின் நடுவில் எட்டடி உயரமுள்ள அழகிய திருமால் சிற்பம் ஒன்றுக்கிடக்கிறது. கரங்கரங்களில் சங்கு சக்கரம் ஏந்தி நின்றகோலத்தில் இத்திருமால் சிற்பம் காட்சியளிக்கிறது. ஆற்றுமணலில் கவிழ்ந்த நிலையில் கிடக்கும் கலைச்சிறப்பு வாய்ந்த பழமையான இச்சிற்பம் பாதுகாப்பதற்குரியதாகும்.



சி.செல்வகுமார், புதுச்சேரி
எழில்ராமன், புதுச்சேரி

61 : 21 பெருமுக்கல் தீர்த்தங்கரர் சிற்பம்



திண்டிவனத்திற்கு அருகிலுள்ள பெருமுக்கல் ஊரின் உள்ள ஒரு வீட்டின் சுவரையோட்டி தீர்த்தங்கரர் சிற்பம் ஒன்று காணப்படுகிறது முக்குடைக்குக் கீழே அர்த்தபரிங்காசனத்தில் அமர்ந்த நிலையில் தீர்த்தங்கரர் காணப்படுகிறார். இவரின் இருபுறமும் பக்கத்திற்கு ஒருவராக இருவர் சாமரம் வீசுகின்றனர். இச்சிற்பம் இடைக்காலச் சோழர் காலத்தைச் சார்ந்தது.

**சி.செல்வகுமார், புதுச்சேரி**
**எழில்ராமன், புதுச்சேரி**

### 61 : 22 சோழர்கால ஓவியம்

தஞ்சைவூர் மாவட்டம் திருத்துறைப்பூண்டி வட்டத்திலுள்ள வேப்பத்தூரில் இடைக்காலச் சோழர்காலத்தினைச் சார்ந்த சிதைவுற்ற செங்கல் கட்டுமானக் கோயில் ஒன்று உள்ளது. வீற்றிருந்த பெருமாள் கோயில் என்று அழைக்கப்படும் இக்கோயிலின் கருவறை முழுவதும் சோழர் காலத்தில் தீட்டப்பட்ட வண்ணவோவியங்கள் உள்ளன. அழிவுற்று மங்கிய இவ்வோவியத்தில் சில இறைத்திருவுருவங்களைக் காணமுடிகிறது இவ்வோவியங்கள் சோழர்காலம் குறித்து ஆய்வு செய்வோர் வருகையை நாடி நிற்கிறது.



**து.தயாளன், சென்னை**

# 62. புதிய வெளியீடுகள்

நரசய்யா, **ஆலவாய்,** பழனியப்பா பிரதர்ஸ், 24, பீட்டர்ஸ் சாலை, சென்னை-600014. மார்ச்சு 2009 1/4 கிரௌன், கெட்டி அட்டை, பக். 144, படம் 8 பக்கங்கள். விலை ரூ.225.

தேவார காலம் முதல் இலக்கியங்களிலும் கல்வெட்டுகளிலும் காணப்படும் மதுரையின் மறுபெயரான 'திருவாலவாய்' என்பதையொட்டி இந்நூலுக்கு 'ஆலவாய்' என்ற பெயர் தரப்பட்டுள்ளது. மதுரை மாநகரின் வரலாற்றை எளிய நடையில் தொகுத்துத் தரும் இந்நூல். மதுரை பற்றிய புராணச் செய்திகள்; சங்ககாலச் செய்திகள்; வெளிநாட்டினர் குறிப்புகள்; தமிழ் பிராமி மற்றும் பிறகல்வெட்டுச் செய்திகள்; நாயக்கர், இஸ்லாமியர், ஐரோப்பியர் காலச் செய்திகள் என்று பல்வேறு அடிப்படைச் சான்றுகளைக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளது. ஆதாரச் செய்திகள் அடிக்குறிப்பு களாகவும், பாடப் பகுதியில் மேற்கோள்களாகவும் தரப்படுவதன் மூலம் படிப்பதற்கு ஓர் எளிமையை ஏற்படுத்தித் தருகிறது. நூலில் சொல்லப்படும் பிற்காலத் தகவல்கள் அதிகமாகவும் சுவையாகவும் உள்ளன. சுவையான செய்திகளுக்கு இஸ்லாமியர் படையெடுப்பின்போது தெய்வ உருவங்கள் 'பூப்பதனம்' செய்யப்பட்டமை; மதுரையில் ஏற்படுத்தப்பட்ட முதல் குடிநீர் திட்டம்; புதிதாக உருவாக்கப்பட்ட வெளிவீதி, சாதி அமைப்புகளுக்கு ஏலம் விடப்பட்டு குடியிருப்புகள் அமைக்கப்பட்டமை; விக்கிரமபாண்டிய பட்டர்களால் பூசைகளும், குலசேகரபாண்டிய பட்டர்களால் அலங்காரம் மற்றும் நிர்வாகமும் செய்யப்படுவது என கோயில் நிர்வாகம் பிரிக்கப்பட்டமை; இவர்களில் மயில் முட்டை நெறிப்படி முதல் வாரிசுகள், உரிமையை விட்டுக் கொடுத்தல்; இஸ்லாமிய படையெடுப்பு மற்றும் ஆங்கிலேயர் ஆதிக்கம் காரணமாக கோயில் பாழ்பட்டு குரங்குகள் நிறைந்த காடாய் இருந்தமையும், கடலையில் சாராயம் கலந்து குரங்களுக்கு ஊட்டி அவற்றைப் பிடித்து வெளியேற்றியமை ஆகியவற்றை எடுத்துக்காட்டாகச் சொல்லலாம். நூலின் இறுதியில் உள்ள இணைப்புகளில், 'மதுரை ஸ்தானிகர் வரலாறு', 'மதுரைத் தல வரலாறு' ஆகிய மூல பாடங்கள் தரப்பட்டுள்ளதும் ஒரு சிறப்பாகும். ஆசிரியர் ஏற்கனவே பல நூல்களில் தரப்பட்ட மதுரை வரலாற்றுச் செய்திகளைத் தொகுத்துத் தந்தபோதிலும் மதுரை மற்றும் அதன் சுற்றுப் பகுதிகளுக்கு நேரில் சென்று தகவல் அறிந்து நூலாக்கம் செய்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

**சு.இராசகோபால்,** சென்னை.

K.Rajan, **Ancient Irrigation Technology - Sluice Technology in Tamilnadu**, Heritage India Trust, Thanjavur, 2008, pp. 326, Price Rs.250.

களஆய்வு அடிப்படையில் பண்டைய தமிழ்நாட்டு ஏரிப் பாசன வரலாற்றையும் தொழில்நுட்பத்தையும், இலக்கியம், கல்வெட்டு போன்ற அனைத்து தரவுகளையும் திரட்டி ஆய்வு செய்து வெளியிடப்பட்ட நூல். சங்ககாலம் தொட்டு அண்மைகாலம் வரை தமிழ்நாட்டுப் பாசன வரலாற்றுச் சான்றுகள் இந்நூலில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. ஏரிகளின் கட்டமைப்பு, நிர்வாகம், நீர் பங்கீட்டு முறை, நீர்வுரிமை ஆகியவை குறித்து ஆழமாக ஆய்வு செய்து பல அரிய முடிவுகளை இந்நூல் தந்துள்ளது. பாசனச் சொற்களைக்

காலவாரியாகத் தொகுத்து ஆய்வு செய்வதன் மூலம் மதகு, மடை, குமிழி, ஆகியவை குறித்து ஐயமற்ற புரிதலை ஏற்படுத்த இந்நூல் உதவுகிறது. பண்டைய பாசனம் குறித்து தொடர்ந்து ஆய்வு செய்ய அனைத்துத் தரவுகளின் பட்டியல்கள், படங்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

**வெ.வேதாசலம்,** மதுரை.

ஆறுமுக சீதாராமன், **சங்ககால மோதிரங்கள்,** தனலட்சுமி பதிப்பகம், தஞ்சாவூர், 2008, பக். 43, விலை ரூ.100.

தங்கம், வெள்ளி போன்ற பலவகை உலோகங்களினால் செய்யப்பட்ட சங்ககால மோதிரங்கள் குறித்த இந்நூல் சங்ககால மக்களின் நாகரிகம், பண்பாடு, தொழில்நுட்பம் பற்றி அறிய உதவும். குறியீடுகள், இலச்சினைகள், தமிழ்பிராமி எழுதில் பெயர்கள் பொறித்த மோதிரங்கள் ஆகியவை புகைப்படங்களுடன் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. இவற்றை அரும்பாடுபட்டு சேகரித்து தமிழ் கூறும் நல்லுகத்திற்கு அளித்த நூலாசிரியர் பாராட்டுக்குரியவர்.

**கு.சேதுராமன்,** மதுரை.

K.Rajan, V.P.Yatheeskumar, S.Selvakumar, **Catalogue of Archaeological sites in Tamil Nadu**, 2 vols., Heritage India Trust, Thanjavur, 2009, pp. 692, Price Rs.600.

இது தமிழகத் தொல்லியல் வரலாற்றுக்குத் கிடைத்த அரியநூல். தொல்லியல் வரலாற்று ஆய்வாளர்கள் ஒவ்வொருவரின் கரத்திலும் தவழ வேண்டிய கையேடு இந்நூல். இது தமிழகத் தொல்லியல் களங்களை வரலாற்றிற்கு முற்பட்ட காலத்திலிருந்து மாவட்ட வாரியாகப் பட்டியலிட்டுத் தருகிறது. 2000க்கு மேற்பட்ட தொன்மையான ஊர்களில் கிடைத்த தொல்லியல் ஆதாரங்களை அரிய புகைப்படங்களுடன் தந்துள்ளது. இவற்றை விளக்கும் முப்பத்தொன்பது நிலவியல் படங்கள் (Maps) இந்நூலில் இடம் பெற்றிருப்பது இதன் தனிச்சிறப்பாகும். பல்லாண்டு தொல்லியலில் தோய்ந்த பல தமிழக அறிஞர்களின் கண்டுபிடிப்புகள், அனுபவங்கள் இந்நூலில் இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

**வெ.வேதாசலம்,** மதுரை.

ஆறுமுக சீதாராமன், **சங்ககால முத்திரைகள்,** தனலட்சுமி பதிப்பகம், தஞ்சாவூர், 2008, பக். 40, விலை ரூ.75.

சங்ககால வரலாற்றையும் பண்பாட்டையும் அறியவுதவும் நாணயவியலாரின் நூல். தமிழ்நாட்டில் கிடைத்த எழுத்துப் பொறித்த கல், வெள்ளி, வெண்கலம், சுடுமண் ஆகியவற்றாலான முத்திரைகள் நல்ல புகைப்படங்களுடன் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. இவற்றோடு சோழர், பாண்டியர், சேரர் முத்திரைகள், திருமறு, யானை, குதிரை, காளை முதலிய உருவங்கள் பொறித்த முத்திரைகள் உரிய புகைப்படங்களுடன் இடம் பெற்றுள்ளன. எளிய விளக்கங்களுடன் அரிய புகைப்படங்களுடன் இந்நூல் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

**சு.கண்ணன்,** மதுரை.

# கல்வெட்டறிஞர் ஐராவதம் மகாதேவனுக்கு 'பத்ம ஸ்ரீ' விருது



இவ்வாண்டு மூத்த கல்வெட்டறிஞர் ஐராவதம் மகாதேவன் அவர்களுக்கு அவரது அரிய கல்வெட்டுப் பணியைப் பாராட்டி இந்திய அரசு 'பத்ம ஸ்ரீ' விருது வழங்கிச் சிறப்பித்தது. சிந்துவெளி எழுத்துகள் பற்றியும் தமிழ்பிராமி கல்வெட்டுகள் குறித்தும் அவரது அர்பணிப்புடன் கூடிய ஆய்வுகள் வரலாற்றில் என்றும் நிலைத்து நிற்கும். அழியா புகழுடன் விளங்கும். தமிழகத் தொல்லியல் கழகத்தில் தி.நா.சுப்பிரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவு நிறுவி அதன் அங்கமாக விளங்கி வரும் ஐராவதம் மகாதேவன் அவர்களைக் கழகம் மனமாரப் பாராட்டி மகிழ்கிறது. அவரது அரும்பணிகள் தொடரவும் அவர் எல்லா நலனும் பெற்றுச் சிறக்கவும் தமிழகத் தொல்லியல் கழகம் வாழ்த்துகிறது.



# இரங்கல்

## ஜேம்ஸ் ஹைட்ஸ்மேன்
## James Heitzman

தோற்றம் : 27.10.1950 மறைவு : 15.11.2008

தமிழகத் தொல்லில் கழகத்தின் வெளிநாடு வாழ்நாள் உறுப்பினர்களில் ஒருவரான ஜேம்ஸ் ஹைட்ஸ்மேன் கலிபோர்னியா, ஸ்டான்போர்டு மருத்துவமனையில் 15.11.2008 காலமானார். தொல்லியல் கழகத்தின் ஈரோடு மற்றும் மதுரை கருத்தரங்குகளில் நேரில் வந்து கலந்து கொண்டுள்ளார்.

1981-82ல் மதுரையில் ஓராண்டு தமிழ்மொழி பயின்ற இவர் தமிழகக் கல்வெட்டுகளில் ஆர்வம் மிகக்கொண்டு கல்வெட்டுகளைப் படிக்கவும் பொருளறியவும் பழகிக் கொண்டார். மேலும் இரு ஆண்டுகள் தமிழகத்தில் தன் குடும்பத்துடன் தங்கியிருந்து சோழர் காலக் கல்வெட்டுகளை ஆய்வு செய்து பென்சில்வேனியா பல்கலைக் கழகத்தில் 1985ஆம் ஆண்டு முனைவர் பட்டம் பெற்றார். நூலாக அச்சேறியுள்ள இவ்வாய்வேட்டில் புள்ளியியல் முறைகளைக் கொண்டு ஐந்து தேர்ந்தெடுத்த வட்டாரக் கல்வெட்டுகளை ஆய்வு செய்து சோழர் சமூகப் பொருளியல் மற்றும் அரசியல் பற்றி சில புதிய கருத்துகளை வெளிக்கொண்டு வந்துள்ளார்.

நிலக்கொடைகள் குறித்த கல்வெட்டுகளில் காணப்படும் நில எல்லைக் குறிப்புகளைக் கொண்டு திருக்கோவிலூர், வடகாடு கோயிலூர், காஞ்சிபுரம் ஆகிய சோழர்கால நில உடமை அமைப்பைப் பற்றிய நிலப்படங்கள், ஆட்பெயர் பட்டியல், விரிவாக்கம், நகரமயமாகுதல் குறித்த இவரது கட்டுரைகள் தனித்தன்மையுடையவை.

இவரது நூல்கள்; Gifts of Power (1997), The World in the Year 1000 (2004), The City in South Asia (2004), Network City (2004) முதலியன. இடைக்கால நகரங்களில் அதிக ஈடுபாடு கொண்டு உலக அளவில் பல வரலாற்று நகரங்களுக்கும் பயணம் மேற்கொண்டார். பெங்களூரில் 2007ல் 'நகரம்' என்ற ஆய்வு அமைப்பைத் தொடங்கிய அவர் அங்கு வருங்காலத்தில் நிலையாகத் தங்கி இடைக்கால நகரங்கள் பற்றிய ஆய்வை விரிவுபடுத்தத் திட்டமிட்டிருந்தார்.

தமிழகக் கல்வெட்டுச் செய்திகளை உலக அளவில் எடுத்துச் சென்று சிறப்புச் செய்த இவரது மறைவு தமிழகத் தொல்லியல் கழகத்திற்கும் தமிழக வரலாற்றுத் துறைக்கும் பேரிழப்பாகும். அவருக்குக் கழகம் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

# இரங்கல்

## பேரறிஞர் வ.அய்.சுப்பிரமணியம்

தோற்றம் : 18.02.1926 மறைவு : 29.06.2009

தமிழ்ப் பேரறிஞர் வ.அய்.சுப்பிரமணியம் தமது 82 ஆம் வயது வரை தமிழ்மொழி, பண்பாடு, வரலாறு, தொல்லியல் ஆகியவற்றிற்காக அரும்பணியாற்றியவர். தமிழகம் மட்டுமின்றி வெளிமாநிலங்களிலும், வெளிநாடுகளிலும் தமிழ்பண்பாட்டை முன்னிறுத்தி பல ஆய்வுகள் செய்தவர். ஏராளமான ஆய்வாளர்களை உருவாக்கிய பெருமை அவருக்கு உண்டு. அவரது வாழ்நாளில் பல பதவிகளும் பெருமைகளும் அவரைத் தேடி வந்தன. வ.அய்.சுப்பிரமணியம் தான் அலங்கரித்த பல்கலைக்கழகப் பதவிகளில் அழியாத முத்திரை பதித்த வித்தகர். தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தராகப் பதவியேற்று அதனை ஆலமரம்போல் தழைக்கச் செய்த பெருமை அவருக்கு உண்டு. தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் துணைவேந்தராக இருந்தபோது கல்வெட்டு, தொல்லியல், கலை வரலாறு, கடலாய்வு ஆகியவற்றிற்கு முக்கியத்துவம் தந்து அத்துறைகளின் வளர்ச்சிக்கு உறுதுணை புரிந்துள்ளார். அவரது மறைவு தமிழ் கூறும் நல்லுகத்திற்குப் பேரழிப்பாகும். அவரது மறைவுக்குத் தமிழகத் தொல்லியல் கழகம் தனது ஆழ்ந்த இரங்கலைத் அவரது குடும்பத்தாருக்கும் நண்பர்களுக்கும் தெரிவித்துக் கொள்கிறது.

# இரங்கல்

தொல்லியல் ஆய்வாளர்கள்

## B.நரசிம்மையா, மாதவ் N.கட்டி

தமிழகத் தொல்லியலுக்கும் கல்வெட்டாய்வுக்கும் முறையே உறுதுணையாய் நின்ற B.நரசிம்மையா, மாதவ் N.கட்டி ஆகியோர் அண்மையில் மறைந்தனர். திரு.நரசிம்மையா தமிழகத்தின் புதிய கற்காலம், பெருங்கற்காலப் பண்பாடுகள் குறித்து உயர்தரமிக்க ஆய்வுகளை மேற்கொண்டு பல நூற்களையும் கட்டுரைகளையும் வெளியிட்ட தொல்லியல் அறிஞர். மாதவ் N.கட்டி அவர்கள் மைசூரிலுள்ள மத்திய அரசு கல்வெட்டு துறைப் பிரிவில் அலுவலராக இருந்து இயக்குநராக பதவி உயர்வு பெற்றவர் தென்னிந்திய கல்வெட்டு ஆய்வுக்கு அரும்பணியாற்றியவர்.

மேற்கண்ட இருதொல்லியல் ஆய்வாளர்களின் மறைவுக்கு தமிழகத் தொல்லியல் கழகம் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

# 64. தமிழகத் தொல்லியல் கழக 18 ஆம் ஆண்டுக் கருத்தரங்கு அறிக்கை

பா.ஜெயக்குமார், செயலர்.

தமிழகத் தொல்லியல் கழகத்தின் 18ஆம் ஆண்டு மாநாட்டுக் கருத்தரங்கம் மற்றும் 19ஆவது ஆவணம் இதழ் வெளியீட்டு விழா 2008 ஜூலை 19, 20 (சனி, ஞாயிறு) ஆகிய இரு நாட்கள் அரியலூர், இராஜாஜி நகர், பழனி திருமண மஹாலில் நடைபெற்றது.

கருத்தரங்க துவக்க விழா 19.07.2008 காலை 11.00 மணிக்கு தமிழ்த்தாய் வாழ்த்துடன் தொடங்கியது. கழகத் தலைவர் பேரா. ப.சண்முகம் தலைமையேற்க உள்ளூர்ச் செயலரும் கழகத்தின் இணைச்செயலருமான முனைவர் இல.தியாகராசன் அவர்கள் வரவேற்புரை நல்கினார்.

ஆவணம் இதழ் 19ஐ வெளியிட்டு சிறப்புரை வழங்கிய திரு.த.பிச்சாண்டி. இ.ஆ.ப. (சிறப்பு ஆணையர், தமிழக அரசு இந்துசமய அறநிலையத்துறை, சென்னை) அவர்கள் தொல்லியலாளர்கள் கள ஆய்வின்பால் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும் என்பதோடு மக்கள் கண்டு பயனடையும் வகையில் ஒவ்வொரு தொல்லியல் சிறப்பிடங்களிலும் ஒளி-ஒலி காட்சிகள் அமைக்கப்பட வேண்டும் எனவும் குறிப்பிட்டார். ஆவணம் முதல் இதழை திரு.இரா.சுடலைக்கண்ணன், இ.ஆ.ப. (மாவட்ட ஆட்சியர், அரியலூர்) அவர்கள் பெற்றுக் கொண்டு உரை நிகழ்த்துகையில் தொல்லியல் மற்றும் கல்வெட்டியலை இளைஞர்களிடையே ஊட்டுவதற்குத் தகுந்த குறும்படங்கள் வெளியிட வேண்டும் என்றார்.

பேரா.க.அண்ணாதுரை (மேனாள் தலைவர், வரலாற்றுத் துறை, அரசுக் கலைக் கல்லூரி, அரியலூர்), முனைவர் வெ.வேதாசலம் (கல்வெட்டு ஆய்வாளர், மதுரை) மற்றும் முனைவர் நா.இராசேந்திரன் (தலைவர், வரலாற்றுத்துறை, பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி) ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். கழகச் செயலரின் நன்றியுரையுடன் தொடக்கவிழா நண்பகல் 1.00 மணிக்கு நிறைவுற்றது.

1.00 மணி முதல் 1.45 மணி வரை தி.நா.சுப்பிரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 10ஆவது சொற்பொழிவினை முனைவர் எம்.டி.சம்பத் (மேனாள் இயக்குநர், இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப் பிரிவு, மைசூர்) அவர்கள் "தென்னிந்திய வணிகக் குழுக்கள் - கல்வெட்டுக்களின் அடிப்படையில் ஓர் சிறப்பு நோக்கீடு" என்ற தலைப்பிலும் 2.45 மணி முதல் 4.00 மணி வரை கோவிலூர் ஆதீன அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 7ஆவது சொற்பொழிவினை திரு.பெ.வெங்கடேசன் (தொல்லியல் கண்காணிப்பாளர், அகழாய்வுப் பிரிவு, இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறை, மைசூர்) அவர்கள் "தென்னிந்தியப் பள்ளிப்படைக் கோயில்கள் - ஓர் ஆய்வு" என்ற தலைப்பிலும் நிகழ்த்தினார்கள்.

மாலை 4.00 மணி முதல் 7.00 மணி வரை மாணவர்களுக்கான ஆய்வுக் கட்டுரைப் போட்டிக்கான அமர்வு நடைபெற்றது. பத்துக்கும் மேற்பட்ட ஆய்வு மாணவ-மாணவிகள் போட்டியில் பங்கேற்றனர். மேற்படி அமர்விற்கு பேரா. முனைவர் கு.சேதுராமன் மற்றும் முனைவர் வெ.வேதாசலம் ஆகியோர் நடுவர்களாக இருந்து பரிசுக்கு உரிய கட்டுரைகளைத் தேர்வு செய்து அறிவித்தனர். ஒவ்வொரு போட்டிக்கும் உரிய பரிசுத்தொகை ரூ.1000/-ஐ இருவர் வீதம் சமமாகப் பிரித்தளிக்கப்பட்டது. பரிசு பெற்றவர்கள் பெயர்கள் மற்றும் கட்டுரைத் தலைப்பு விவரம் பின்வருமாறு :

1. தமிழகத் தொல்லியல் கழகத்தின் பரிசு (தொகை வழங்கியவர் முனைவர் சொ.சாந்தலிங்கம்).

   அ) எஸ்.சிவா, கேரளப் பல்கலைக்கழகம், திருவனந்தபுரம்
      - கன்னியாகுமரி மாவட்டக் கல்வெட்டுகளில் காணும் குறியீடுகள்

   ஆ) எஸ்.செல்வக்குமார், மத்தியப் பல்கலைக்கழகம், புதுச்சேரி.
      - நாமக்கல் மாவட்டத் தொல்லியல் - ஓர் ஆய்வு

2. பேரா.ம.இராசசேகரதங்கமணி அவர்களின் பரிசு (பெண்களுக்கு மட்டும்)

   அ) எஸ்.கவிதா, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்
      - சிவபெருமானின் அரிய கணாரூடர் வடிவம்

   ஆ) ரா.விஜயபாரதி, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்
      - தஞ்சை வட்டாரத் தொல்லியல்

3. பேரா.முனைவர் இராசு.பவுன்துரை அவர்களின் பரிசு

   அ) வி.பி.யதீஸ்குமார், மத்தியப் பல்கலைக்கழகம், புதுச்சேரி
      - பொருந்தலாற்றுப் படுகையில் இரும்புக்கால மற்றும் வரலாற்றுக் கால வாழ்விடங்கள்

   ஆ) மோ.பிரசன்னா, மத்தியப் பல்கலைக்கழகம், புதுச்சேரி
      - திருநெல்வேலி மாவட்டத் தொல்லியல்

4. விழுப்புரம் திரு.சி.வீரராகவன் அவர்களின் ப.சின்னக்கண்ணு நினைவுப் பரிசு

   அ) த.தங்கத்துரை, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்
      - வில்லுனி ஆற்றுப் பள்ளத்தாக்கில் பெருங்கற்காலப் பண்பாடும் செம்புரான்கல் பயன்பாடும்

   ஆ) வீ.முத்துக்குமார், பிரெஞ்சு ஆய்வு நிறுவனம், புதுச்சேரி
      - சிவகங்கை மாவட்டத் தொல்லியல்

இரவு 7.30 மணி முதல் 8.45 வரை செயற்குழுக்கூட்டம் நடைபெற்றது.

20.07.2008 அன்று காலை 9.00 மணி முதல் மாலை 4.30 மணி வரை கருத்தரங்கப் பொது அமர்வு திரு.கி.ஸ்ரீதரன் (மேனாள் துணை இயக்குநர், தமிழக அரசு தொல்லியல்துறை, சென்னை) அவர்கள் தலைமையில் நடைபெற்றது. கட்டுரையாளர்கள் பெயர், தலைப்பு விவரம் பின்வருமாறு :

| வ.எண் | கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|---|
| 1. | கி.ஸ்ரீதரன் | மாங்குடி அகழாய்வுகள் |
| 2. | பி.எஸ்.ஸ்ரீராம் | தஞ்சை பெரிய கோயில் சோழர் கால ஓவியங்கள் - மீள் பார்வை. |
| 3. | வீ.செல்வகுமார் | காவிரிப் பள்ளத்தாக்கு மற்றும் புதுக்கோட்டைப் பகுதியில் புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகள் |
| 4. | ஜெ.ராஜாமுகமது | உடையார்பாளையம் |
| 5. | ஆர்.மதிவாணன் | சிந்துவெளி எழுத்துமுறை வலமா? இடமா? |
| 6. | க.கண்ணன் மற்றும் ஜே.ஆர்.சிவராம-கிருஷ்ணன் | பத்ரகோட்டை கொண்ட நாயக்கர் கல்வெட்டும் வெங்கடாம்பேட்டை மோர் தண்ணீர் பந்தல் கல்வெட்டும் |
| 7. | எஸ்.பாலசுப்பிரமணியன் | பிற மாநிலங்களில் தமிழரின் தாக்கம் |
| 8. | வில்லியனூர் நா.வேங்கடேசன் | கங்கை கொண்ட சோழபுரத்து கமல இயந்திரம் அல்லது சூரியக்கல் |
| 9. | க.மேனகா | பழையாறை பள்ளிப்படை கோயில்கள் - ஓர் ஆய்வு |
| 10. | மு.கலா | திருநறையூர் சித்தநதீசுவரர் திருக்கோயில் கல்வெட்டுகள் - ஓர் ஆய்வு |
| 11. | ச.இரவி | புலிப்பார் கிராமத்தில் புதிய பதுக்கை கண்டுபிடிப்பு |
| 12. | செந்தீநடராசன் | குமரி மாவட்டத்தின் மூன்று புதிய கல்வெட்டுகள் |
| 13. | சி.வீரராகவன் | விழுப்புரம் மாவட்டத்தில் அண்மைக் காலக் கண்டுபிடிப்புகள் |
| 14. | க.பன்னீர்செல்வம் | இருங்கோலப்பாடி நாட்டின் வரலாற்றுப் பெயராய்வு |
| 15. | ஜெ.சவுந்திரராஜன் | நாட்டார்மங்கலம் நடுகல் |
| 16. | கோ.முத்துசாமி | பொன்பரப்பி கிராமதேவதைகள் - ஓர் ஆய்வு |

| | | |
|---|---|---|
| 17. | த.ரமேஷ் | எண்ணாயிரத்தில் செஞ்சி நாயக்கர் ஓவியங்கள் கண்டுபிடிப்பு |
| 18. | க.கருப்பையா | நொச்சியம் கல்வெட்டு - ஒரு சிறப்புக் கண்ணோட்டம் |
| 19. | எம்.காயத்திரிதேவி | வரலாற்றில் திருவப்பூர் |
| 20. | டான் பாஸ்கோ | வரலாற்றில் வீடூர் |
| 21. | ரா.ரமேஷ் | புதிய நடுகற்கள் |
| 22. | பி.ரவிச்சந்திரன், எல்.தியாகராஜன் | பெரியமறை வணிகர் கல்வெட்டுகள் |
| 23. | செ.கோவிந்தராஜ் | மலையடிப்பட்டி குடைவரையும் நார்த்தாமலை கற்றளியும் - ஓர் ஒப்பீடாய்வு |
| 24. | சு.இராஜவேலு | சித்தன்னவாசல் : புதிய ஓவியம் கண்டுபிடிப்பு |
| 25. | கோ.பிச்சைபிள்ளை | வரலாற்றில் மாதங்கியூர் |

மாலை 4.30 மணி முதல் 5.30 மணிவரை நடைபெற்ற பொதுக்குழு கூட்டத்துடன் 19ஆவது மாநாட்டுக் கருத்தரங்கின் இரண்டு நாள் நிகழ்ச்சி நிறைவுற்றது.

# கட்டுரையாளர்கள்

அதியமான், ந.
தமிழ் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

ஆறுமுகசீதாராமன்
தஞ்சாவூர்.

இராசகோபால் சு.
சென்னை.

இராஜன், கா.
வரலாற்றுத்துறைத் தலைவர்
மத்தியப் பல்கலைக்கழகம், புதுச்சேரி.

இராசவேலு, சு.
துணைக் கல்வெட்டுக்
கண்காணிப்பாளர் அலுவலகம்
மத்திய அரசு தொல்லியல் துறை
சென்னை.

இராசேந்திரன், கரு.
மேலப்பனையூர் (அஞ்சல்)
புதுக்கோட்டை மாவட்டம்.

இரவீந்திரன், கோ.
புதுச்சேரி.

கண்ணன், சு.
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

கருப்பையா, க.
மத்திய அரசு கல்வெட்டுத்துறை
சென்னை.

கலைச்செல்வன், ப.,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

காந்தி, மா., வேலூர்.

காயத்திரி தேவி, எம்.
அரசு மகளிர் கலைக்கல்லூரி
புதுக்கோட்டை.

குமார், கி.,
சென்னை.

சம்பத், M.D.,
மைசூர்.

சண்முகம், க.,
தஞ்சாவூர்.

சண்முகம், ப.,
சென்னை.

சுதர்சன் துரையப்பா
தஞ்சாவூர்.

சுதாகர், பெ., தாழ்பரிகம்.

சுப்பராயலு, எ.
பிரெஞ்சு இந்திய நிறுவனம்
புதுச்சேரி.

சுவாமிநாதன், சூ.
மத்திய அரசு கல்வெட்டுத்துறை
மைசூர்.

செந்தில்குமார், தெ.
அரசு கலைக்கல்லூரி, அரியலூர்.

செந்தீ நடராஜன்
நாகர்கோவில்.

செல்வகுமார், சி.
ஆய்வாளர், வரலாற்றுத் துறை
மத்திய பல்கலைக்கழகம், புதுச்சேரி.

செல்வகுமார், வீ.
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

சிவராமகிருஷ்ணன், ஜே.ஆர்.
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

தயாளன், து.
மத்திய அரசு தொல்லியல் துறை
சென்னை.

தியாகராசன், இல.
வரலாற்றுத்துறைத் தலைவர்
அரசுக் கலைக்கல்லூரி, அரியலூர்.

திருநங்கை, வே.
ஆய்வாளர், கலை வரலாற்றுத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

திருமூர்த்தி, கோ.
மத்திய அரசு தொல்லியல் துறை
சென்னை.

நளினி, மு., திருச்சி.

பன்னீர்செல்வம், க.
கல்வெட்டாய்வாளர்
மத்திய அரசு கல்வெட்டுத்துறை
மைசூர்–5.

பரந்தாமன், வி.
புத்தாநத்தம்.

பவானி, மா.
விரிவுரையாளர்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

பாலச்சந்திரன், ஆர்.
திருத்தங்கல்.

பாபு (எ) இராமசாமி, நா.
புதுச்சேரி.

பிரசன்னா, மோ.
வரலாற்றுத்துறை
மத்தியப்பல்கலைக்கழகம், புதுச்சேரி.

மங்கையர்க்கரசி, வீ.ஆர்.
விழுப்புரம்.

மணி, எஸ்.கே.
கள்ளக்குறிச்சி.

வேங்கடேசன், பி.
மத்திய அரசு தொல்லியல் துறை.

வேங்கடேசன், ந.
வில்லியனூர்.

வெங்கடேசன், ப.
வாலாஜா பேட்டை.

முத்துக்குமார், வீ.
பிரெஞ்சு இந்திய நிறுவனம், புதுச்சேரி.

விசயவேணுகோபால், கோ.
பிரெஞ்சு இந்திய நிறுவனம், புதுச்சேரி.

வீரராகவன், சீ.
விழுப்புரம்.

வேதாசலம், வெ.
மதுரை.

யதீஸ்குமார், வி.பி.
ஆய்வாளர், வரலாற்றுத்துறை
மத்தியப் பல்கலைக்கழகம், புதுச்சேரி.

ரமேஷ், இரா.
வரலாற்றுத்துறை
மத்தியப் பல்கலைக்கழகம், புதுச்சேரி.

ஸ்ரீதரன், கி.
சென்னை.

ஸ்ரீதர், சீ.
சிதம்பரம்.

ஜெயக்குமார், பா.
தமிழ் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

# TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, THANJAVUR

## RECEIPTS AND PAYMENTS ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2009

| | | | |
|---|---|---|---|
| Opening Balance : | | Printing | 43,208.50 |
| Cash in hand | 29,305.50 | Xerox | 137.50 |
| Cash at Bank<br>Indian Bank, | 10,755.00 | Auditor Fees | 1.000.00 |
| SBI. TNJ | 11,355.12 | Salary | 3,000.00 |
| Sale of Books | 4.697.50 | Honorarium | 8,000.00 |
| Membership Fees | 38,400.00 | Postage & Courier | 3,585.00 |
| Interest | 21.923.00 | Freight | 2.420.00 |
| Donation | 8,000.00 | Bank Commission | 255.00 |
| ICHR Grand (For Vol.17) | 25,000.00 | Travelling Expenses | 1,267.00 |
| Fixed Deposit | 2.30,000.00 | Telephone | 680.00 |
| | | Tea & Coffee | 40.00 |
| | | Fixed Deposit | 3,05,000.00 |
| | | **Closing Balance** | |
| | | SBI, Thanjavur | 1,543.62 |
| | | Indian Bank, TNJ | 3,114.00 |
| | | Cash in Hand | 6,185.50 |
| | **3,79,436.12** | | **3,79,436.12** |

(Sd.) V.Ramasamy
Chartered Account
951, East Main St., Thanjavur - 1

# TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, THANJAVUR

## INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2009

| | | | |
|---|---|---|---|
| To Printing Charges | 43,208.50 | By Sale of Books | 4,697.50 |
| To Xerox | 137.50 | By Membership Fees | 38,400.00 |
| To Auditor Fees | 1.000.00 | By Interest | 21,923.00 |
| To Salary | 3.000.00 | By Donation | 8,000.00 |
| To Honorarium | 8,000.00 | By ICHR Grant | 25,000.00 |
| To Postage & Courier | 3,585.00 | | |
| To Freight | 2,420.00 | | |
| To Bank Commission | 255.00 | | |
| To Travelling Expenses | 1.267.00 | | |
| To Telephone | 680.00 | | |
| To Tea & Coffee | 40.00 | | |
| To Excess of Income Over Expenditure | 34,427.50 | | |
| | **98,020.50** | | **98,020.50** |

## BALANCE SHEET AS ON 31.03.2009

| LIABILITIES | | ASSETS | |
|---|---|---|---|
| FUND ACCOUNT :<br>Opening Balance | 3,00,115.62 | Fixed Deposit | 3,05.000.00 |
| Add<br>Excess of Income over Expenditure | 34,427.50 | Furniture<br>Steel Cup-Board | 11,000.00<br>7,700.00 |
| | | Cash at Bank :<br>SBI. TNJ<br>Indian Bank. TNJ | <br>1.543.62<br>3,114.00 |
| | | Cash in hand | 6,185.50 |
| | **3,34,543.12** | | **3,34,543.12** |

(Sd.) V.Ramasamy
Chartered Account
951, East Main St.. Thanjavur - 1

# AVANAM

## Annual issue of the Tamilnadu Archaeological Society

Avanam aims at bringing to lime light all kinds of primary sources, which unravel the history of Tamilnadu. It carries reports on the hitherto unpublished epigraphs, copper plate records, palm leaf manuscripts, paper documents, archaeological artifacts, coins, art objects and articles. It is a treasure house of original resources to be adorned in the library of each and every one, who is interested in the history of Tamilnadu.

| | |
|---|---|
| **Avanam** 1 – 8 | not available |
| **Avanam** 9 – 14 | Rs. 100/- (per copy) |
| **Avanam** 15 – 19 | Rs. 150/- (per copy) |
| **Avanam** 20 | Rs. 200/- (per copy) |

Those who wish to buy the back volumes of the **Avanam** may send a D.D. or Cheque for Rs.100/- (per copy), drawn in favour of the **Tamilnadu Archaeological Society**, to the Treasurer, C/o Department of Epigraphy and Archaeology, Tamil University, Thanjavur - 613 005. Cheques should be sent with an additional amount of Rs.100/- to meet the Bank commission.

Those who wish to become life members may send Rs.1000/- to the Treasurer.

Those who want to get their newly published books reviewed in the **Avanam** should send three copies of the book to be reviewed, along with a sum of Rs.50/- for postal expenditure, to the Secretary.

Noburu Karashima, **Varalarruppokkil Thennagacchamugam**, Rs.100/-
Kaveri Rs. 450/-
Ancient and Medievel Commercial Activities in the Indian Ocean Testimonly of Inscriptions and Ceramic - Sherds, Rs.300/-

Address to be contacted
Secretary / Treasurer
Tamil Nadu Archaeological Society,
C/o. Department of Epigraphy and Archaeology,
Tamil University, Thanjavur - 613 010.

